# சிங்கை உலகம்மை பிள்ளைத்தமிழ்



அருள்தரு சிங்கை உலகம்மை

ஆசிரியர்

சிவஞானபோதப் பேருரை அருளிய
மாதவச்சிவஞான யோகிகளின் சிறியதந்தையாகிய
**நமச்சிவாயக் கவிராயர்**

உரைவிளக்கம்

குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்
**வித்துவான். க. கதிரேசன். எம்.ஏ; பி;எட்**
பூவாளூர். 621712.
**அலைபேசி.**098651 93754

(தோரணவாயில் + நூலாசிரியர் பற்றிய குறிப்பு ஆகியவற்றை நான் எழுதி, இவ்வலைத்தளத்தில் பதிவிட்டுள்ள இவரது " உலகம்மை சந்தவிருத்தம் " நூலின் உரைப்பகுதியில் காணலாம்)

# சிங்கை உலகம்மை பிள்ளைத்தமிழ்

பாயிரம்

**விநாயகர் துதி**

தேர்கொண்ட மண்டலப் பருதியில் செக்கச்
சிவந்தமா ணிக்க வெற்பில்
செறிகிளை பச்சறுகின் மரகதக் கொடிகள்படர்
சென்னியில் பொங்கு கங்கை
நீர்கொண்ட குண்டுபடு சுனையைக் கலக்குபு
நெடும்புனல் முகந்து மீள
நீளப்ப னைக்கைக் குறுந்துளையில் ஆழியின்
நிறைக்குமழ களிறு காக்க
கூர்கொண்ட கண்டகம் உடுக்கும்ஒரு நூலிழை
குழற்கால் நறும்பொ குட்டுக்
கோகனக மாகனக சாலைப் பெருந்தவக்
குலமுனிவன் நாவ டித்த
பேர்கொண்ட மறைக்(கு)அடங் காதுநிறைதிருப்
பேர்புனைந்(து) உலக மாதின்
பேரருள் திளைப்பவளர் பிள்ளைமைப் பருவமுறை
பேசும்என் கவித ழையவே.

**குறிப்புரை** : தேர்கொண்ட= தேருடைய. மண்டலப் பருதியின்= உருண்டையான சூரியன்போல். மாணிக்க வெற்பில்= மாணிக்கமணிபோல் விளங்கும் உடம்பில். செறிகிளை பச்சறுகின்= கிளைவிட்டுப் படரும் பசிய அருகம்புல்லின். மரகதக் கொடிகள்= பசுமையான கொடிகள். சென்னியில்= தலையில். குண்டுபடு= ஆழமான. கலக்குபு= கலக்கி. நெடும்புனல்= மிக்கநீர். பனை நீளக்கை= திரண்ட நீண்ட துதிக்கை. ஆழியின் நிறைக்கும்= கடல்போல் வெளியிட்டு நிரப்பும். மழகளிறு= இளைய விநாயகர்.

கூர்கொண்ட கண்டகம்= கூர்மையான் முட்கள். உடுக்கும்= சூழ்ந்த. குழல்கால்= துளையுடைய காலாகியதண்டு. பொகுட்டு நறும் கோகனகம்= கொட்டையுடைய மணம்மிக்க தாமரைமலர். மாகனக சாலை= சிறந்த பொன்னலான அரண்மனையாக. முனிவன்= பிரமன். நாவடித்த= அருளிய. திருப்பேர் புனைந்து= தெய்வத்தன்மையுடன். உலகமாது= அருள்தரு உலகம்மை. பிள்ளைமைப் பருவம் முறைபேசும்= பிள்ளைபருவம்பற்றி முறைப்படி கூறும். கவி= பிள்ளைத்தமிழ் நூல்.

**பொழிப்புரை** : கூரியமுட்கள் சூழ்ந்ததும், ஒப்பற்ற நூலிழைகொண்டதும், துளையுடைய தண்டினைக் காலாகக்கொண்டதும், கொட்டையுடையதும் ஆகிய தாமரைமலரை, சிறந்த பொன்னாலான அரண்மனையாகக் கொண்ட பெரிய தவஅழகுடைய நான்முகன் அருளிய புகழ்வாய்ந்த வேதங்களால் கூற முடியாத தெய்வத்தன்மையுடன் கூடிய அருள்தருஉலகம்மையின் பேரருள் திளைக்குமாறு வளரும் பிள்ளைப்பருவத்தினை முறைப்படுத்திக் கூறும் பிள்ளைத்தமிழ் நூல் சிறப்புறும்பொருட்டு

தேரேறிவரும் உருண்டையான சூரியன்போல் செக்கச்சிவந்த மாணிக்க மலைஒத்தசிவந்த திருமேனியில், கிளைவிட்டுப்படரும் மரகதமணிபோன்ற பசிய அறுகம்புல்படர்ந்த தலைக்கண் உள்ள தண்ணீர்பொங்கும் கங்கையின் ஆழமான சுனையைக்கலக்கி, மிக்கநீரினைத் தனது சிறிய துளையுடைய துதிக்கையால் முகந்து, அதனைக்குறுந்துளியாக வெளியிட்டுக் கடல்போல் நிறைக்கும் இளங்களிறாகிய அருள்தரு விநாயகப்பெருமான் காப்பாராக.

**விளக்கம்** : பிள்ளைத்தமிழ் முறை பேசுதலாவது, பத்துப்பருவங்களையும் காப்பு , செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை ( வருகை ), அம்புலி, அம்மானை, நீராடல் பொன்னூசல் என்ற வரிசையில் பாடுதல்.

**இலக்கணக்குறிப்பு** : மாணிக்க வெற்பு - உருவகம். கலக்குபு = செய்புஎன்னும் வாய்பாட்டு வினையெச்சம். மழகளிறு - உரிச்சொற்றொடர். காக்க - வியங்கோள் வினைமுற்று.

2. **கலைமகள் துதி.**

வடுவகிர் பொருங்கண்இள மடமகளிர் கைக்குலை
மடல்பசுங் காந்தள் வதியும்
மரகதமணிச் சிறைப்பைங்கிள் ளைஒருகரு
மணிக்கண் தொடும்த கையிலாக்
கொடுமுனைக் கவரமுடை கொள்புல(வு) ஒழுக்குவாய்க்
கொள்ளைஇருள் அள்ளி மெழுகிக்
குயின்றனை வன்சிறைக் காகத்தின் இழிமுள்
குடம்பையுள் வதிவ(து) ஏய்க்கும்
விடுசுடர் நிலாக்கண்டும் ஆயிரம்இ தழ்ப்புதிய
வெள்ளிவெண் கதவு சாத்தா
விரைநறும் கடவுள்செ ழுந்தாம ரைக்கோயில்
மேயசொற் பனுவ லாட்டி
உடுஉதிர் நெடுங்குடுமி மலையத்த டம்சாரல்
ஒருசார்ம தில்கோ யில்வாழ்
உலகுடைய நாயகிதி ருப்பெயர் வழுத்தஇங்(கு)
ஒருசிறியன் நாஎன் வாழ்த்தே.

**குறிப்புரை** : வடுவகிர் பொரும்கண்= மாவடுவைப்பிளந்தது ஒத்த கண். கைபசுங்காந்தள் குலைமடல்= கையாகிய வளமான காந்தள்மலரின் மடல்குலையாகிய விரலில். வதியும்= வாழும். பைஞ் சிறைக்கிள்ளை= பசுமையான சிறகுடைய கிளி. ஒருகருமணிக்கண் தொடும்தகையிலா= கருமையான ஒருகண்ணை மற்றொருகண் தொடும்தகுதியில்லாத. கொடுமுனைக் கவரம் வாய்= வளைந்த கூர்மையான கருவியாகிய அலகில். முடைகொள் புலவு ஒழுக்கு= நாறும்புலால் தொங்கும். குயின்றனைய= செய்தாற் போன்ற. இழிமுள் குடம்பையுள்= இழிந்த முட்களால் கட்டப்பெற்ற கூட்டுள். வதிவது ஒக்கும்= வாழ்வது போன்றதாகும். சுடர்விடு நிலா= ஒளிரும் முழுநிலவு. புதியஆயிரம் இதழ் மேய செழும் விரைநறும் வெள்ளித்தாமரைக் கோயில் வெண்கதவு சாத்தா சொற்பனுவலாட்டி என்று கூட்டுக. விரை நறும்= மிக்கமணமுடைய. செழும்வெள்ளித் தாமரைக் கோயில் = வளமான வெண்டாமரையாகிய தன்கோயில். வெண்கதவு= வெண்மையான இதழ்களாகிய கதவு. சாத்தா= மூடாத- சொற்பனுவலாட்டி= கலைமகள். உடு உதிர் நெடுங்குடுமி= விண்மீன்களை உதிர்க்கும் உயரமான உச்சி. தடமலையச்சாரல்= பெரிய பொதிகைமலைச்சாரல். ஒருசார்= ஒருபக்கம். வழுத்த= போற்றிக் கூற. ஒருசிறியன் என்நா வாழ்த்து= மிகஅற்பனாகிய எனது நாவால் வாழ்த்துவது.

**பொழிப்புரை** : ஒளிரும் முழுநிலவைக்கண்டும்கூட, ஆயிரம் இதழ்களுடையதும், மிக்க நறுமணம் உடையதும், வெண்மையான இதழ்களுடையதும் ஆகிய வளமான வெண்டாமரைக்கோயிலின் வெண்மை இதழ்களாகிய கதவுனை மூடாத - குவியாத கலைமகள், விண்மீன்களை உதிர்க்கும் உச்சியையுடைய பொதிகைமலைச்சாரலின் ஒருபக்கத்தில், உயரமான மதில்களுடைய திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையின் திருப்பெயரை அற்பனாகிய நானும்கூறிப் போற்றுவது;

மாவடுவைப் பிளந்தாற்போன்ற கண்களுடைய இளமகளிரின் கையாகிய வளமான காந்தள் மலரின், குலையாகிய விரலில் வாழும் பசியசிறகுடைய கிளியானது; கருமையான ஒரு கண்பாவையை மற்றொருகண்பாவை தொடும்தகுதி இல்லாதும், வளைந்த கூர்மையான அலகில் நாறும்புலால் தொங்க இருப்பதும், அடர்ந்த இருளைஅள்ளி மெழுகினாற்போன்றஉடல் உடையதும் , வலிமையான சிறகுடையதும் ஆகிய காக்கையின் இழிந்த முட்களால் கட்டப்பெற்ற கூட்டில் வாழ்வது போன்றதாகும்.

**விளக்கம்** : பச்சைக்கிளி, காக்கையின் முள்கூட்டில்வாழ்வதுபோன்றது, அருள்தருஉலகம்மையை கலைமகளின் போற்றுதலுக்கிடையே நான்போற்றுவது என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : வடுவகிர் பொருங்கண், இருள் அள்ளி மெழுகிக் குயின்றனைய காகம் - உவமைத்தொடர்கள். விடுசுடர் நிலா - வினைத்தொகை. உடுஉதிர் நெடுங்குடுமி = உயர்வுநவிற்சி. இச்செய்யுள் உவமையணி.

3. **உலகம்மை துதி**

விண்ணும் கடல்புவியும் அளவிடு மடல் கமுக
வேலிகெழு மருத வைப்பின்
வெண்பால் நறும்புனல் பிரித்(து)உண்ணும் ஓர்எகினம்
விடுதுளைநு கத்தி னொடும்யாப்
புண்ணும் பசும்புரவி இரதம் கடாவுமென்(று)
ஊழ்வெயில் படச்சூ டுபட்டு
உவர்பட்ட வட்டச்சிறுகூப வெம்புனலை
உண்பது நிகர்க்கும் அமுதும்
பண்ணும் குழைத்துச் சமைத்ததீம் கனிமொழிப்
பனுவல் கிழத்தி பாடல்
பசுந்தேன் நனைக்கும் திருச்செவியி னால்பழம்
பரசமைய பேத வேதத்(து)
எண்ணும் கடந்துபர நாதவெறு வெளிவீட்டிருந்த
உலகீன்ற சிங்கைக்(கு) இறைவி
இப்பேதமைச் சிற்றடியன் நாவினில்
இயங்குபுன் சொல்கொள்வதே.

**முதல் இரண்டடிகளில் கூட்டுமுறை வருமாறு** :

விண்ணும் கடல்புவியும் அளவிடு மடல் கமுகவேலிகெழு மருதவெற்பின், இரதம் துளைவிடு நுகத்தினொடும் யாப்புண்ணும் பசும்புரவி கடாவும் என்று, நறுவெண்பால் புனல் பிரித்து உண்ணும் ஓர் எகினம், ஊழ்வெயில்படச் சூடுபட்டு, உவர்பட வட்டச்சிறுகூப வெம்புனலை உண்பது நிகர்க்கும் என்க.

**குறிப்புரை** : கடல் புவி= கடல் சூழ்ந்த உலகம். அளவிடு மடல் கமுகவேலி கெழு மருதவைப்பு= வானுக்கும் கடல்சூழ்ந்த நிலவுலகிற்கும் இடைப்பட்ட தூரத்தை அளவிடுவது போன்றுள்ள உயரமான பாக்கு மரங்கள் வேலிபோல் சூழ்ந்த மருதநிலத்தில். இரதம் துளைவிடுநுகம்= இரதத்தின் துளையிடப்பெற்ற நுகத்தடியில். யாப்புண்ணும் பசும்புரவி கடாவும்= கட்டப்பெற்ற சிறந்த குதிரையாக இழுத்துச்செல்லும் என்று. நறுவெண்பால் புனல் பிரித்துஉண்ணும் ஓர்எகினம்= தூயவெண்மையான பாலையும் அதில் உள்ள நீரையும் பிரித்துப் பருகும் ஒரு அன்னப்பறவை. ஊழ்பட்ட வெயில்= சூரியனின் வெயில் பட்டதால். உவர்பட்ட= வெறுக்கத்தக்க. வட்டச் சிறு கூப வெம்புனலை= வட்டமான் மிகச்சிறிய குளத்துத் தண்ணீரை. உண்பது நிகர்க்கும்= குடிப்பது போன்றது

சமைத்த= செய்த. தீம்கனி மொழிப் பனுவல் கிழத்தி பாடல்= இனிய கனிஒத்த சொற்களால் ஆன பாடலுக்குரிய கலைமகளின்,. பாடல் பசுந்தேன்நனைக்கும் செவியினால்= பாடலாகிய சிறந்த தேனைக்கேட்கும் காதுகளால. பழம்= பழைமையான. பேத பரசமய எண்ணும்= வேறுபட்டபிறசமயங்களின் எண்ணமும். வேதத்து எண்ணும்= வேதத்தின் எண்ணமும். கடந்து= அப்பாற்பட்டு. பரநாத வெறுவெளி வீட்டு இருந்த= மேலான நாதாந்தமாகிய வெளியாகிய வீட்டிலிருந்த. உலகீன்ற= உலகைப் பெற்றவளாகிய. இறைவி= அருள்தரு உலகம்மை. இப்பேதமைச் சிற்றடியன்= அறிவற்ற அற்பனாகிய என். நாவினில் இயங்கு புன்சொல் கொள்வது= நான்கூறும் அற்பமான சொற்களை ஏற்று அருள்வது.

**பொழிப்புரை** : அமுதத்தையும் பண்ணிசையையும் வருந்துமாறு செய்த இனியகனிபோன்ற சொற்களால் அமைந்த பாடலுக்குரிய கலைமகளின் பாடலாகிய சிறந்ததேனை நுகரும் திருச்செவிகளால் பழைமையான வேறுபட்டசமயங்களின் எண்ணமும், வேதத்தின் எண்ணமும் கடந்து, மேலான நாதாந்தவெளிகடந்த வெளியாகிய வீடுபேற்றின்கண் இருந்தவளும், உலகனைத்தும் ஈன்றவளும் ஆகிய விக்ரமசிங்கபுரத்து இறைவியாகிய அருள்தரு உலகம்மை, அறிவற்ற அற்பனாகிய எனது நாவினால் கூறும் புன்மையான சொற்களை ஏற்றருள்வது;

வானுக்கும் கடல் சூழ்ந்த இவ்வுலகிற்கும் இடைப்பட்ட தூரத்தை அளவிடுவதுபோன்று விளங்கும் உயரமான பாக்குமரங்கள் சூழ்ந்த மருதநிலத்தில்; இரதத்தின் துளையிடப் பெற்றநுகத்தடியில், இரதத்தை இழுத்துச் செல்லக்கட்டப்பெற்ற சிறந்த குதிரையாக விளங்குவதும், தூய வெண்மையான பாலையும் அதில்உள்ளநீரையும் பிரித்துப் பாலைப்பருகுவதும் ஆகிய அன்னப்பறவையானது, சூரியனின் வெயிலால் சூடான வெறுக்கத்தக்க வட்டமான சிறுகுளத்துத் தண்ணீரைப் பருகுவது போன்றதாகும்.

**விளக்கம்** : நீரைப்பிரித்துப் பாலைமட்டும் அன்னப்பறவை பருகும் என்ற இலக்கியவழக்கை,

" கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெள்ள நினைக்கின் பிணிபல- தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுஉடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெளிந்து "

என்பதாலும் அறியலாம்.

**இலக்கணக்குறிப்பு** : விண்ணும்........ வேலி = உயர்வுநவிற்சியணி. . .இச்செய்யுள் உவமையணி.

4. முறுக்கும்பு ரிப்பவள வார்சடைக் காட்(டு)எந்தை
மூதண்ட கோடி முட்ட .
முட்டிப்ப ரந்(து)எவையும் இறுதிப்ப டுத்துவதை
முனிஅறிந்(து) ஊண்மி சைந்து
கறுக்கும்க றைக்காள கூடப்பி ழம்(பு)அவன்
கண்டத்தின் அளவு தொட்டுக்
கனியும்பெ ருஞ்சுவைத் தெள்ளமுதம் ஆக்கிஉயிர்
காக்கும்மெய்க் கருணை அதனான்
நிறுக்கும்த ராசுநிறை மன்னுயிர்அ னைத்தும்ஊழ்
நெறியில்உய்த்(து) அருளும் அமலை
நிமலைஉல கம்மைவெண் கமலைதண் இசைத்தமிழ்
நிறைக்கும்தி ருச்செ வியினில்
பொறுக்கும்த ரத்த(து)என்(று) எனவழுவும் இளிதகைப்
பொய்ந்நிலைச் சிறும தியினேன்
புன்கவியும் நன்கவிதை யாகப்ப டுத்திப்
பொறுத்(து)இனி(து) அளிக்கு மன்றே.

**கூட்டுமுறை** : **முதல் இரண்டடிகளில் கூட்டுமுறை வருமாறு** : கறுக்கும் கறைக்காள கூடப் பிழம்பு, மூதண்ட கோடிமுட்ட முட்டிப்பரந்து ஊண்மிசைந்து இறுதிப்படுத்துவதை முனிஅறிந்து, முறுக்கும் புரிப்பவள வார்சடைக் காட்டு எந்தை கண்டத்தின் அளவுதொட்டுக் கனியும்பெருஞ்சுவைத் தெள்ளமுதம் ஆக்கி உயிர் காக்கும் மெய்க்கருணை அதனால் என்று கூட்டுக

**குறிப்புரை** : கறுக்கும் கறை= கருமையான இருள். காளகூடப் பிழம்பு= காளகூடம்ஆகியநஞ்சின் திரட்சி. மூதண்டகோடி முட்ட முட்டி= தொன்மையான அண்டத்தின் எல்லை முழுவதையும் தொட்டு. ஊண்மிசைந்து இறுதிப்படுத்துவதை= உணவாகத்தின்று தீர்ப்பதை. முனி அறிந்து= நினைத்து அறிந்து. முறுக்கும் புரிப்பவள வார்சடைக்காட்டு எந்தை= முறுக்கி கயிறுபோன்ற அடர்சடையுடைய சிவபிரான். கண்டத்தின் அளவு தொட்டு= கழுத்தளவில் தன்கையால் தொட்டு. கனியும் பெருஞ்சுவைத் தெள் அமுதம் ஆக்கி= இனியதெளிந்த அமுதமாக ஆக்கி. மெய்க்கருணை அதனால்= உண்மையான கருணை காரணமாக

நிறுக்கும் தராசின் நிறை= பொருள்களை நிறுக்கும் தராசின் மாட்சிமை. ஊழ்நெறி= பழவினை வழி. அமலை= மலமில்லாதவள். நிமலை= பார்வதி. வெண்கமலை= வெண்டாமரையில் உள்ள கலைமகள். பொறுக்கும் தரத்தது= கேட்கும் தகுதியுடையது. வழுவும் இளிதகைப் பொய்ந்நிலை= பிழையும்குற்றமும் உடைய பொய்யான நிலைமை. படுத்தி= கண்டு. அளிக்கும்= காக்கும்.

**பொழிப்புரை** : கருமையான இருள்போன்ற காளகூடம் ஆகிய நஞ்சின்திரட்சி, தொன்மையான அண்டத்தின் எல்லைமுழுவதையும் தொட்டு, அனைவரையும் உணவாகத்தின்று இறுதிசெய்வதை- சாகடிப்பதை நினைத்து அறிந்து, முறுக்கிய கயிறுபோன்ற நீண்ட சடையுடைய சிவபிரானின் கழுத்தின் அளவில்அதுநிற்குமாறு தன் கையால் தொட்டு, தெளிந்த அமுதம்ஆக்கி உயிர்களைக்காக்கும்உண்மையான கருணை காரணமாக

பொருள்களை நிறுக்கின்ற தராசின் மாட்சிமைபோல்போல், மன்னிய உயிர்கள் அனைத்தையும் அவற்றின் பழைமையான வினைவழியில் செலுத்திஅருள்புரியும் மலமில்லாதவளும், பார்வதியுமாகிய அருள்தரு உலகம்மை, கலைமகளின் இசைத்தமிழைக் கேட்கும் தனது திருச்செவியில், சிற்றறிவு உடைய எனது பிழையும் குற்றமும் பொய்யான தன்மையும் உடைய அற்பமான கவிதையையும் கூட நல்ல கவிதையாகக்கண்டு பொறுமையாகக் கேட்டு அருள்புரியும்.

**விளக்கம்** : யாரும் தன்னை வேண்டிக்கொள்ளாதபோது வலியமுன்வந்து, எல்லா உயிர்களையும் காத்த கருணைகாரணமாக, காக்குமாறு வேண்டும் என்புன் கவிதையையும் கேட்டு அருள்புரிவாள் என்க

**இலக்கணக்குறிப்பு** : முனி - இடைக்குறை. புன்கவி - பண்புத்தொகை. அன்றே - ஈற்றசை.

5. வாக்குமன மும்தொடர ஒட்டாஅ தீதத்தின்
வளர்கின்ற ஒன்று பலவாம்
மன்னுயிர்க்(கு) அன்னைஎனும் அறிஞர்அறி வில்தங்கி
வாழும்உல கம்ம அம்ம
நீக்குபுது துடைத்துநீ காக்கப்ப டும்தேவர்
நின்னைப்பு ரக்க என்று
நிற்கும்ஒரு பிள்ளைப்ப ருவம்தொ றும்பனுவல்
நினைவுறும்என் நினைவில் நின்றாய்
பூக்குடுமி வாரணத்து வசன்அயன் மால்முதல்
புத்தேளிர் உலகம் அடையப்
பொறைஉயிர்த்(து) அளியா அகண்டபரி பூரணப்
பொருளாஇ ருந்த நீயே
மேக்குயர் பொலஞ்சயிலம் முதலியவி லங்கல்முதல்
வேந்தன்மகள் ஆகி அன்னோன்
வேட்கையின்வி ழைந்துஒழுகு வாள்கயல் கண்அருளும்
விதத்தினும் அழகு)இ தன்றே.

**குறிப்புரை** : ஒன்று பலவாம்= ஒப்பற்ற பல்வகைப்பட்டதொடர ஒட்டா= பின்தொடர முடியாத. அதீதத்தில் வளர்கிர்கின்றன அன்னை, ஒன்றுபலவாம் மன்னுயிர்க்கு அன்னை என்க அதீதம்= துரியாதீத நிலை. நீக்குபு= நீ க்கியும். துடைத்து= அழித்தும். நீ காக்கப்படும் தேவர்= உன்னால் காக்கப்பெறும் அயன்முதலியோர். பனுவல் நினைவுறும்= பிள்ளைப்பருவத்தை நினைக்கும்.

பூக்குடுமி வாரணத்துவசன்= அழகிய குடுமியுடைய சேவல் சின்னமுடைய கொடிஏந்திய முருகன். புத்தேளிர் உலகம் அடைய= தேவருலகம் முழுவதும். அளியா பொறைஉயிர்த்து= கருணையுடன் ஈன்று. மேக்கு உயர்பொலம் சயிலம்= மிகமிக உயரமான பொன்மலையாகிய மேருமலை. முதல்= தலைமை. வேந்தன்= இமவான். வேட்கையின் விழைந்து ஒழுகு= விரும்பும்படி விருப்புடன் வாழும். வாள்கயல்கண் அருளும் விதத்தினும்= ஒளிபொருந்தியதும் கெண்டைமீன் ஒத்ததுமான கண்களுடைய மேனை காணும்வகை போல். இது அழகு= இப்பருவம் அழகுடையது.

**பொழிப்புரை** : ஒப்பற்ற பலவகைப்பட்ட பெருமைபொருந்திய உயிர்களாலும் தொடரவியலாத அதீதநிலையில் - ஒப்புயர்வற்ற நிலையில் வாழும் தாயாய், ஞானியரின் ஞானத்தில் தங்கிவாழ்கின்ற அருள்தரு உலகம்மையே! அதீதத்திலும், ஞானியர் ஞானத்திலும் ஒரேநேரத்தில் வாழும் உன்நிலை அம்ம - வியக்கத்தக்கதாகும். நீக்கப்பட்டும், அழித்தும் உன்னால் காக்கப்பெறும் தேவர்கள் உன்னைக்காப்பாராக என்று போற்றப்பெறும் காப்புப்பருவதோறும் என்நினைவிலும் நின்றாய்.

அழகிய குடுமியுடைய சேவலைக் கொடியாகக் கொண்ட முருகப்பிரான், பிரமன் திருமால் முதலியவர்கள் மட்டுமன்றி, தேவருலகம் முழுவதையும் ஈன்று, கருணைகாட்டி, மிகப்பெரிய முழுமையான பொருளாக விளங்கும் நீயே, மிகஉயரமான பொன்மலையாகிய மேருமலை முதலிய மலைகட்கெல்லாம் அரசனாகிய இமவானுக்கு மகளாய்த் தோன்றி, அவன் விரும்புமாறு விருப்புடன்வாழும் மேனையின் அருளொழுகும் ஒளிபொருந்தியதும் கெண்டைமீன்ஒத்தும் ஆகிய கண்களுக்குக் காட்சிதந்த விதத்திலும் அழகுடையதாகும். .

**விளக்கம்** : அதீதநிலை, ஞானியர் உள்ளம் ஆகியவற்றில் வாழும்நீ என் உள்ளத்திலும் நின்றது வியக்கத்தக்கது. அனைத்தையும் அனைவரையும் ஈன்ற தாயாகியநீ இமவானுக்கும் மேனைக்கும் மகளாகக் காட்சிதந்ததும் அழகுடையதாகும் என்றார். நீ ஈன்ற முருகப்பிரான், அயன்மால் முதலியார் உன்னைக்காப்பாராக என்றநயம் காண்க

**இலக்கணக்குறிப்பு** : தொடரஒட்டா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். அம்ம - வியப்பிடைச் சொல். நீக்குபு - செய்து என்னும் வாய்பாட்டு வினைஎச்சம். அன்றே - ஈற்றசை.

பாயிரம் முற்றிற்று.

## 1. காப்புப் பருவம்

### திருமால்

1. தேர்கொண்ட பருதிநிலாப் பூத்த(து) என்னச்
செம்மேனி வெண்தவள தூளம் போர்ப்ப
வேர்கொண்ட மாணிக்க வெற்பின் பாங்கர்
எய்(து)உலக மாமயிலை இனிது காக்கத்
தார்கொண்ட நிறத்ததுழாய் அம்தேன் சாய்க்கும்
தண்சாரல் மரகதவே தண்டத்(து) உச்சிக்
கூர்கொண்ட விழித்தோகைக்(கு) ஓகை ஈட்டும்
கொழுங்கருணைச் சூல்கொண்ட கொண்டல் தானே.

**குறிப்புரை** : தேர்கொண்ட= தேரில் ஏறிய. பருதி= சூரியன். நிலாப்பூத்தது= நிலவின் ஒளிவீசியது. செம்மேனி தவள தூளம்= சிவந்த திருமேனியில் வெண்மையான திருநீறு. வேர்கொண்ட= மூலப்பொருளான. மாணிக்க வெற்பின் பாங்கர் எய்து= மாணிக்க மலையாகிய சிவபிரானை உரிமையுடன் அடைந்த. உலகமாமயிலை= உலகம்மையாகிய அழகியமயிலை. மரகத வேதண்டத்து உச்சிக் கூர்கொண்ட விழித்தோகைக்கு= கூர்மையான அருட்பார்வையுடைய மயிலாகிய அருள்தரு உலகம்மைக்கு. ஓகை ஈட்டும்= உவகையைப் பெருக்கும். நிறத்த தேன்சாய்க்கும் தார்கொண்ட கொழுங்கருணச் சூல்கொண்ட கொண்டல் இனிதுகாக்க என்று கூட்டுக. நிறத்த= மார்பில். தேன்சாய்க்கும் தார்கொண்ட= தேனூற்றும் துளசி மாலையணிந்த. கொழுங்கருணைச்சூல் கொண்ட கொண்டல்= மிக்க கருணையைக் கருவாகக் கொண்ட மேகமாகிய திருமால்.

**பொழிப்புரை** : தேரில் ஏறிய சூரியன், நிலவின் ஒளி விசியதுபோல், தனது செம்மேனியில், மிகவும்வெண்மையான திருநீற்றுத் தூள்பூசியவனும், அனைத்துக்கும் மூலமானவனும், மாணிக்கமலையாக விளங்குவோனும் ஆகிய சிவபிரானை உரிமையுடன் அடைந்தவளும்; கூர்மையான அருட்பார்வை உடையவளும்; குளிர்ந்த சாரலுடைய கயிலை மலைஉச்சியில் உள்ளவளும்; பசியமயிலானவளும் ஆகிய அருள்தரு உலகம்மையாகிய குழந்தைக்கு, தனது மார்பில்தேன் ஊற்றும் துளசிமாலை அணிந்தவனும், மிக்க கருணையைக் கருவாகக் கொண்ட கார்மேகமும் ஆகிய உவகையூட்டும் திருமால் காப்பாராக.

**விளக்கம்:** அருள்தரு உலகம்மை, திருமாலுக்குத் தங்கையாதலின் அவரை தங்கைக்கு ஓகை ஈட்டும்.... கொண்டல் என்றார்

**இலக்கணக்குறிப்பு** : தேர்கொண்ட பருதி .............போர்ப்ப - இல்பொருள் உவமையணி. மாணிக்க வெற்பு - உருவகம்.

### 2 முக்களா லிங்கர்

எண்திசை வெற்பர சன்தரு புத்ரியை மும்முனைச் சூலப்படை
எந்தைம ணத்தின்வி ழைந்தனன் இப்பொழு(து) என்னமுற் பால்பர(சு)
இன்தலை வைத்தபெ ரும்புவ னத்(து)உயிர் மணக் காட்சியை
இன்(று)அறி யத்தகும்என்(று)இம யத்(து)உழை நண்ணஇப் பார்த்தலை
பண்டினும் மிக்க(து)உ ணர்ந்(து)அ(து) அமைக்கஓர் சொல்முனிக்(கு) ஆற்(று)அலை
பம்பிஉ வட்(டு)எறி கங்கைஅ ளித்(து)இனி(து) அன்னவன் தேக்கிய
பண்பைநி னைத்து(இ)ட பம்கட விப்பொலி தன்உருக் காட்டிய
பைந்தமிழ் முக்கள வின்கண்மு ளைத்தெழு செம்மலைப் போற்றுதும்
முண்டக நெட்டிதழ் மண்டபம் முற்றுறை பொன்மகள் தேற்றிட
முன்பட லைத்துள வம்கடு வைத்(து)அளி உண்ணமட்(டு) ஊற்றிய
மொய்ம்(பு)அக லத்தைவ ழங்குமு கிற்(கு)இருள் மின்னனத் தோற்றிய
முன்கைவ ளைச்சிறு தங்கையை முற்(று)எழு பண்மிடற்(று) ஏற்(று)இசை
வண்டுவ ழுக்கிவி ழுந்துகு ளித்தெழு மென்மது ரம்தேக்கெ றிவம்(பு)அலர்
மைக்குழல் அங்கைஅம் பிகையைச் சுடர்மணிச் சூட்(டு)அரவு
முறுக்கிடு கங்கண னைப்பொரு வெம்முலைக் கோட்(டு)எழில்
மங்கையை விக்ரம சிங்கபு ரத்(து)உல கம்மையைக் காக்கவே

**குறிப்புரை** : எண்திசை வெற்பரசன்= எட்டுத்திசைகளிலும் உள்ள மலைகளுக்கு அரசனாகிய இமவான். புத்ரி= பார்வதி தேவியை. மும்முனைச் சூலப்படை எந்தை= முத்தலைச் சூலம்ஏந்திய எம்தந்தை யாகிய சிவபிரான். மணத்தின் நினைந்தனன்= மணக்க நினைத்தான். முற்பால் பரசு= எதிரேஇருந்து போற்றும். இன்தலை வைத்த= இனிய இடமகன்ற. அறியத்தகும்= காணமுடியும். உழைநண்ண= பக்கம் கூட. பார்த்தலை= உலகின் உச்சி - வடக்கு. மிக்கது= கூட்டம் மிகுந்ததால். அமைக்க= சீர்செய்ய. ஓர்சொல் முனி= புகழ்வாய்ந்த அகத்தியர.. ஆற்று அலை= ஆற்றின் அலை. பம்பி உவட்டு எறிகங்கை = மிகப்பரவி அலைவீசும் கங்கை. தேக்கிய பண்பை நினைத்து= மறுத்த தன்மையை எண்ணி. கங்கையை அளித்து= கங்கையை வழங்கி. இடபம் கடவிப்பொலி தன் உருக்காட்டிய= இடபஊர்தியில் ஏறிவந்து தன் மணக்கோலம் காட்டிய. செம்மல்= ஈசன் - சிவபிரான். .

நெட்டு இதழ் முண்டக மண்டபம்= நீண்ட இதழ்களுடைய தாமரையாகிய மண்டபத்தில். முற்று உறை பொன்மகள்= முழுவதும் வாழும் திருமகள். தேற்றிட= கவலையைபோக்க. முன்= உயர்ந்த. துளவப் படலை= துளசிஇலைமாலை. கடும்வைத்து= விரைந்து சூடி. அளி உண்ண மட்டுஊற்றிய= வண்டுகள்பருகத் தேன் பிலிற்றிய. மொய்ம்பு அகலம்= வலிமையான மார்பு. முகிற்கு= மேகமாகிய திருமாலுக்கு. இருள் தோற்றிய மின்என= கார்மேகத்தில் தோன்றிய மின்னல் போல். முன்கை வளைச்சிறு தங்கை=முன்கையில் வளையல் அணிந்த இளையவளாம் தங்கையாகிய அருள்தரு உலகம்மையை, மிடற்று எழுபண் முற்று ஏற்று இசை வண்டு= வாயால் ஏழுவகைப்பண்களைமுழுமையாக முரலும் வண்டுகள். குளித்து= மூழ்கி. மென்மதுரம் தேக்கு எறி= மென்மையான தேன்பருகி ஏப்பமிடும். வம்பு அலர்= புத்தம்புதுமலர். மைக்குழல்= கருமையான கூந்தல். பொருவெம்முலை= முட்டும் வெப்பமுடைய முலை. அங்கை விக்ரம சிங்கபுரத்து உலகம்மையை என்றுகூட்டுக. .

**பொழிப்புரை** : நீண்டஇதழ்களுடைய தாமரையாகிய மண்டபத்திலேயே வாழும் திருமகளின் கவலையாகிய தான்ஓரிடத்திலேயே வாழ இடமில்லையே என்ற கவலையைப் போக்க, வண்டுகள் பருகத்தேன்பிலிற்றும் உயர்ந்த துளசிமாலையை விரைந்து சூடிய தனது வலிமையான மார்பை அவள் இருக்கும் இடமாகத் தந்த மேகமாகிய திருமாலுக்கு இளையவளும்; மேகமாகிய இருளில் தோன்றிய மின்னல்போன்ற ஒளியுடையவளும்; ஏழுவகைப் பண்களையும் தனது வாயால் இசைக்கும் வண்டுகள் இனியதேனில் வழுக்கிவிழுந்ததால் தேனில்மூழ்கி, அதைப்பருகி ஏப்பமிடும் புத்தம்புதிய மலர்மாலைசூடிய கருமையான கூந்தலுடையவளும், அழகிய கைகளுடையவளும், ஒளிரும் மாணிக்கமணியைத் தலையில் கொண்ட அரவத்தை முறுக்கிக் கங்கணமாகக் கொண்ட சிவபிரானை முட்டும் வெப்பமுடைய கூர்மையான மலைஒத்த முலைகளுடையவளும் ஆகிய விக்ரமசிங்கபுரத்து அருள்தரு உமையம்மையைக் காத்தருளும்பொருட்டு;

எண்திசைமலைகளுக்கும் அரசனாம் இமவானின் மகளை; மூன்று கூர்மையான நுனிகளுடைய சூலப்படை ஏந்திய எம்தந்தையாகிய சிவபிரான் இப்போதுமணக்க நினைத்தான்என்று, அவன்முன் இருந்து போற்றும் இடமகன்ற பெரிய உலகஉயிர்கள், இனிய திருமணக்காட்சியை இன்று காண்போம் என்று இமயத்தின்கண் முன்னிலும் மிகுதியாகக் கூடியதால் உலகின் வடக்குநுனி முன்னிலும் தாழ்ந்ததை உணர்ந்து; அதைச்சீர்செய்ய, ஒப்பற்ற புகழுடைய அகத்தியமுனிவருக்கு, ஆற்றின்அலை பரவிஎறியும் கங்கையைத்தந்ததுடன், ( திருமணக்காட்சி காணாது தென்திசைக்குச்செல்ல ) அவர் மறுத்ததை நினைத்து( அவர் செல்லும் இடத்தில்) இடபஊர்தியைச் செலுத்திவந்து திருமணக்காட்சியைக் காட்டிய வளமான இனிய முக்களாவின்கண் தோன்றிய ஈசனை - சிவபிரானைப் போற்றுவோம்.

**விளக்கம்** : திருமகளின் இல்லமாகிய தாமரைக்கு மாற்று இடமாகத் திருமால் தன் மார்பினைத் தந்தார் என்றார்.

எண்திசை மலைகள் : இமயம், மந்தரம், கயிலை,விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம் கந்தமாதனம் என்பன. பிறவாறு கூறுவாருமுளர்.

**இலக்கணக்குறிப்பு** : எண்திசை வெற்பு - தொகைக்குறிப்பு. எந்தை - மரூமொழி. போற்றுதும் - உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று.

**3. நான்முகன்**

மறைக்கும் கடைக்காலம் ஓராயி ரம்குடுமி
வடபூத ரத்தை வழுவி

வாழிப்பெ ரும்புவன கோடிஉடை படமடியும்
மன்னுயிர்க் கண்டு கண்கள்
நிறைக்கும்ப ழங்கருணை சூல்கொண்டு திரியும்மன
நிலையினால் உலகம் ஈன்று
நின்மலனை மருவும்உல கம்மையை எம்அனையை
நித்தம்பு ரந்(து)அ ருளுமால்
உறைக்கும்க றைப்பகட்(டு) ஆழிஐம் படைமாயன்
ஒருவர்முதல் இருவர் நால்வர்
ஊழ்முறைதி றம்பாது பலதொழில் இயற்றுமா(று)
ஒருதொழில் இயற்ற நசையால்
நறைக்கும்பொ லன்தாதி னுக்கும்சு ரும்(பு)ஊத
நகைமுகை நெகிழ்ந்து கிழியும்
நளினநெடு மடல்வயிற்(று) அவதரித்(து) அருளுமொரு
நான்முகம றைக்கு ழவியே

**குறிப்புரை :** மறைக்கும் கடைக்காலம்= உயிர்களை ஒடுக்கும் கடையூழி. குடுமி= உச்சி - சிகரம். வடபூதரம்= மேருமலை. வழுவி= நிலைதடுமாறி. இப்பெரும்புவன்கோடி உடைபட= இப்பேருலக வகைகள் உடைபட்டுச்சிதற. வாழ் மன்உயிர்கள்= வாழும் பெருமைபொருந்திய உயிர்கள். திரியும் மனநிலையினால் மடியும்நிலை கண்டு= மனம்மாறுபட்டு இறக்கும் நிலைகண்டு வருந்திய. பழங்கருணை= முதிர்ந்தகருணை. நின்மலனை மருவும்= மலமில்லாத சிவபிரானைப் பொருந்தும்

உறைக்கும் கறை= ஒழுகும் இரத்தம். பகட்டுஆழி= முழங்கும்பாற்கடல். ஐம்படை இருவர் மாயன் ஒருவர் முதல் என்க.= வில், வாள், சங்கு, சக்கரம் கதை ஆகிய ஐந்துபடைகளுடைய பெருமைபொருந்திய திருமாலாகிய ஒருவர் முதலாக. நால்வர்= படைக்கும் பிரமன், அழிக்கும்உருத்திரன், மறைக்கும் மகேசன், அருளும் சதாசிவன் ஆகிய நால்வர். ஊழ்முறை திறம்பாது= விதிக்கப்பட்ட தொழில்களில் மாறுபடாது. ஒருதொழில் இயற்ற நசையால்= ஒற்றைத்தொழிலாகிய தன்படைப்புத்தொழிலைச் செய்யும் விருப்பினால். நறை= தேன். பொலன்தாது= பொன்போல் ஒளிரும் மகரந்தம். சுரும்புஊத= வண்டுகள் ஒலிக்க. நகைமுகை. = களிப்புடைய - பக்குவமான மொட்டு. நெகிழ்ந்து கிழியும்= கட்டுவிட்டு மலரும். மடல் நளினவயிற்று= இதழ்களுடைய தாமரைமலரில். மறை நான்முகக்குழவி= வேதம் ஓதும் பிரமன்.

. . **பொழிப்புரை :** முழங்கும் பாற்கடலில்வாழ்பவனும்; குருதிஒழுகும் வாள், சக்கரம், கதை வில், சங்குஆகிய ஐம்படைகளுடையவனும் பெருமைபொருந்தியவனும் ஆகிய காக்கும்திருமால், அழிக்கும் உருத்திரன், மறைக்கும் மகேசன், அருளும் சதாசிவன் ஆகியோர், தத்தமக்கு விதிக்கப்பெற்ற தொழில்களில் மாறுபடாது அவற்றைச்செய்ய, தானொருதொழிலாகிய படைக்கும் தொழில்செய்யும் விருப்பினால், தேனுக்காகவும் பொன்போல் பொலியும் மகரந்தத்திற்காகவும் வண்டுகள் மொய்த்து ஒலிக்க, பக்குவமான மொட்டு கட்டுவிட்டு மலரும் இதழ்களுடைய தாமரைமலரில் தோன்றிப் படைக்கும்தொழில்புரியும் நான்முகனாகிய குழந்தை

உயிர்களை ஒடுக்கும் கடையூழியில், ஆயிரக்கணகான சிகரங்களுடைய இம்மேருமலை நிலைகுலைய, பேருலவகைகள் உடைபட்டுச் சிதற, அங்குவாழும் பெருமைபொருந்திய உயிர்கள் மாறுபட்டு - வருந்தி இறக்கும் நிலைகண்டு, தன்கண்களில் நிறைந்த முதிர்ந்தகருணையாகிய சூல்தாங்கி, உலகை ஈன்று, மலமில்லாதவனாகிய சிவபிரானைப் பொருந்தும் அருள்தரு உலகம்மையாகியஎம் தாயை நாடொறும் காத்தருள்வான்.

**விளக்கம் :** கடையூழி என்பது அனைத்துப்பொருள்களும் அழிய உயிர்கள் அம்மையுள் ஒடுங்க, அம்மை அப்பனுள் ஒடுங்கும் காலம். பின்னர் கருணையால் வெளிப்பட்ட அம்மை, அனைத்து உயிர்களையும், தத்தம் ஐந்தொழில் புரியும் பிரமன் முதலியோரையம் படைப்பாள். அம்மையால் படைக்கப்பட அனைவரும் அவளின் குழந்தைகளேயாதலின் நான்முகனைக் குழவி - குழந்தை என்றார்.

**இலக்கணக்குறிப்பு :** புரந்தருளுமால் - ஆல்- அசைச்சொல். ஐம்படை - தொகைக்குறிப்பு.

4. **விநாயகர்**

அந்திப்பி றைக்கொழுந்(து) அமு(து)அறா மணம்நாறும்
அழல்விழுது விட்ட சடைமீ

அத்திரைக் கண்புணரு நாரம்கி டந்(து)அலைய
வடிஇட்(டு)அ ளைந்து சிகரப்
பந்திப்ப ருப்பதச் சிலையாளி திருஉருப்
பால்நிலாப் புழுதி யாடிப்
பற்றுநர் மனச்சேவ கத்துலவு மலையப்
பசும்பிடியை இனிது காக்க
தொந்திப் பெரும்பண்டி சரியஅணி கிண்கிணி
துணைச்சரண் அலம்ப அருவி
தூங்கும் கவுட்கடாம் ஆறலைத்(து) எழவலம்
சூழ்ந்(து)இளைய வீரன் முந்து
முந்தித் தனித்(து)ஏகி இரசிதப் பருவத
முகட்(டு)அருள் பழுத்த தெய்வ
முக்கண் பழங்கனி புதுக்கனி தரவரு
மும்மதக் களியா னையே.

**குறிப்புரை** : அந்திப் பிறைக்கொழுந்து= அந்திநேர மூன்றாம்பிறை. அமுது அறா= ஒளி இழக்காத. மணம் நாறும்= நன்னிலை சிறந்துவிளங்கும். அழல்விழுதுவிட்ட சடை= தீயாக நீண்ட சடை. மீ= மேல். திரைக்கண் புணரு அ நாரம்= அலையுடன்கூடிய அக்கங்கைநீர். அலைய= அலைவீச. வடிஇட்டு அளைந்து= வடியுமாறு கலக்கி. சிகரப் பருப்பதச் சிலையாளி= உயரமான மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபிரான். திருஉருப்பால்நிலாப் புழுதியாடி= திருஉருவில் உள்ள வெண்மையான ஒளியுடைய திருநீற்றில் ஆடி. பற்றுநர்= தன்திருவடியைப் பற்றிக்கொண்டவர். மனச்சேவகம்= மனமாகிய உயர்ந்த இடம். மலையப்பசும்பிடி= பொதிகையில் உள்ள மிகஇளைய பெண்யானையாகிய அருள்தரு உலகம்மை.

பெரும்பண்டி= பெருவயிறு. துணைச்சரண்= இருதிருவடிகள். அலம்ப= ஒலிக்க. அருவி தூங்கு கவுள் கடாம்= அருவியாக இறங்கும் கன்னமதம். ஆறலைத்து எழ= ஆறாக அலைவீசி வெளிப்பட.. வலம் சூழ்ந்து= பெற்றோராகிய அம்மையப்பரை வலம்வந்து. இளையவீரன் முந்து= முருப்பிரானுக்கு முன்னதாக. முந்தித்தனித்து ஏகி= முதலாவதாகத் தனியேவந்து. இரசித பருவதமுகட்டு= வெள்ளி மலை - கயிலைமலை உச்சியிலுள்ள. பழங்கனி= சிவபிரான். புதுக்கனி தர= நாரதர் கொடுத்த புதுப்பழம் தர. மும்மதக் களியானை= கன்னமதம் கபோலமதம் பீஜமதம் ஆகிய மும்மதமுடைய பெருமைபொருந்திய விநாயகர்.

**பொழிப்புரை** : தொந்தியுடைய பருத்தவயிறு சரிய, இருகால்களிலும் அணிந்த கிண்கிணி - சிலம்பு ஒலிக்க, அருவியாக இறங்கும் கன்னமதம் ஆறாக அலைவீசி வெளிப்பட, பெற்றோராகிய அம்மையப்பரை வலம்வந்து, தம்பியாகிய முருகனுக்கு முன்னதாக முந்திவந்து, வெள்ளிமலையாகிய கயிலையின் உச்சியில்உள்ள அருள்பழுத்ததெய்வமும், முக்கண்களுடையவனும் ஆகிய சிவபிரான்; நாரதர் கொடுத்த புதுக்கனியைத்தரப்பெற்ற மும்மதத்துப்பெருமையுடைய விநாயகர்;

அந்திநேர மூன்றாம்பிறை ஒளிஇழக்காதுள்ள தீயாக நீண்ட சடைமேல் உள்ள அலையுடன் கூடிய கங்கைநீர் அலைவீசி வடியுமாறு கலக்கி, உயரமான மேருமலையை வில்லாகஏந்திய சிவபிரானின் திருமேனியில் படிந்த வெண்மையான ஒளியுடைய திருநீற்றுப்புழுதியில் ஆடி, தன் திருவடிகளைப்பற்றிக் கொண்டவர்களின் மனமாகிய உயர்ந்த இடத்தில் உலவுவதும், பொதிகையில் உள்ளதுமாகிய மிக இளைய பிடியாகிய அருள்தரு உலகம்மையை இனிதுகாப்பாராக.

**இலக்கணக்குறிப்பு** : கிண்கிணி- இரட்டைக்கிளவி. மனச்சேவகம் - உருவகம். மும்மதம் - தொகைக்குறிப்பு.

5. **சுப்பிரமணியர்**

முற்றும் தவள மதிச்சுரபி முழுக்கும் கலைவெண் மடிசுரந்த
முதுவான் அமுது சுரந்துநிலா முகக்கும் கோர வாய்பெய்யும்
தெற்றும்பனைச்சந் தனவளம்சூழ் சிகரப் பொதியத் தமிழ்மணக்கும்
சிங்க புரத்தில் உலகுடைய தெய்வச் சிறுமான் புறம்காக்க
எற்றும் குருதிப் புனல்குளித்த இலைவேல் கரத்தில் நான்குதலை
இறைவன் மகுடத்(து) அஞ்சுதலை எய்தப் புடைத்தோர் ஆறுதலை

சுற்றும் பவுரித் திருநடனச் சுருதிப் பொருட்கும் பொருள் உரைத்துச்
சுரர்ஏத் தெடுப்ப ஒருசேவல் துவசம் உயர்த்த பெருமாளே.

**குறிப்புரை** : தவள முற்றும் மதி= வெண்மைமுதிர்ந்த நிலா - முழுநிலா. கலைமடி முழுக்கும்சுரந்த முதுவான் வெண் அமுது= உடம்பிலுள்ள மடி முழுவதுமாகச்சுரந்த மிகமேலான வெண்மையான அமுத ஒளி. முகக்கும் கோரவாய்பெய்யும்= விரும்பும் சகோரரப்பறவையின் வாயில் கொடுக்கும். தெற்றும் பனைச்சந்தன வளம்= வளர்ந்த பெருமைபொருந்திய சந்தனமரங்கள். தமிழ்= இனிமை. தெய்வச்சிறுமான்= தெய்வத்தன்மையுடைய மான்கன்று. புறம்காக்க= பாதுகாக்க.

எற்றும் குருதிப்புனல்= அலைவீசும் இரத்தவெள்ளம். இலை= கூர்மை.. நான்குதலை இறைவன்= பிரமன். மகுடத்து=தலையில். அஞ்சுதலை எய்த= அச்சமுற. ஆறுதலை சுற்றும் பவுரித் திருநடனம்= கங்கையையுடைய தலையுடன் சுழன்று பவுரி என்னும் தாண்டவம். சுருதிப்பொருள்= மறைகளின் பொருளாக விளங்கும்சிவபிரான். பொருள்= ஓங்காரப்பொருள். சுரர் ஏத்தெடுப்ப= தேவர் போற்ற துவசம்= கொடி..

**பொழிப்புரை** : அலைவீசும் இரத்தவெள்ளத்தில் குளித்த கூர்மையான வேலினை ஏந்திய கையால் அஞ்சுமாறுபிரமனைத் தலையில்குட்டியும்; கங்கைசுமந்த தலையுடன் சுழன்று பவுரி என்னும் திருக்கூத்தாடியவனும், வேதத்தின் பொருளும் ஆகிய சிவபிரானுக்கு ஓங்காரப்பொருள் உபதேசித்தும்; தேவர்கள் போற்ற ஆற்றல்வாய்ந்த சேவற்கொடியை வெற்றிக்கொடியாக உயர்த்திய அருள்தரு முருகன்;

வெண்மை முதிர்ந்த முழுநிலா, தன்உடம்பிலுள்ள மடியிலிருந்து முழுவதுமாகச்சுரந்த மிகவும் மேலானவெண்மையான அமுதஒளியை விரும்பும் சகோரப்பறவையின் வாயில் ஊற்றுவதும், பெருமை பொருந்திய வளமான சந்தனமரங்கள் சூழ்ந்ததும் ஆகிய உயரமான பொதிகைமலைகண் உள்ள தமிழ்மணக்கும் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள தெய்வத்தன்மையுடைய இளமானாகிய அருள்தரு உலகம்மையைக் காப்பாராக.

**விளக்கம்** : சகோரப்பறவையின் இயல்பு :

" உறைபட்ட சுதைநிலவொடு இளவெயிலும் அளவளாய்
உண்ணச்ச கோரம் வெஃகும் " ( முத்துக்குமாரசாமி. பி. த. 8 )
" உரவுநீர் மாகொன்ற வேல் " ( சிலம்பு. குன்றக்குறவை. பாட்டுமடை )
" அன்னவா கனனை அரும்சிறைப் படுத்திமெய் அறிவால்
பண்ணகா பரணற் கோமுதற் பொருள்தனைப் பகர்ந்தோய் "
( பாம்பன்.சுவாமிகள். திருவலங்கல் திரட்டு. 12. திருச்சோலைமலை.

**இலக்கணக்குறிப்பு** : கோரம் - சகோரம் என்பதன் முதற்குறை.

6. **இந்திரன்**

நன்னுதல் மடவார் முகிழ்விரல் அளைந்த
நாதயாழ் இசையும் ஐக்கந்த
நாள்மலர்த் தெரியல் வரிஅளித் தெரிந்த
நைவளம் கனிந்த பாண்இசையும்
இன்அமு(து) உயிர்க்கும் வள்ளையும் வளர்க்கும்
இளம்கிளி மழலையும் பயிலும்
எழுநிலை மாட மறுகுசூழ் சிங்கை
இறைவியைப் புரக்க ஏத்துதுமால்
பின்னுதென் டிரைவா ருதியில்வந்(து) இறங்கிப்
பெரும்புனல் முகந்து கொண்(டு)எழுந்த
பெய்ம்முகில் படலம் மின்னொடும் தவளப்
பிறங்கல்மீ(து) இவர்ந்த னவடித்த
மின்நகு குலிசக் கதிர்ப்படை சுமந்து
வெறிபடு மும்மதத்(து) அரச
வெண்ணிறத்(து) அயிரா வதக்களிற் றிருந்து
விண்உலா வரும்இறை வனையே.

**குறிப்புரை** : நன்னுதல்= அழகியநெற்றி. முகிழ்= அரும்பு. நாதயாழ் இசை= ஒலிக்கும் யாழ்மீட்டிய. ஐகந்தம்= வியக்கத்தக்க மணம். தெரியல்= மாலை. வரி அளித்தெரிந்த= கோடுகளுடைய வண்டுகள் முரலும். நைவளம்= நட்டபாடைப்பண். பாணிசை= பாட்டுஇசை.. வள்ளை= வள்ளைப்பாட்டிசை. மறுகு= தெரு. ஏத்துதும்= போற்றுவோம்.

பின்னு தெண்டிரை= தொடர்ந்த தெளிவான அலைகள். வாருதி= கடல். படலம்= கூட்டம். தவளப்பிறங்கல்= வெள்ளிமலை - கயிலை. மின்நகு= மின்னலை இகழும் . கதிர்குலிசப்படை= ஒளிரும் குலிசப்படை. மும்மதரசம்= மூன்றுமதநீர்.

**பொழிப்புரை** : தெளிவான அலைகள் தொடரும் கடலில் இறங்கி, மிக்கநீரினை முகந்துகொண்டு மேல்எழுந்த மழைமேகக் கூட்டம் மின்னலொடுபோய், கயிலைமலைமேல் பொழிந்த மழைமின்னலை இகழும் ஒளிபொருந்திய குலிசப்படை ஏந்தி, வெறியுண்டாக்கும் மும்மதநீரும், வெண்ணிறமும் உடைய அயிராவதக்களிற்றின்மேல் வானுலகில் உலாவரும் அரசனை - இந்திரனை;

அழகிய நெற்றியையுடைய மகளிர் தமது அரும்புபோன்ற விரல்களால் ஒலிமீட்டிய யாழிசையும், வியக்கத்தக்க மலர்மாலையில் கோடுகளுடைய வண்டுகள் பாடும் நைவளஇசைகனிந்த பாடலும், இனிய அமுதமாகப் பாடும் வள்ளைபாட்டிசையும், இளைய கிளிகளின் மழலையும் மிகஒலிக்கும் எழுநிலைமாடங்கொண்ட தெருக்களுடைய விக்ரமசிங்கபுர இறைவியாகிய அருள்தரு உலகம்மையைக் காக்கப் போற்றுவோம்.

**இலக்கணக்குறிப்பு** : முகிழ்விரல் - உவமத்தொகை. மும்மதம் - தொகைக்குறிப்பு.

7. **திருமகள் , கலைமகள்**

மூரிச் சிகரம் தரியாது முந்நீர்க் கிடங்கு கலங்காது
மோட்டுக் கமடத்(து) அகடுபடு முதுசலியா(து) அமரர்எனும்
பேரில் சிறந்தொர் கைவருத்தம் பிறவா(து) இமயப் பெருங்கிரிவாய்ப்
பிறந்த கருணை உலகுடைய பெண்ணார் அமுதைப் புரந்தளிக்க
பாரித்(து) உயர்ந்த வரைநிறுவிப் பல்ஆ யிரவிண் ணவர்கூரப்
பகட்டுப் புரந்தீ எழக்கடையும் பருவத்(து) ஒருமா தவர்க்(கு)அணியாய்
வாரிக் கடல்வெண் திரைகமம்சூல் வயிற்றில் வரும்பெண் ணமுதும்உயிர்
வகுத்துப் பழநான் மறைக்கடலின் வளர்நா வள்ளத்(து) அமுதமுமே.

**குறிப்புரை** : மூரி= பெருமை. முந்நீர்க்கிடங்கு= ஆழமான கடல். முதுமோட்டுக்கமடத்து அகடு என்க. முது= தொன்மை. மோட்டுக்கமடம்= பெருமைபொருந்திய ஆமை. அகடு= வயிறு. பேர்= புகழ். பெண்ணார் அமுது பெண்ணாகிய அமுதம் - அருள்தரு உலகம்மை.

பாரித்து= அகலமாக. வரை= மலை. கூர= மிக. பகட்டுப்புரம்= வஞ்சிக்கும் ஊரவராகிய அசுரரும். தீ எழக் கடையும்= நஞ்சு தோன்றக் கடையும். பருவம்= காலம். மாதவர்= திருமால். கமம் சூல் வெண்திரை வாரிக்கடல்= மேகத்தைக் கருக்கொள்ளும் வெண்மையான அலைவீசும் நீருடைய கடல் - பாற்கடல். வரும்= தோன்றிய. பெண்ணமுது= திருமகள். உயிர்= அழியாத. பழநான்மறைக்கடலின் வகுத்து= பழைமையான நான்கு மறைகளைக் கடல்போல்படைத்து. நாவள்ளத்து அமுது= நாஆகிய ஓடத்திலிருக்கும் அமுதமாகிய கலைமகள்.

**பொழிப்புரை** : அகலமாகவும் உயரமாகவுமுள்ள மந்தரமலையைநிறுவி, மிகுதியான தேவர்களும் வஞ்சிக்கும் ஊரவராகிய அசுரரும், மேகத்தைக்கருக்கொள்ளச் செய்யும் வெண்மையான பாற்கடலைக் கடைந்த காலத்தில், ஒப்பற்ற திருமால் மார்பில் அணியும் அணியாகத் தோன்றிய திருமகளும், அழியாத பழைமையானநான்கு மறைகளைக்கடல்போல் படைத்து, அதில் நாஆகிய ஓடத்தில் இருக்கும் அமுதமாகிய கலைமகளும், .

பெருமைபொருந்திய சிகரமலையை(மந்தரம்), இடாமல், ஆழமான பாற்கடல் கலங்காமல், தொன்மையான பெருமைபொருந்திய ஆமையின் வயிறு வருந்தாது , புகழ்வாய்ந்த தேவர்களிடம் சிறிதும் வருத்தம் தோன்றாது இமயம் ஆகியபெரிய மலைக்கண் தோன்றியவளும், உலகனைத்தும் தனக்கே உரிமையாகுமாறு ஈன்றவளும்ஆகிய பெண்களுள் அமுதமொத்த அருள்தரு உலகம்மையைக் காப்பாராக.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள், அம்மையைப் பாற்கடலில்தோன்றிய அமுதத்தின் விலக்கி, இமயமலைக்கண் தோன்றிய அமுதம் என்றதால் இது விலக்கணியாகும்.

8. **வயிரவர்**

பொருதிரைதி ரைத்(து)உதறும் அமுதவா ரிதியினொடு
பொன்னின்மணி மண்ட பத்துப்
புனிதமறை உபநிடத மயமாய்வ குத்தளப்
பொருளுக்கும் உற்பத் தியாய்
இருபதின் இரட்டிபடு திரிகோண வட்டத்தின்
இளவெயில் எறிப்ப நாப்பண்
இருக்கும்ப ராபரை அருட்பாப நாசத்(து)எம்
இறைவியை உவந்து காக்க
சுருள்படும் நெடுந்தோகை ஞமலிஅம் புரவிமிசை
தோற்றிவெம் கனலி தூற்றும்
சுழல்கண்க டுங்கூளி ஆடமுக் குடுமிவிடு
சூலாயு தம்த ரித்துக்
கருவிடம் உடைத்(து)ஒழுகு பகுவாய்எ யிற்(று)உரக
கங்கணம் அணிந்து புவனம்
காக்கும்க றைக்காளி மைக்கஞ்சு கம்தொட்ட
காரிப்ப ழம்க டவுளே.

**குறிப்புரை :** திரைத்து= சுருண்டு, உதறும்= சிதறுகின்ற. அமுதவாரிதி= அமுதக்கடல். மணி= அழகு. உற்பத்தி= தோற்றம். இருபதின் இரட்டி= நாற்பது. நாப்பண்= நடுவில். பராபரை= சிவசத்தி - பார்வதி

சுருள்படும்= வளைந்த. தோகை= வால். அம்ஞமலிப்புரவி= அழகியநாயாகிய குதிரை. தூற்றும்= வெளியிடும். கடுங்கூளி= கொடியபேய். குடுமி= தலை. கருவிடம்= கருமையான நஞ்சு. உரக கங்கணம்= நாகமாகிய கங்கணம். கறை= கருநிறம். மைக்கஞ்சுகம் தொட்ட= கருமையாஆடைஉடுத்த. காரி=கருநிறம்.

**பொழிப்புரை :** வளைந்த நீண்ட வாலுடைய நாயாகிய அழகிய குதிரைமேல் தோன்றி, கொடிய சினத்தை வெளிப்படுத்துவதும், சுழலும்கண்களுடையதும், கொடியதும்ஆகியபேய்கள் கூத்தாட, முத்தலைச் சூலம் தாங்கி, கருமையான நஞ்சுவெளிபட்டு ஒழுகும்பிளந்தவாயும் நச்சுப்பற்களுமுடைய நாகத்தைக் கங்கணமாக அணிந்து, உலகைக்காக்கும் கருமையான காளியுடன், கருமையான ஆடைஉடுத்த கரிய நிறப் பழைமையான வயிரவக் கடவுள்

ஒன்றுடன் ஒன்று மோதிச்சிதறுகின்ற அமுதக்கடலுடன் புனிதமறையின் உயர்உபநிடதத்தின் மயமாக, எவ்வகைபொருளும் தோன்றுமிடமாய், பொன்னாலான அழகிய மண்டபத்தில் உள்ள நாற்பது முக்கோணவட்டதின் மென்மையா ஒளியிடையே வீற்றிருக்கும் சிவசத்தியாகிய பாபநாசத்து இறைவியாம், அருள்தரு உலகம்மையை மகிழ்ந்து காப்பாராக.

9. **சப்தமாதர்கள்**

அம்கண்நிலம் அடையவும் இடந்(து)உழு மருப்பினள்
அந்திசொலும் உகிரின்வ கிர்கொந்தளம் முடித்தவள்
அன்(று)அமரர் பசிகெடமு கந்(து)அமு(து) அளித்தவள்
அஞ்சனமும் மதசலதி வெண்களி(று)உ கப்பவள்
வெங்கனலி விழிஅலகை அம்கொடிஉ யர்த்தவள்
வெண்கிரண நிலவுதரு வெண்சிறைஅ னத்தினள்
மென்கலப மயில்முது(கு) இருந்(து)அமர்வி ளைப்பவள்
வெந்திறலின் எழுவர்இவர் செஞ்சரண்வ ழுத்துதும்
வங்கமறி கடல்மடைதி றந்த(து)எனம தப்புனல்
வண்டுபடு கவுள்வழிஅ லம்பிஇரு பக்கமும்
மண்பெருகி அலைஎறிய வண்திணிம ணிப்புய
மைந்தர்ம றுகிடைக்கடவு சிந்துரவ யக்கரி
திங்கள்நு தலியர்உடல் திமிர்ந்(து)அயல் எடுத்(து)எறி
செங்கலவை அளறுகள்மு கந்(துஉடல்இ றைத்(து)ஒளிர்

திண்கனக வரைஎனநி மிர்ந்துநிலை பெற்(று)உயர்
சிவகங்கை நகர்உலகு டையமங்கையை அளிக்கவே.

**குறிப்புரை** : அடையவும்= முழுவதும். உழும்மருப்பினள்= உழும் கொம்புடையவள் - வராகி. அந்தி சொலும்= அந்திமேகம்போல் சிவந்த. உகிர்= விரல். கொந்தளம் முடித்தவள்= தலைமுடியை முடிச்சிட்டுக் கொண்ட மகேசுவரி. அமுதுமுகந்து அளித்தவள்= நாராயணி. அஞ்சனமும் = கண்ணுக்கு இடும்மை. மதசலதி=மதமாம் கடல். வெண்களிறு உகப்பவள்= அயிராவதமாகிய வெள்ளையானையை விரும்பும் இந்திராணி. கனலி விழி= சினத்தால்நெருப்புபோல் சிவந்தகண். அலகையம்கொடி உயர்த்தவள்= பேய்க்கொடி ஏந்திய காளி. வெண்கிரண நிலவு= வெண்மையான கதிருடைய ஒளி. அனத்தினள்= அன்னப்பறவையுடைய கலைமகள். கலபம்= தோகை. மயில்முதுகுஇருந்து அமர்விளைப்பவள்= மயிலின்முதுகில் இருந்துகொண்டு போரிடும் கௌமாரி.

வங்கம் மறிகடல்= அலைசுருளும் கடல். மதப்புனல்= மதநீர். வண்டு படு= வண்டுகள் மொய்க்கும். அலம்பி= ததும்பி. மண்பெருகி= பெருமைமிகுந்து. வன்திணி= வலிமை செறிந்த. மைந்தர்= வலிமைவாய்ந்த இளைஞர். சிந்துரம்= குடை. வயக்கரி கடவு மருகிடை= வலிமைமிக்க யானைகளைத் தெருவில்செலுத்தும்.. திமிர்ந்து= அப்பிய. செங்கலவை அளறு= செஞ்சந்தனச்சேறு. உடல் இறைத்து= உடலில் - முலைகளில் செழிக்கப்பூசி. கனகவரை= பொன்மலை.

**பொழிப்புரை** : அலைகள் சுருளும் கடலின் மடையைத்திறந்தது போல்பெருகும், மதநீரில் வண்டுகள் மொய்க்க இருகன்னங்களிலும் இருந்து ததும்புமாறு சொரியும் பெருமைபொருந்திய யானைகளை, அழகிய தோள்களுடைய வலிமைவாய்ந்த இளைஞர்கள் செலுத்தும் தெருவில், நிலவுஒத்த முகமுடைய மகளிர்தம் முலைகளில் அப்பிஒளிரும் சந்தனச்சேற்றினை வழித்துஎறிய, அது குவிந்துநிமிர்ந்து வலியபொன்மலை போல் நிலைபெற்ற சிவகங்கை நகராகிய பாவநாசநகரில் எழுந்தருளியுள்ள உலகம்மையைக் காக்குமாறு,

பரந்துபட்ட நிலம் முழுவதையும் தோண்டி உழும் கொம்புடைய **வராகி**, அந்திச்செவ்வானம்போல் சிவந்த விரல்களால் தன்தலைமுடியை வகிர்ந்து முடித்த **மகேசுவரி**, முன்னாளில் தேவர்களின் பசி தீருமாறு பாற்கடல் அமுதைமுகந்து இட்ட **நாராயணி**, கண்களுக்கு மையிடுதலையும், மதநீக் கடலினைச் சொறியும் அயிராவதமாகிய வெள்ளையானையையும் விரும்பும் **இந்திராணி**, வெப்பம்மிக்க நெருப்பாகச் சிவந்தஅழகிய கண்களும் பேய்க்கொடியுமுடைய **காளி**, வெண்மயான கதிர்களுடன் ஒளிரும் அன்னப்பறவையை ஊர்தியாகவுடைய **கலைமகள்**, மென்மையான தோகையுடைய மயிலின் முதுகில் அமர்ந்து போரிட்ட **கௌமாரி** ஆகிய ஆற்றல்மிக்க இந்த ஏழுமாதர்களின் சிவந்த திருவடிகளை வழுத்துவோம்.

**விளக்கம்** : கணவன்மார் செயல் மனைவிமார்க்கும் உரியதாலின் ஏழுகணவன்மார் செயலையும் அவர் மனைவிமார்க்கு ஏற்றிக்கூறினார்.

10. **பத்திரகாளி**

பொதியப் பொருப்பில்வளர்காழ் அகிலைப்புரட்டி ஒளிகால்
புதுமுத்(து )அரித்தவெறியின்
உதரிச்சுருட்டு திரைபாய் பொருநைத்து றைப்பெண் உமையாள்
உலகைப் புரக்கநினைவாம்
உதிரப் பசித்த பசியால் உருமுக்கரிக்கு மதர்வாய்
முனையைப் பரக்கவிரிவாய்
அதிரக் கொடிற்றின் இருசார் களி(று)இட்(டு)அதுக்(கு) ஒருதூர்
அலகைக்கொ டிப்பிணையையே.

**குறிப்புரை** : காழ் அகில்= வயிரம்பாய்ந்த அகில்மரம். ஒளிகால்= ஒளிவீசும். வெறியின்= கடுங்சினம். பொருநை உதரிச்சுருட்டு திரைபாய் என்க. உதரிச்சுருட்டு திரை= வயிற்றைச் சுருட்டும் அலை. உமையாள் உலகு= உமையம்மையாகிய உலகம்மை.

உதிரப்பசித்தபசி= இரத்தம் பருகவேண்டும் என்றபசி. உருமுக்கரி= அச்சம்தரும்யானை. மதர்= களிப்பு. பரக்க= மிகவும். விரிவாய்= பிளந்தவாய். கொடிற்றின் இருசார்= கன்னத்தின் இருபக்கமும். களிறு இட்டு அதிர= ஆண்யானைகளை வைத்து அவை நடுங்க. அதுக்கு= ஒதுக்கிய. அலகைக்கொடி= பேயின் தீக்கொழுந்து. பிணை= பெண்மான்.

**பொழிப்புரை** : இரத்தம்பருகவேண்டும் என்றபசிகாரணமாக, அச்சம்தரும் யானைக்கு ஏற்றவாறுகளிப்புடன் வாயைமிகவும் பெரிதாகப் பிளந்து, கன்னத்தின் இருபக்கங்களிலும் அச்சம்தருமாறு ஆண்யானைகளை வைத்து ஒதுக்கிய, ஒப்பற்ற அச்சம்தரும் பேய்களின் தீக்கொழுந்தாக - மிகக்கொடியதாக விளங்கும் பெண்மானாகிய பத்திரகாளியை

பொதியமலையில் வளர்ந்து, வைரம்பாய்ந்த அகில்மரங்களைப் புரட்டிக்கொண்டு, ஒளிரும் புதுமுத்துகளை அரித்துக்கொண்டு, பெருஞ்சினத்துடன் ஆற்றின் வயிற்றினை - நீரினைச் சுருட்டிக்கொண்டு எழும் பொருநைத்துறைக்குரிய உமையம்மையாகிய உலகம்மையைப்புரக்கவேண்டி நினைத்து வணங்குவாம்.

11. **முப்பத்துமுக்கோடி தேவர்**

கன்னிமதில் வேலித் தமிழ்ச்சிங்கை உலகுடைய
கன்னியைப் பாவ நாசக்
கடவுள்மனை யாட்டியைப் பல்லுயிர்க்(கு) அன்னையைக்
கனகன்உடல் கீண்ட உகிர்வாள்
கொன்நுதி மடங்கலுக்(கு) இளையவளை வேதக்
குலத்துக்கு மூத்த வளைமென்
கொம்பன்ன மேனைக்(கு) உயிரனைய அருமைக்
குமாரத்தியைக் காக்கஓர்
பன்னிருவர் திமிரம்நூ(று) ஆயிரம்கதிர் உதய
பாற்கரர்வெள் ஏ(று)உ கைக்கும்
பதினொருவர் இருகோடி வெண்பிறை அலங்கல்
பனிச்சடில கோடி இறைவர்
முன்இருவர் நான்மறை மருத்துவர் வசுக்கள்கடை
முடியாத எண்ம ராக
முப்பத்து முத்தேவர் ஏத்(து)ஏவரும் பரு(கு)அமுதம்
மூதுரைத்த மதியே

**குறிப்புரை** : முப்பத்து முக்கோடி= முப்பத்துமூன்று வகை. கன்னிமதில்= வலிமையான கோட்டை. பாவநாசக்கடவுள்= அருள்தரு பாவநாசர் / கல்யாணசுந்தரர். கனகன்= இரணியன். கீண்ட= கிழித்த. வாள் கொன்நுதி= வாள்போல் கூர்மையான நகம். மடங்கல்= நரசிங்கம்.குலம்= கூட்டம். மேனை= இமவான் மனைவி.

திமிரம் நூறு= இருளை அழிக்கும். பாற்கரர் பன்னிருவர்= பன்னிரண்டு சூரியர்.( தாத்ரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரண்யன், பகன், திவச்சுவான், பூடன், சவித்ரு, துவட்டன் ஆகியோர். ( பிறவாறு கூறுவதுமுண்டு) வெள் ஏறுஉகைக்கும் பதினொருவர்= வெள்விடைசெலுத்தும் பதினொருவர். ( மாதேவன், அரன்/ சிதன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் ) இருகோடி= இருநுனி. வெண்பிறை அலங்கல்=வெண்பிறை மாலை. பனிச்சடில கோடி இறைவர் எண்மர்= கோடிக்கணக்கான குளிர்ந்தசடையுடைய வசுக்கள் எண்மர் (அனலன், அணிலன், ஆபச்சையன், சோமன், தரன், துருவன், பிரத்யூசன், பிரபாசன்). இருவர் நான்மறை மருத்துவர்= வேதம்நான்கிலும் குறிப்பிடபெறும் மருத்துவர்இருவர் ( அசுவினித்தேவர்கள் இருவர் ( நாஸத்யன், தஸரன்) ( இத்தொகை விரிகள் வடவர் வழக்கு ). ஏத்து ஏவரும் பருகு= வணங்கும் எத்தகையவரும்பருகும் - மனத்தில் பதிக்கும். அமுதம் மூதுரைத்த மதி= அமுதமாக முன்கூறப்பெற்ற ஞானவடிவை - அருள்தரு உலகம்மையை.

**பொழிப்புரை** : இருளை அழிக்கும் நூறாயிரம் கதிருடன் உதிக்கும் **சூரியர் பன்னிருவர்**, வெள்ளிய விடையில் வரும் **உருத்திரர் பதினொருவர்**, இருநுனியுடைய பிறையைமாலையாக அணிந்த குளிர்ந்த சடையுடைய **வசுக்கள் எண்மர்**, நான்குமறைகளிலும் நினைக்கப்பெறும் **மருத்துவர் இருவர்** ஆக முப்பத்துமூவகைத் தேவர்களும்

வலிமையான கோட்டையாகத் தமிழ் சூழ்ந்த விக்ரமசிங்கபுரத்தில் என்றும் கன்னியாக விளங்கும் அருள்தரு உலகம்மையை, பாவநாசக்கடவுளின் மனைவியை, பலவகைப்பட்ட எல்லாஉயிர்க்கும் தாயை, இரணியனது உடலைக்கிழித்த கூரிய வாள்போன்ற கூர்மையான நகமுடைய நரசிங்கமாகிய திருமாலின்

தங்கையை, கூட்டமான வேதங்களில் கூறப்பெறும் மூத்தவளை, மென்மையான மரக்கொம்பு ஒத்த மேனையின் உயிரொத்த அருமைமகளைக் காப்பாராக.

## 2. செங்கீரைப் பருவம்

1. ஒருதனிக் கருணைஅம் கடவுள்பி ராட்டிபத
உகளம்ப ணிந்த கேண்மை
உள்ளத்தின் அவர்அவர்க்(கு) ஏற்றபடி வேண்டுவன
உருவெடுத்(து) அருளும் அம்மை
அருமறைகள் வாய்விட்டு அரற்றுவது கேள்வியின்
அறிந்தவர் வியந்து நோக்க
அசலப்பெ ருந்தலைவன் மனையாட்டி புதல்விஎன்(று)
அருவிநீ ராட்டி முனைவேல்
இருவிழிக்(கு) அஞ்சனம்உ றைத்(து)அணி திருத்திநீ(று)
எழுதிஅமு(து) ஊட்டி முதிரா
இன்இளங்கு தலைகேட்(டு) அம்மம்ம இன்னம்சொல்
இன்னம்சொல் என்ன மகிழத்
திருவருள்சு ரந்துசிறு மகளின்விளை யாடுவாய்
செங்கீரை ஆடியருளே
திக்களா வியநீழல் முக்களாமு தல்வாழ்வு
செங்கீரை ஆடியருளே.

**குறிப்புரை** : ஒருதனி= ஒப்பற்ற. உகள பதம்= இருதிருவடி. கேண்மை= பத்திமை. ஏற்றபடி உருவெடுத்து அருளும் என்க. வாய்விட்டு அரற்றுவது= வெளிப்படியாக கூறுவது. கேள்வியின்= கேட்டு. அசலப்பெருந்தலைவன் மனையாட்டி= இமவான் மனைவியாகிய மேனை. முனைவேல்= கூர்மையான வேல். உறைத்து= எழுதி. முதிரா இன் இளங்குதலை= தெளிவில்லாத இனிய இளங்குதலைச்சொல். அம்ம அம்ம= வியந்து வியந்து. மகளின்= மகள்போல். திக்கு அளாவிய நீழல்= திசைஎங்கும் பரவிய அருள்நிழல். முதல் வாழ்வு= முதற்பொருளின் வாழ்வுப்பொருள்.

**பொழிப்புரை** : ஒப்பற்ற கருணையே வடிவான அம்மையின் இருதிருவடிகளையும் வணங்கிய பத்திமை உள்ளமுடைய ஒவ்வொருவருக்கும் ஏற்றவாறு அவர்கள் வேண்டுகின்றவைகளை அருளுகிறவள் இவ்வம்மை என்று, இவள் இயல்பை அரியமறைகள் வெளிப்படையாக அனைவருமறியக் கூறுவதை வியநது நோக்கியதால்; இமயமலை அரசனாகிய இமவான் மனைவி, இவள்நம்மகள் என்று அருவியில் நீராட்டி, கூரிய வேல்போன்ற இருவிழிகட்கும் மைஎழுதி, அணிகலன்களைச் சீர்செய்து, நெற்றியில் திருநீறு இட்டுப் பாலூட்டி, அம்மையின் தெளிவில்லாத இனிய இளங்குதலைச்சொல் கேட்டு, வியந்து வியந்து, இன்னும்சொல், இன்னும்சொல் என்று வேண்டிகேட்க, அவர்கள் மகிழ அருள்கூர்ந்து கூறிச், சின்னஞ்சிறு மகள்போல் விளையாடுகின்றவளே! செங்கீரை ஆடியருள்க! திசைஎங்கும்பரவிய அருள்நிழல் வடிவான முக்களாலிங்கராகிய முதற்பொருளிடத்து எம்வாழ்வாக விளங்குகிறவளே! செங்கீரை ஆடியருள்க.

**விளக்கம்** : செங்கீரையாடல் பற்றி மகாவித்துவான் தி. மீ. சு. பிள்ளையவர்கள் :

"..................................................பிறங்கும்அக் கரம்இரண்டும்
ஏர்பூத்த நிலனில் பதித்து,ஒரு மலர்த்தாள் நிறுத்தி, ஒர்மணித்தாள் எடுத்து,
எழில்முகம் நிமிர்த்து அசைத்து, இரவிமண்டிலம் மானும் இருகுழை வீசிஆட "
( பெருந்திருப்பிராட்டி பிள்ளைத்தமிழ். செங்கீரை. 1 )

**இலக்கணக்குறிப்பு** : அம்மம்ம= அடுக்கிவந்த வியப்பிடைச் சொற்கள். இன்னும்சொல் இன்னும் சொல் - அடுக்குத்தொடர். சிறுமகளின் - இன் - உவமஉருபு

.

2. சத்திரத்(து) அங்கண்பெ ரும்புவன நிழலிடும்
தலைவரும் புலமை மறைஅந்
தணரும்முதல் ஏனையோர் அனைவரும் புதல்வரொடு

தத்தமக்(கு) உரிய வாழ்க்கை
முத்(து)இணர்ப் பைந்தெரியல் துயல்வரு குயத்தின்
முரண்குவட்(டு)அ ணுக்கும் இடைநூல்
புரிகுழல்ம டந்தையரொடும் பொருநை நீராடி
முதல்வரொடு நின்ப ராவிப்
பத்திரத் தண்பொழில் சூழ்காதொ றும்குழீஇப்
பால்அடிசில் இட்டு முட்டப்
பசித்தவர்கட்(கு) ஈந்(து)உண்டு புனைவன புனந்து
பழவினை துடைத்து நீக்கும்
சித்திரைத் திங்கள்சி றப்புடைய செல்வமே
செங்கீரை ஆடிய ருளே
திக்களா வியநீழல் முக்களாமு தல்வாழ்வு
செங்கீரை ஆடிய ருளே

**குறிப்புரை :** அங்கண்= இடமகன்ற. நிழலிடும்= ஆதரவு தரும். சத்திரத்தலைவர்= அதிசயமான அரசர்கள். புலமை= தெய்வத்தன்மை. வாழ்க்கை ........மடந்தையர் என்க. இணர்முத்து பைந்தெரியல்= கொத்தாக முத்துகளால் ஆன வளமாலை. துயல்வரும்= அசையும். அணுக்கும்= ஒத்த. புரிகுழல்= சுருண்ட கூந்தல். முதல்வரொடும்= சிவபிரானொடு. பராய்= பரவி. பத்திரத் தண்பொழில்= இலைசெறிந்த தண்ணிய சோலை. காதொறும்= பூங்காக்கள் தோறும். குழீஇ= கூடி. அட்டு= சமைத்து. முட்ட ஈந்து= வயிறுநிரம்பத் தந்து. புனைவன புனைந்து= அணியும் அணிகலன் அணிந்து. பழவினை= ஊழ்வினை. சிறப்பு= வழிபடும் சிறப்பு.

**பொழிப்புரை :** இடமகன்ற பெரிய உலகமக்களுக்கு ஆதரவுதரும் அதிசயமான அரசர்களும், மறைவல்ல அந்தணர் முதலியவரும் ஏனையோரும், கொத்தாகக் கோக்கப்பட்ட வளமான முத்துமாலை அசைய குன்றுகளுடன் மாறுபட்டன போன்ற முலைகள், நூல்ஒத்த இடை, சுருண்ட கூந்தல் ஆகியனவுடைய தமது மனைவியரொடு பொருநையில்நீராடி, அருள்தரு பாவநாசரையும் உன்னையும் வணங்கிய பின்னர், செறிந்த இலைகளால் குளிர்ச்சிபொருந்திய சோலைகள், பூங்காக்கள்தோறும் கூடி, பாற்சோறுசமைத்து, பசித்தவர்க்கு வயிறு முட்டவழங்கித்தாமும் உண்டு, அணியத்தக்க அணிகலன்கள் அணிந்து ஊழ்வினைகளத் துடைத்து நீக்கிக்கொள்ள வணங்கும் அனைவரும் , சித்திரை முதல்நாளில் அருளும் சிறந்தசெல்வமானவளே! செங்கீரை ஆடியருள்க. திசைஎங்கும்பரவிய அருள்நிழல்வடிவான அருள்தரு முக்களாலிங்கராகிய முதற்பொருளிடத்து எம்வாழ்வாக விளங்குகிறவளே! செங்கீரை ஆடியருள்க.

**விளக்கம் :** மரக்கிளைகளின் அசைவால் மேலேறும்நீர், இலைகளின் நுண்துளைவழியே நுட்பமாக வெளியேறுவதால் இலைநிழல்கொண்ட இடம் குளிர்ச்சியடன் விளங்குகிறது.

**இலக்கணக்குறிப்பு :** அணுகும் - உவமஉருபு.

3. இன்தமிழ் அலங்கல்நீர் தெளிதருபெ ருங்கொள்ளை
யின்மாலை அருவி சொரியும்
இயல்நெடும் சந்தனவ ரைச்சந்து கொண்டுதலை
ஈர்ம்புனல் திரைகள் வீசி
கொன்றையம் படலப்பொ லங்காடு பாசடைப்
கூவிளக் காடு நிலவுக்
குறுந்துளிதெ றித்தனைய தும்பையங் காடுநிலை
குலையவெங் கறைமி டற்று
மின்தவழ்எ யிற்றின்அர(வு) அம்புலிஉ லைந்திட
விரைந்துபல அடிபெ யர்த்து
வெண்ணிலா முத்தம்கொ டிப்பவளம் வால்வளை
வெறிக்கயல்க டும்பத் தையில்
சென்றகரு ணாநதி குடைந்தாடும் அன்னமே
செங்கீரை ஆடி யருளே

திக்களா வியநீழல் முக்களா முதல்வாழ்வு
செங்கீரை ஆடி யருளே.

**குறிப்புரை** : இன்தமிழ் அலங்கல்= இனியபொதிகை மலை. தெளிதரு பெருங்கொள்ளை நீர்= தெளிவான அளவற்ற நீர்ப்பெருக்கு. மாலை இன்அருவி= மாலைபோல் இறங்கும் அருவி. இயல்= தகுதி. சந்தனவரை= பொதிகைமலை. தலைசந்து= மிகச்சிறந்த சந்தனமரம். ஈர்ம்புனல்= குளிர்ந்தநீர். திரை வீசி= அலைஎறிந்து. படலம்= கூட்டம். பாசடை= பசிய இலை. கூவிளம்= வில்வம். குறுந்துளி நிலவு= சிறுதுளி போன்ற ஒளி. நிலைகுலய= நன்னிலை கெட. மிடற்று வெங்கறை மின்தவள் எயிறு= கழுத்தில் கொடிய நஞ்சும், ஒளிரும் பல்லுமுடைய. அரவம்= நாகம் அம்புலி= கொடியபுலி. உலைந்திட= வருந்த. அடிபெயர்த்து= ஓடிவந்து. வெண்ணிலா முத்தம்= வெள்ளொளி முத்து. வால்வளை= வெண்சங்கு. றி= மூர்க்கத்தனம். படும்= தோன்றும். பத்தையில் சென்ற= கடலுக்குச் சென்ற. கருணாநதி= கருணைப்பேறாறு - பொருநையாறு. . .

**பொழிப்புரை** : இனிய பொதிகை மலையின் அளவற்ற தெளிந்ததண்ணீர், மலைக்கிட்ட மாலை போல் பொதிகைமலையிலிருந்து இறங்கி, தகுதிவாய்ந்த - வயிரம்பாய்ந்த உயரமான தலைசிறந்த சந்தன மரங்களை அடித்துக்கொண்டு, குளிர்ந்த அலைவீசி, பொன்போலும் மலர்களுடைய கொன்றை மரங்கள் கூட்டமாக உள்ள அழகியகாடு, வில்வமரத்தின் பசியஇலைகள் அடர்ந்தகாடு, சிறுதுளி சிதறினாற்போன்று விளங்கும் அழகிய தும்பைக்காடு முதலியவற்றின் நிலைகெட, கழுத்தில்கொடிய விடமும் வாயில் ஒளிரும் பல்லும் கொண்டநாகம், கொடியபுலி ஆகியனவருந்த விரைந்து ஓடிவந்து, வெள்ளொளி வீசும் முத்து, பவளக்கொடி, வெண்சங்கு முரட்டுத்தனமுடைய கெண்டை ஆகியன தோன்றும்கடலுக்குச்செல்லும் கருணைநதியான பொருநையில், கையால்குடைந்து நீராடும் அன்னப்பறவையே செங்கீரை ஆடுக. திசைஎங்கும் பரவிய அருள்நிழல் வடிவான அருள்தரு முக்களாலிங்கடாகிய முதற்பொருளிடத்து, எம்வாழ்வாக விளங்குகிறவளே! செங்கீரையாடியருள்க

4. நாவடித்து எழுதாத மறையும் தொழும்பர்புனை
நாள்பள்ளி யந்தா மமும்
நாரணன்மு டித்துளவும் ஆரணன்மு தற்புலவர்
நகைமுடித் தருவின் மலரும்
பாவடிக்க ளியானை அதளிட்(டு)அ சைத்தகுப்
பாயம்பொ திந்த மேனிப்
பண்ணவன்ச டைமுடி பிறைவயிற்றமுதப்
பசுந்துளியும் விளரி பாடி
பூவடித்(து) இளநற(வு)இ றைக்கும்சு ரும்(பு)இமிர்
பொலங்கொன் றையும் தும்பையும்
பூளையும் பூளைப்ப சுங்காய்எ ருக்கும்மென்
பூங்கொடிப் பச்சை அறுகும்
சேவடிப் பங்கயம் மணக்கும்தி ருத்தோகை
செங்கீரை ஆடி யருளே
திக்களா வியநிழல் முக்களாமு தல்வாழ்வு
செங்கீரை ஆடி யருளே.

**குறிப்புரை** : நாவடித்து எழுதாத மறை= நாவால் சொல்லப்பெற்றதும் எழுதப்பெறாததுமாகிய வேதம். தொழும்பர்= அடியவர். நாள் பள்ளியந்தாமம்= இறைவனுக்குரிய புத்தம்புதுமாலை. முடித்துளவு= அணிந்த துளசி.மாலை. ஆரணன்= பிரமன். புலவர்= தேவர்கள். நகைமுடித் தருவின் மலர்= ஒளிரும்முடியில் சூடிய கற்பகமலர். பாவடிக் களியானை= பரந்த அடிகளுடைய மதயானை. பண்ணவன்= சிவபிரான்.பிறைவயிற்று= பிறைக்கண். விளரி பாடி= விளரிப்பண் இசைத்து. வடித்து= தன்வசமாக்கி. இளநறவு இறைக்கும்= பூந்தேன் சிந்தும். சுரும்பு இமிர் = வண்டுகள் ஒலிக்கும். பொலம்கொன்றை= பொன்போல் ஒளிரும் கொன்றைமலர். பூளை= பூளைப்பூ. பூளைபசுங்காய்= பூளைமொட்டு. சேவடிப்பங்கயம்= சிவந்த திருவடித்தாமரை. திருத்தோகை = தெய்விக மயிலாகிய அன்னையே.

**பொழிப்புரை** : எழுதாது நாவால் கூறுவதுமட்டுமான வேதம், அடியவர் சூட்டும் புத்தம்புது மலர்மாலை, திருமால் சூடிய துளசிமாலை, பிரமன் முதலியதேவர்கள் ஒளிரும் தம்முடியில் சூடிய

கற்பகமலர், பரந்த அடியுடைய மதயானையின் தோலைப் போர்த்திய மேனியுடைய சிவபிரான் தனது சடையில்முடித்த பிறைக்கண் வெளிப்படும் வளமான அமுதத்துளி, , விளரிப்பண்பாடிப் பூந்தேனைச்சிந்தும் வண்டுகள்பாடும் பொன்போல் ஒளிரும்கொன்றைமலர், தும்பைமலர், பூளைப்பூ, பூளை மொட்டு, எருக்கம்பூ, பசியதும் மிகமிகமெல்லியதுமாகிய அறுகு ஆகியன மணக்கும் செந்தாமரையாகிய திருவடிகளையுடைய தெய்விக மயிலே! செங்கீரையாடியருள்க, திசைஎங்கும் பரவிய அருள்நிழல்வடிவான முக்களாலிங்கராகிய முதற்பொருளிடத்து எம்வாழ்வாக விளங்குகிறவளே! செங்கீரையாடியருள்க,

**விளக்கம் :** எருக்கம்பூவும் இறைவனுக்கேற்றதே ;

" நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் ஆங்கவை
கடவுள் பேணேம் என்னா " ( புறம். 106 )

5. வன்பொதுள் இலைப்பணைக் கோழரைக் குங்கும
மலர்ச்சரணம் ஆரம்முதலா
மன்றல் அம்பொழிலில் துவன்றிப்பெ ருந்தேவர்
மாதவக் கிழவர்சூழப்
பொன்பொதி அவிழத்தேன் முறுக்கும் தெறித்(து)இனம்
புதுநறவு சாய்க்கும்இதழிப்
புரிசடைக் கடவுளின் குடமுனி இருக்கும்ஒரு
பொருவில்தென் கயிலைஎனலாய்
மின்பொதி விசும்(பு)அளக் கும்குடுமி பிடரி
மதிவென்கி ழித்(துஉக்கஅமுத
வெண்கனி மெழுக்குறவி ளர்த்துவட கயிலையொடு
வேற்றுமைய தன்றிஉயரும்
தென்பொதிய மால்வரைச் சாரல்குடி வாழும்மயில்
செங்கீரை ஆடி யருளே
திக்(கு)அளா வியநீழல் முக்களா முதல்வாழ்வு
செங்கீரை ஆடி யருளே.

**குறிப்புரை :** வன்பொதுள்= வலிமையுறத் தழைத்த. பணை= மருதநிலம். ஆரம்முதலா மன்றல் அம்பொழிலில் குங்குமமலர்ச்சரணம் கோழரை துவன்றி என்க. ஆரம்முதலா= சந்தனம் முதலிய. மன்றல் அம்பொழிலில்= மணக்கும் அழகிய சோலையில். கோழரை= மரத்தின் அடியில். துவன்றி= பொலிவுடன் விளங்கி. தவக்கிழவர்= தவமுனிவர்கள். பொன்பொதி= அழகிய மொட்டு. அவிழ= மலருமாறு. முறுக்கும் தெறித்து= கட்டவிழ்ந்து. சாய்க்கும்= பொழியும். கடவுளின்= சிவபிரான்போல். மின்பொதி விசும்பு= மின்னல் மூடிய வானம். குடுமிபிடரி= உச்சியின் பின்கழுத்தை. மதிவென்= நிலவின் முதுகு. உக்க= சொரிந்த. கனிமெழுக்கு= கனியின் கெட்டியான சாறு. விளர்த்து= வெண்ணிறம்பெற்று. உயரும்= சிறந்துவிளங்கும்.

. **பொழிப்புரை :** வலிமையுறத் தழைத்த இலைகள் செறிந்தமருதநிலத்தில், சந்தனம்முதலிய மரங்கள் மணக்கும் அழகிய சோலையின் மரத்தினடியில், பெரியதேவர்கள் மாதவத்தில் சிறந்த முனிவர்முதலோர் சூழ. குங்கும மலர்போன்ற திருவடிவிளங்கத் தோன்றி, அழகிய மொட்டுஅவிழ, தேனுடைய கட்டு மலர, இளமையும்புதுமையும் கொண்ட தேனைப்பொழியும் கொன்றைமலர்மாலை சூடியநீண்டசடையுடைய சிவபிரான் இருப்பதைப்போல; அகத்தியமுனிவர் வாழும் அழகிய தென்திசைப்பொதியமலைச் சாரலானது, வடதிசையில் இருக்கும் கயிலைமலைபோல் விளங்குமாறு, மின்னல்மூடிய வானத்தின்உச்சியைத் தொடும் மலையுச்சி, முழுநிலவின் கழுத்தையும் முதுகையும்கிழிக்க, அந்நிலவிலிருந்து ஊற்றிய அமுதமாகிய வெண்மையானகனியின் கெட்டியான சாறு படிந்ததால் பொதிகைமலை வெளுத்து, வடக்கிலுள்ள கயிலை போல் விளங்கும். இத்தகு சாரலுடைய பெருமைபொருந்திய பொதிகைச்சாரலில் குடிகொண்டு வாழும் மயிலே! செங்கீரையாடி அருள்க. திசைஎங்கும்பரவிய அருள்நிழல்வடிவான முக்களாலிங்கராகிய முதற்பொருளிடதில் எம்வாழ்வாக விளங்குகின்றவளே! செங்கீரையாடியருள்க.

**விளக்கம்** : சிவபிரானை ஒத்தவர் அகத்தியர். அவர்வாழும் பொதிகைஉச்சி, நிலவின் கழுத்தையும் முதுகையும் கிழித்ததால் நிலவுசொரிந்த வெள்ளொளியால் பொதிகை, பனிமூடிய வடகயிலை ஒத்தது என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் ஏதுத் தற்குறிப்பேற்றவணி.

6. கொங்(கு)அவிழ் தடக்குமுதமுகை கறித்(து)இழிநறாக்
கொள்ளைய(து) இருந்(து)உ ருப்பக்
குளப்படி நடைப்பகடு உரப்பிமது வாய்க்களமர்
குழுமிவிரி செக்கர் நெடுவான்
செங்கதிர் முகில்பிடரின் மின்கொடி நிறைந்த(து)எனப்
பொற்கயிறு எடுத்து வீக்கி
புரைபடு நுகத்(து)இட்(டு) இறுகிஅலம் வைத்(து)அதில்
பூட்டுறுத்(து) ஊன்றும் பொருவில்
பங்கயம் மடங்கச் சவட்டிஉழு பழனப்
பழஞ்சேறு பட்டு நேமிப்
படர்சிகர நடுவையில் பரிதிவிடு தேரில்
பசும்புரவி கால்வ ழுக்கச்
செங்கயல் இளம்பகடு வெடிதாவு சிங்கைஉமை
செங்கீரை ஆடி யருளே
திக்(கு)அளா வியநீழல் முக்களா முதல்வாழ்வு
செங்கீரை ஆடி யருளே.

**கூட்டுமுறை** : குளப்படி நடைப்பகடு, கொங்கு.... உருப்ப, மதுவாய்க் களமர் குழுமி உரப்பி,விரி செக்கர்......... .... உமைசெங்கீரை ஆடியருளே

**குறிப்புரை** : குளப்பு அடி நடக்ககும்=குளம்புக்காலால் நடக்கும். பகடு= எருமைக்கடா. கொங்கு அவிழ் தடக் குமுதமுகை= தேன்சொரியும் குமுதமலரின் பெரியமொட்டினை. கறித்து= மெல்லுதலால். அதில் இருந்து இழி கொள்ளைநறா உருப்ப= அதிலிருந்து வந்தகொள்ளைத் தேன் மிக. மதுவாய்க்களமர் உரப்பி=கள்குடித்த உழவர் கூடி எருமையை அதட்டி. விரி நெடுவான் செக்கர்= விரிந்துஅகன்ற செவ்வானத்து. செங்கதிர் முகில்= செவ்வொளியுடைய மேகம். பிடர்= கழுத்து. மின்கொடி நிறைத்தது= ஒளிரும் பலகயிறு. வீக்கி= கட்டி. புரைபடு நுகத்து இட்டு= துளையுடைய நுகத்தடியில் வைத்து. இறுக்கி= கட்டி. அலம்வைத்து அதில் பூட்டுறுத்து= கலப்பையில் பூட்டி. ஊன்றும்= உழும். பொருவில் பங்கயம்= ஒப்பற்ற தாமரை. மடங்கச்சவட்டி உழு= மடங்குமாறு மிதித்து உழுத. பழஞ்சேறு பட்டு= முதிர்ந்த சேறாய். நேமி சிகரநடுவையில் படர்=உலக உச்சியின் நடுவில் செல்லும். பரிதிவிடு தேரில் பசும்புரவிகால் வழுக்க= சூரியன் செலுத்தும் தேரில் பூட்டிய வலிமையான குதிரைகளின்கால்கள் வழுக்க. இளம் பகடுசெங்கயல்= இளைய ஆண்செங்கெண்டைமீன். வெடி தாவு= அஞ்சித்தாவும்.

**பொழிப்புரை** : குளம்புக்காலால்நடக்கும் எருமைக்கடா, தேன்சொரியும் குமுதமலரின் பெரியமொட்டை மெல்லுதலால், அதில்இருந்துவழிந்த அளவற்றதேன்மிக்க சேற்றுவயலில், கள்பருகிய உழவர்கூடி, அதட்டி எருமையைச் செலுத்தும்பொருட்டு, விரிந்து அகன்ற செவ்வானத்துச் செவ்வொளியுடைய மேகத்தின் பிடரிலொளிரும் பலகயிறுகளைக்கட்டி, அதை துளையுடைய நுகத்தடியில் இறுகக்கட்டி, நுகத்தடியைக் கலப்பையில் பூட்டி உழ, ஒப்பற்ற தாமரைகள் மடங்க மிதித்து உழுததால் நிலம் முதிர்ந்தசேறாக; உலகவானத்து உச்சிநடுவில் செல்லும் சூரியனின் தேர்க்குதிரைகளின் கால்வழுக்க, ஆண்கெண்டை மீன்கள் அஞ்சித்தாவும் விக்ரமசிங்கபுரத்தில் உள்ள உமையம்மையே செங்கீரை ஆடியருள்க! திசைஎங்கும் பரவிய அருள்நிழல் வடிவான முக்களாலிங்கராகிய முதற்பொருளிடம் எம்வாழ்வாக விளங்குகிறவளே! செங்கீரை ஆடியருள்க.

7. வரிஎறி சிறகின் அறுபதம் நறவுகு
டைந்(து)ஆ டும்தோறும்

அருமடல் நெறிபடு வனருக மனையில்இ
ருந்தாய் வெண்பாலின்
விரிதிரை இருகரை பொரு(து)உடை கடலின்
முழங்(கு)ஆ லம்காலும்
மிடல்அர(வு) அமளியின் நடுவண் இனிதுகி
டந்தாய் ஐந்தாக
உரிஅனல் கனல்புனல் வெளிவளி புவிஎன
ஒன்றாய் நின்றாய்எண்
உபயமும் இருபதும் எழுதொகை புணர்(வு)உற
ஒன்றாம் கோணத்தின்
திரிபுரை திரிபுரம் அடுபகை உறவினர்
செங்கோ செங்கீரை
திரிபுவ னமும்அருள் புரிஉல குடையவள்
செங்கோ செங்கீரை

**குறிப்புரை :** எறிவரி சிறகர் அறுபதம்= விரைந்துவிசிறும் சிறகுகளுடையதும் வரிகளுடையதும் ஆகிய ஆறுகால் வண்டினம். நறவு= தேன். அருமடல்= அழகிய இதழ்கள். நெறிபடு வனருகமனை= மலரும்தாமரை மலர். விரிதிரை= நீண்ட அலை. முழங்குகடலின்= ஆரவாரிக்கும் கடலில். ஆலம் காலும்= நஞ்சுஉமிழும். மிடல் அரவு= வலிமையான ஆதிசேடன். அமளி= படுக்கைமெத்தை. கிடந்தாய்=திருமாலாகப் படுத்திருந்தவளே. உரி ஐந்தாக= உரிய ஐந்துபொருளாகிய. அனல்கனல்= வெப்பம் மிக்க நெருப்பு. ஒன்றாய் நின்றாய்=ஒப்பற்றன விளங்கினாய். எண் உபயமும்= ஈரெட்டும் - பதினாறும். இருபதும். எழு= ஏழு. தொகைபுணர்வு உற= மொத்தமாக ஒன்றுசேர ( 16 + 20 + 7 = 43 ) ஒன்றாகும்= ஒன்றுபட்ட. கோணத் திரிபுரை= கோணத்தில் எழுந்தருளும் உலகம்மை. உலகுடையவள்= உலகிற்கு உரிமையுடையவளாய். திரிபுவனம்= மூவுலகம்.

**பொழிப்புரை :** விரைந்து விசிறும் சிறகுகளுடையதும், வரிகள் உடையதும் ஆறுகால்உடைதும் ஆகிய வண்டுகள்வந்து குடைந்து மொய்க்கும்பொழுதெல்லாம் அழகிய இதழ்களுடைய தாமரையில் இருந்தவளே! வெண்மையான கடலின் நீண்டஅலைகள் கரையில்மோதி ஆரவாரிக்கும் பாற்கடலில் நஞ்சினை உமிழும் வலியஆதிசேடன் ஆகியமெத்தையில் திருமாலாக அறிதுயிலில் கிடந்தவளே! நிலம் முதலான ஐந்தின் கூட்டுப்பொருள்களாகவும், வெப்பம்மிக்க நெருப்பு, நீ, வெறுவெளி, காற்று, பூவுலகம் என்றஐந்து தனித்தனிப் பொருளாகவும் நிற்கின்றவளே! ஒன்றுபட்ட 43 கோணங்களில் எழுந்தருள்கிறவளே! முப்புரங்களையும் பகைத்து எரித்த சிவபிரானின் உறவினளே! மூவுலகிற்கும் உரிமையுடையவளாய் அருள்புரியும் உலகம்மையே! செங்கோ செங்கீரை.

**விளக்கம் :** சிவபிரானின் ஒருபாதியை உமையம்மையும், மற்றொருபாதியைத் திருமாலும் கொண்டதால் அம்மையைத் திருமாலாகக் கூறினார். சிவபிரான் தனக்கென்று உடம்பில்லாதவன் என்பதை,

" ஒருபாதி மால்கொள, மற்றுஒருபாதி உமைகொளவே
இருபாதியையும் இழந்தான் புராரி " ( தனிப்பாடல் )

" ..........................................................திருமேனியிலோர்
பாதியாள் உமை,மற்றைப் பாதியுளதுஎன்னின்
மேகமே நிகர்மேனி மால்உளன், மற்றுஅதற்கும்
வெறுவெளியே இவர்க்கு உளது மெய்ம்மைஇது மகளே."
( வாட்போக்கிக் கலம்பகம். 18 )

8. **வேறு**

பொங்(கு)உளைய வடிசுவலின் நீலப் பரிகட் டும்கதிரின்
இரதம் மிட(று)ஆ ரத்தடவுத் திண்சி லைகள் ஒடிய,இல
வங்கோ லம்சா யப்புண் பட,விண் முகடுதொடு சாய்கைப்
பனசத் தண்ட லைகள்அழி ய,வழி தேறல் திரள்பொற்
செங்க னிய பொரிஅரை நெடும்சூ தம்பே ரப்புன் சிதடிஒலி
கெழுப ராரைக் குடசத்தின் பொழில்க டுவை உயர்சோதி

தருவர்க் கம்குலைய, இடிகுமுறும் மஞ்(சு)ஆ ரும்சா திப்பொங்கர்
அடிபறிய, முதிர்கூனல் கனிதெற்றும் குலைகொள் கவிழ்தலைய
வாழைக் குலம்முற் றும்தொலைய, வளர்கறி படர்ந்(து)ஏ றும்சாரல்
குங்கி லியம்மு றிபட,அ சோகக்கிளர் கொத்தும் பணையும் விழ,நெடிய
பீலிச் சிறகர் பைங்கண்மயில் இனம்அகவி நின்(று)ஆ டும்சோலை
குங்கு மமும் மிடறுவிடு பாளைப் பருவப் பைங்கமுகும்
முதிரும் விளைஏ னல்பொதுள் விக்கும்கதி ரும்தேனும்
வெதிரங் காடும் தாளில்கொங்(கு) அளையும் இளைய மதுபானப்
பறவை தும்பி அளிஞிமிறு படியா மல்தளை விட்(டு)அங்கண்
மலர்அ லர்கணி இரும்கோடும் சாரல் கொம்ப ரொடுகுரவு
மிசைசே ரத்துணி பட்(டு)ஒன்று பலசி தைவு படமோதிப்
புளினக் குன்று செறிஇருக ரைஇ டம்தோ றும்சாடித்
தங்க நறும டல்விரவு கோடல் படலைப் பங்கிமுது
குடுமி வரைகா வல்தலைமைக் குன்றவர்கள்
உறைகு டில்பி டுங்காவென் கூனித் தந்தி முதல்மிருகம்
மாளக் கருவிக் கொன்றுநிமிர் வரிசி லைகள் தூணிக்குவை
வைக்கும் பாழிவ யின்வயின் எறிந்தே மண்கீ றித்தந்த
நுதிபு தைய உழுபாழிக் கருமுள் பன்றி களும்முலை
முறுக ஊறிக் குறுமைக்கண் கள்அமு(து) உகுக வயமும்தாய்
வண்கா வில்தண் தழைவிழையும் உணவாக் கறிக்கும் வருடைகளும்
ஆலக் குமுறிப் பங்கம்எயி(று)ஒ ழுகும்அரவும் வெண்பாதித்
திங்கள் நுழைமு ழைஅரியும் ஆடல் தறுகண் குன்றுபடு
கரட கடதா ரைக்கலுழிக் குஞ்ச ரமும்ஆ டுகராமும்
ஒன்றோ(டு) ஒன்(று)ஆ லத்தெண் திரைக ளொடும்மறிய
வாரிப் புனல்கொட் டும்சுழியின் உழைசு ழலவீ சிப்பருமுத்துக்
கிரண மதியும் நிதியும்போதும் தூவித் தென்பொ ருநைஅருவி
சொரியா ணர்பொ தியத்தென்றல் வரைஅ ருகு வடபாலில்
பொலிவில் சிந்து ரநன்னு தல்வனிதை செங்கோ செங்கீரை.
செந்த மிழும்வ டகலையும் வேள்வித் தருமத்(து) அந்தணர்சொல்
மறையும் நிறைவீ திப்பழனச் சிங்கை உடையம யில்செங்கீரை.

**குறிப்பு : இச்செய்யுள் மலைவீழ் அருவியின் வேகம், பருமை காரணத்தால்நிகழ்ந்தவற்றை வருணிப்பதன்மூலம் மலைவளம் குறிக்கிறது.**

**அடி 1. குறிப்புரை** :பொங்கு நீல வடிசுவல்உளை= மிகக் கருமையான நீண்ட பிடரிமயிருடைய. பரிகட்டும் கதிர்இரதம்= குதிரைகள் கட்டப்பெற்ற சூரியனின் தேர். . மிடறு ஆரத்தடவு = கழுத்தில் பொருந்தி அக்கழுத்தைத்தடவும். திண் சினைகள்= வலிய மரக்கொம்புகள். இலவங்கோலம்= இலவங்கமரம் விண் முகடு புண்படத்தொடு சாய்கை பனசைத்தண்டலைகள் சாய= வானின் உச்சிபுண்படுமாறு தொட்டு வளைந்த பலாமரச்சோலைகள் அழிய. தேறல்வழிதிரள் பொன்செங்கனிய பொரி அரைநெடும் சூதம் பேர= தேன்போன்ற சாறு வழியும் அழகிய செம்மாங்கனிகளுடையதும், சொரசொரப்பான அடியுடையதும் ஆகிய உயரமான மாமரங்கள் வேரற்று வீழ, புன்சிதடி ஒலிகெழு= சிறியசிள்வண்டுகளின் ஒலிமிக்க. பராரை குடசம்= பருத்த அடியுடைய வெட்பாலைமரம். உயர்கடுவை= உயரமான மாவிலிங்கமரம். சோதி தருவர்க்கம்= சாதிலிங்கம் முதலிய மரக்கூட்டம். குலைய= நிலைகுலைய. மஞ்சு ஆரும்= மேகம் தங்கிய. சாதிப்பொங்கர்= சாதிக்காய்ச்சோலை. முதுகூனல் குலை தெற்றும் கனி தலைகவிழ் வாழைக்குலம்= முதிர்ந்து குலையுடன் வளைந்து தலைகீழான தாருடையவாழைக்கூட்டம். கறி= மிளகு.

**அடி 1, பொழிப்புரை** : மிகக்கருமையான நீண்ட பிடரிமயிருடைய குதிரைகள் கட்டப்பெற்ற சூரியனது தேரின் கழுத்தைப்பொருந்தித் தடவும் வலிமையான மரக்கிளைகள் ஒடிய, இலவங்கமரங்கள் சாய,வானத்து உச்சி புண்படுமாறு தொட்டு வளைந்து உரசிய பாலாமரச்சோலைகள் அழிய, தேன்போன்ற சாறு வழியும் அழகிய செம்மாங்கனிகளுடையதும் சொரசொரப்பான அடியுடையதும் ஆகிய உயரமான மாமரங்கள் வேர்பெயர, சிறிய சிள்வண்டுகள் ஒலிக்கும்பருத்த அடியுடைய வெட்பாலைமரம், உயரமான மாவிலிங்கம்,

சாதிலிங்கம் ஆகியமரக்கூட்டம் நிலைகுலைய, இடிமுழங்கும் மேகம் தங்கும் சாதிக்காய்ச்சோலை வீழ்ந்து அழிய, முதிர்ந்த குலையுடன் வளைந்தும், தலைகீழாகக்கவிழ்ந்ததும் ஆகிய வாழை மரங்கள் முற்றும் அழிய, மிளகுக்கொடி வளர்ந்து படரும் மலைச்சாரலில் .

**அடி 2. குறிப்புரை :** பணை= கிளை. நெடியபீலி சிறகர் பைங்கண் மயிலினம்= நீண்ட தோகையும் சிறகுமுடைய மயில் கூட்டம். பாளைவிடு பருவமிடறு பைங்கமுகு= பாளைவிட்டுப் பூக்கும் கழுத்துடைய வளமான பாக்குமரம். விளைமுதிர் ஏனல் கதிர்= விளைந்து முதிர்ந்த தினைக்கதிர், பொதுள்விக்கும்= தழைக்கச்செய்யும். வெதிரம்காடு= மூங்கில்காடு, தாளில் கொங்கு அளையும் மதுபானப் பறவை= கால்களால் தேனைக்கிண்டிப் பருகும் வண்டுஒத்தன . தளை விட்டு= மொட்டுகளை விட்டுவிட்டு. அம்கண் கணி அலர் இருங்கோடு மலர் படியாமல்= மிகுதியான இடங்களில் உள்ள வேங்கை மரத்துக்கிளைகளில் மலர்ந்தமலர்களிலும் அமராமல். ஓடும்= விட்டுவிட்டு வேறிடம் செல்லும். குரவு மிசைகொம்பரொடு சேரத் துணிபட்டு= குரவமரமும் அதன் கிளைகளும்முற்றாகச் சிதைந்து. ஒன்று பல சிதைவுபட மோதி= ஒருதுண்டாகவும் பலதுண்டுகளாகவும் ஒடியுமாறு மோதி. இருகரைசெறி புளினக் குன்று இடம்தோறும் சாடி= இருகரைகளிலும் உள்ள மணல்குன்றுகளை மோதி.

**அடி 2. பொழிப்புரை :** குங்கிலியமரங்களும், பாளைவிட்டுப்பூக்கும் பருவமுடைய கழுத்துடைய பாக்குமரங்களும், தினைக்கதிர்களைத் தழையச்செய்து முதிர்விக்கும் தினப்புனம், மூங்கில்காடு பகுதிகளில் மொட்டுகளைத் தன்கால்களால்கிண்டித் தேன்பருகும் பறவைகளாகிய தும்பி, அளி, ஞிமிறு ஆகியன மொட்டுகளையும், மிக்க இடங்களில் உள்ள வேங்கை மரத்துப் பெரியகிளைகளில் மலர்ந்த மலர்களையும் அருவியின் வேகம் காரணமாக விட்டுவிட்டு, வெளியேறும் சாரலில், குரவமரமும் அதன்கிளைகளும் ஒன்று பலவாக ஒடியுமாறுமோதி, தன் இருகரைகளிலும் உள்ள மணல்குன்றுகளை மோதி,

**அடி 3. குறிப்புரை :** முதுகுடுமிவரை ..........குன்றவர்கள் உறை, தங்கநறுமடல் ........பங்கி என்க. முதுகுடுமிவரை= தொன்மையான உச்சியுடைய மலை. உறைகுடில்= வாழும்குடிசைகள். தங்கநறுமடல் விரவு கோடல்= பொன்னிறத்துடன் நறுமணம்கமழும் பூமுடியுடைய வெண்காந்தள்மலர். படலைப்பங்கி= தழைக்கொத்து. பிடுங்கா= பிடுங்கிஎறிந்து. கூனித் தந்தி= வளைந்தகொம்பு. மாள= இறக்குமாறு. கருவிக்கொன்று= சினத்துடன் கொன்று. நிமிர்= நிமிர்ந்த. வரிசிலைகள் தூணிக்குவை= கொல்லும்பொருட்டு இழுத்துக்கட்டிப் பின்நிமிர்த்திவைக்கப்பெற்ற விற்கள், அம்பறாப்புட்டில் குவியல்கள். பாழி= குகை. வயின்வயின் எறிந்து= ஆங்காங்குக் கொள்ளையிட்டு. மண்கீறித் தந்தநுதி புதையஉழு= நிலத்தைக்கீறி, தமது கொம்பின் நுனி புதைய உழுகின்ற. பழிக்கருமுள் பன்றி= வலிமையானதும் கருமையானதும் ஆகிய முள்ளம்பன்றி. முலை முறுக= முலைகள் பருக்க. குறுமைக்கண்கள் அமுது உகு= மிகச்சிறிய துளைகளில் பால்சுரக்கும். கவயம்=காட்டுப்பசு. தாய்= தாவிப்போய். வண்காவில் தண்தழைகள் விழையும் உணவாகக் கறிகற்கும்= வளமான சோலையில் பசியதழைகளை உணவாகக் கடித்து மெல்லக்கடிக்கும். குருளை வருடை= இளம் மலையாடுகள். ஆலம் குமுறி= நஞ்சு மிகுந்து. பங்கம்= அச்சம். எயிறுஒழுகும் அரவு= பற்கள்வழியே ஒழுகும் நாகம்.

**அடி 3. பொழிப்புரை :** தொன்மையான உச்சியுடைய மலையைக் காப்பதில் தலைமைசான்ற குன்றவர் வாழும், பொன்னிறத்துடன் நறுமணம் கமழும் பூமுடியுடைய வெண்காந்தளின் கூரையுடைய குடில்களைப் பிடுங்கிஎறிந்து, வளைந்த தந்தமுடைய விலங்குகள் இறக்குமாறு சினந்து வில்வளைத்துக் கொன்று,பின்னர் வில்லின் வளைவுக்குக்கட்டிய நாணை விடுத்ததால் நிமிர்ந்த விற்கள், அம்புக் கூடுகள் ஆகியவற்றைக் குவியலாக வைக்கும் குகைகளை இடங்கள்தோறும் கொள்ளையிட்டு, நிலத்தக்கீறி, தமது கொம்பின் நுனி புதையுமாறு உழும் வலிமையானதும் கூர்மையானதுமான முட்களுடைய முள்ளம்பன்றிகள், தமது முலைகள் பருக்குமாறு பால்ஊறி முலையின் நுண்ணிய துளைவழியே பால் சொரியும் காட்டுப்பசு, வளமானசோலையில் பசியதழைகளைத் தாம்தின்னும்உணவாகக் கடித்துமெல்லக்கற்கும் மலையாட்டின் குட்டிகள், நஞ்சு மிகுந்து அச்சம்தருமாறு பற்களில் ஒழுகும் நாகங்கள்.

**அடி 4. குறிப்புரை :** வெண்பாதித் திங்கள்= வெண்மையான அரைநிலா. முழை= குகை. அரி= சிங்கம். ஆடல் தறுகண் குன்றுபடு= வெற்றியால் ஏற்பட்ட அஞ்சாமை, . கடதாரைக்கரடம்= மதம்பாய்ந்த சுவடு. கலுழிக் குஞ்சரம்= மதநீர் பெருகும் யானை. ஆடு கராம்= வெற்றியுடைய முதலை. ஒன்றோடொன்று ஆல= ஒன்றுடன் ஒன்று நெருங்க. . மறியவாரி= நிலைகலங்கவாரிக்கொண்டு. உழை= பக்கங்களில். கிரணமதியும்= கதிர்ஒளியும். நிதி= பலவகை மலைபடு செல்வம். யாணர்= அழகு. பொலிவில் சிந்துர

நன்னுதல்= பொலிகிற ஒளிரும் சிந்துரப்பொட்டணிந்த அழகியநெற்றி. வனிதை= உலகம்மையே. வடகலை= வடமொழி. தருமம்= இயல்பு. பழனம்= நன்செய்நிலம்.

**அடி 4. பொழிப்புரை** : வெண்மையான அரைநிலாப்போன்றுள்ள நுழைவாயிலுடைய குகையில் சிங்கமும், பிறவிடங்களில் வெற்றியால் ஏற்பட்ட அஞ்சாமையைக் குன்றுபோல்கொண்ட தும், மதம்பாய்ந்த சுவடுடையதும் ஆகிய யானையும், வெற்றிபொருந்திய முதலையும் ஒன்றுடன் ஒன்று நெருங்க, தெளிந்த அலைகள்வீசி, உயிரினங்கள் நிலைகலங்கப் பெருவெள்ளம் கொட்டுவதாலான நீர்ச்சுழியின் பக்கங்களில் சுழலுமாறு எறிந்த பருத்த முத்துகள் வீசும்கதிரொளியையும், மலபடு செல்வங்களையும் மலர்களையும் தூவுகிற அழகியபொருநையாற்றின் அருவிசொரியும் அழகிய பொதிகைத்தென்றல்மலையின் அருகே, வடக்கில் ஒளியுடன்பொலிகின்ற சிந்துரப்பொட்டணிந்த அழகிய நெற்றியுடைய உலகம்மையே செங்கோ செங்கீரை! செந்தமிழ்த் திருமுறைகளுடன், வடமொழியிலான வேள்விக்குரிய இயல்புகளுடன் கூடிய அந்தணர்கள் சொல்லும் மறையும் நிறைந்து ஒலிக்கும் வீதிகளும், நன்செய்நிலவளமும் ஒருசேரப்பெற்ற விக்ரம சிங்கபுரத்து அருள்தரு உலகம்மையே! செங்கோ செங்கீரை!

.**விளக்கம்** : இச்செய்யுளின் அருவி வருணனை திருமுருகாற்றுபடையின் பழமுதிர் சோலை அருவி வருணனையை நினைவூட்டும். அது;

" வேறுபல் துகிலின் நுடங்கி, அகில்சுமந்து,
ஆரம் முழுமுதல் உருட்டி, வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு,
விண்படு நெடுவரை பரிதியில் தொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய, நன்பல
ஆசினி முதுசுளை கலாவ, மீமிசை
நாக நறுமலர் உதிர, யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப், பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று,
நன்பொன் மணிநிறம் கிளரப், பொன்கொழியா,
வாழை முழுமுதல் துமியத், தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்,
கறிக்கொடி கருந்துணர் சாயப்,பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்,
கோழி வயப்பெடை இரீ,அக் கேழலோடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாஅடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக், கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று
இழும்என இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே. " ( அடி 295 - 317 )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் இரண்டுகுறில்கள் நிரையசையாகாமல் விட்டிசைப்பது மூலம் தனித்தனி நேரசையாக நின்றுள்ளன. இவ்வாறு நிற்க அனுமதிப்பதை

" விட்டிசைத் தல்லால் தனிக்குறில் நேரசைஎன்று
ஒட்டப்படாது "

என்ற காரிகை இலக்கணத்தால் அமைதிப்படுத்திக்கொள்க. இந்நிலை முன்னும்உளது பின்னும்உளது.

9. **வேறு**

ஈட்டுபெ ரும்புவ னம்பல கோடியும் ஈன்றது பொய்மே னைக்(கு)
இன்னுயிர் நன்மக(வு) என்றுபி றந்ததும் எனைத்(து)உயிர் யாவையும் நின்று
ஊட்டிவ ளர்ப்பது பொய்வள மென்முலை உண்டுவ ளர்ந்தும் எலா
உலகும்வி யாபகம் ஆனது பொய்ஒரு தொட்டில்உள் ஆகி யும்வெம்

சூட்(டு)அர வச்சய னத்தனை முதலியர்  துஞ்சிய ஊழியி னும்
துஞ்சகி லாதது பொய்என மெல்விழி துஞ்சியும் ஆயவி ளை
யாட்(டு)அ யரும்சிறு பேட்(டு)அர(சு) ஓதிமம் ஆடுக செங்கீரை
ஆரப் பொதியச் சாரல்த லைமகள் ஆடுக செங்கீரை.

**குறிப்புரை :** ஈட்டு= தொகுத்த. எனைத்து உயிர் யாவையும்= எவ்வகைப்பட்ட எல்லா உயிர்களையும். நின்று= அழியாதிருந்து. எலா= எல்லா. வியாபகம்= பரவிஇருப்பது. தொட்டிலுள் உள்ளாகியும்= தொட்டிலில் கிடந்தும். வெம் சூட்டு அரவச் சயனத்தனை= கொடிய தலையுடைய ஆதிசேடனை மெத்தையாக உடைய திருமாலை. முதலியர்= முதலியோர். துஞ்சிய ஊழியினும்= இறந்த கடையூழிக்காலத்தும். துஞ்சகிலாதது= இறவாது ஐந்தொழில் புரிந்தது. மெல்விழி துஞ்சினும்= மென்மையான உன்கண்கள் மூடிஇருந்த போதும். ஆய விளையாட்டு அயரும்= படைத்தல் முதலிய ஐந்தொழிலையும் விளையாட்டாக - எளிதில் / மகிழ்வுடன் செய்யும். சிறுபேட்டு ஓதிமம் அரசு= மிகஇளைய பெண்அன்னமாகிய அரசியே. ஆரம்= சந்தனம்.

**பொழிப்புரை :** தொகுப்பாக உண்டாக்கிய பலகோடி உலகங்களையும் நீ ஈன்றாய் என்பதும், மேனைக்கு இனிய உயிர்மகளாகப் பிறந்ததும், எவ்வகைப்பட்ட எல்லாஉயிகளையும் நீ நிலைத்திருந்து காத்து வளர்ப்பதும், ஒருதொட்டிலில் கிடந்தபோதிலும் எல்லாஉலகின் எங்கும் நீ வியாபகம் என்பதும், படமுடைய ஆதிசேடனை மெத்தையாகக்கொண்டு படுத்திருப்பவன் முதலிய அனைவரும் இறந்த கடையூழியிலும் நீ இறவாததும், மென்மையான உன்விழிமூடியும், ஐவர்க்கும் உரிய ஐந்தொழில் புரிந்ததும் பொய் என்னுமாறு அத்தொழில்களை விளையாட்டாகச் செய்யும் மிகஇளைய பெண்அன்னமாகிய அரசியே செங்கீரைஆடுக. சந்தனமரங்களுடைய பொதிகைச்சாரலில் உள்ள தலைவியே செங்கீரை ஆடுக.

**விளக்கம் :** கடையூழியாவது ஐந்தொழில் புரிவோரும் பிறர்அனைவரும் மாண்டநிலை. இதனை;

" கடையூழி வரும்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையான்உன் வாசகத்தின் ஒருபிரதின் ஒருபிரதி கருதினதே " ( மனோன்மணீயம் )

என்றதொடர் விளக்கும். ( தனிமை= தான்மட்டுமான தனிமை. ).

கடையூழிமுடிவில் அனைவரும் இறக்க, அப்பனுள் அமைந்துஇருந்த அம்மை, அப்பன்குறிப்பறிந்து வெளிப்பட்டுப் படைப்புமுதலியஐந்தொழில் புரிந்தமையை இச்செய்யுளின்,

" வெம் சூட்டு அரவச்சயனத்தனை முதலியர் துஞ்சிய ஊழியினும்
துஞ்சகிலாதது " என்றதொடர் குறிக்கிறது

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி; வஞ்சப்புகழ்ச்சியணியுமாம்.

10. சுருட்டிஇ டும்குழை வார்குழை ஓலைது ழாவுநெ டுங்கண்இளம்
தோகைஇ மாசலன் மனைவிமு லைப்பால்துய்த்(து) அலர் சேதாம்பல்
மருட்டிய வாய்அமு(து) ஊறலி னால்அவள் மடியைந னைத்தும்நாள்
மகிழ்நன்அ ழைத்தலும் வந்துபி தற்றுபு மழலைத் தேனின்உளம்
தெருட்டிய வன்செவி ஒக்கந னைத்(து)உரை தெரியா மென்குதலைச்
சில்லரி நூபுர பல்லவம் அஞ்சலி செய்பவ ரைத்தொலையா
அருள்திரு நதியின்ந னைத்துவ ளர்த்தபெண் ஆடுக செங்கீரை
ஆரப் பொதியச் சாரல் தலைமகள் ஆடுக செங்கீரை.

**குறிப்புரை :** ஓலைசுருட்டி இடும் குழை= பனைஓலையைச் சுருட்டி இட்ட காதணி. வார்குழை துழாவு= நீண்டகாதினைத் துழாவும். இமாசலன் இளம்தோகை மனைவி= இமயவானின் இளமைவாய்ந்த மயிலொத்தவளாகிய மேனை. சேதாம்பல்= செவ்வாம்பல் மலர். மருட்டியவாய் அமுது= குதலையால் மயக்கிய வாயின் அமுதம் - எச்சில். மகிழ்நன்= கணவன் - சிவபிரான். பிதற்றுபு= பிதற்றிய. உளம் தெருட்டிய= மனத்தைத் தெளிவித்த. மழலைத்தேனின்= மழலைமொழியாகிய தேனால். ஒக்க= ஒருசேர - முழுவதும். சில்அரி நூபுரப் பல்லவம்= உள்ளிடுபரலுடைய சிலம்பணிந்த அசோகின்தளிர் ஆகியதிருவடி. தொலையா அருள் நதி= முடிவில்லாத அருளாகிய நதி.

**பொழிப்புரை :** பனைஓலையைச் சுருட்டிஇட்ட காதணிஅணிந்த காதினைத் துழாவும் நீண்ட கண்களுடைய இளம்மயிலாகிய இமவான் மனைவிமேனையின் முலைப்பால் பருகியும், செவ்வாம்பல் மலரைமயக்கிய செவ்வாயினின்று ஒழுகும் அமுதாகிய எச்சிலால் அவளது மடியைநனைத்தும், அந்நாளில் கணவனாகிய சிவபிரான் அழைக்க, வந்து பிதற்றிய மழலைத்தேனால் அவன் உள்ளத்தையும்செவியையும் ஒருசேரத்தெளிவித்தும், மென்மையான குதலைமொழிபோல் ஒலிப்பதும், சிலஉள்ளிடு பரல்உடையதும்

ஆகிய சிலம்பணிந்த அசோகந்தளிராகிய உன்திருவடிகளை வணங்குவோரை முடிவில்லா அருள்நதியால் நனைத்தும் வளர்ப்பவளே! செங்கீரை ஆடுக. சந்தனமரங்களுடைய பொதிகைச்சாரலில் உள்ள தலைமகளே! செங்கீரை ஆடுக.

**விளக்கம்** : அந்நாளில் தமதுகாதினை வடிகாதாக - தொங்கும்துளையுடைய காதாக - வளர்க்க விரும்புவோர், தொங்கும்காதின் துளையில் பனைஓலையைச் சிறுகச்சிறுகக் கூட்டிச்சுருட்டி அத்துளையில் வைத்துவைத்துத் துளையைப் பெரிதாக்கியும் பின்னர், கனத்தகாதணி அணிவதன்மூலம்மேலும் வளர்த்தும் வடிகாதாக்கிக்கொள்வர், இதனைக்குறிப்பது " சுருட்டி இடும்குழை " என்றதொடர்.

அம்மை தன்வாயமுதமாகிய எச்சிலால் மேனியின் மடியையும், மழலைத்தேனால் சிவபிரானின் செவியுடன் உள்ளதையும், அருள்நதிப்புனலால் அடியவரையும் நனைத்தாள் என்றார்.

11. சூடகம் முன்கையில் ஆடம ணிக்குழை தோளில் விழுந்(து)ஆடச்
சுட்டியும் ஆடமென் உச்சிமி லைச்சிய சூழியம் நின்றாட
மாடக யாழிசை அம்பவ ளக்கவின் வாய்நில(வு) ஆடநிரை
வகிர்படு மதிநுதல் குறுவெயர் ஆடஓர் மன்றின்உள் நின்றாடும்
நாடக குஞ்சித பாதச ரோருக நம்பன்உ ளம்கவரா
நா(கு)இளம் மேனிது வண்(டு)ஆடப் பதநறு மலர்இதழின்வாய்
ஆடக மென்சிறு கிண்கிணி ஆடவும் ஆடுக செங்கீரை
ஆரப் பொதியச் சாரல்த லைமகள் ஆடுக செங்கீரை.

**குறிப்புரை** : சூடகம்= கைவளையல். சுட்டி= நெற்றிச்சுட்டி. மிலைச்சிய= கட்டிய. சூழியம்= உச்சிக்கொண்டையணிகலன். மாடகம்= முறுக்காணி. கவின்வாய்= அழகியவாய் நிலவு= ஒளி. நிரை வகிர் மதிநுதல்= வரிசையாக வகிரப்பட்ட முடியுடைய நெற்றி. குஞ்சிதபாத சரொருக நம்பன்= தூக்கிய தாமரைத் திருவடியுடைய சிவபிரான். கவரா= கவரும். நாகு இளம்மேனி= மிகமிக இளைய உடம்பு. இதழின்வாய்= இதழில். ஆடகம்= பொன்.

**பொழிப்புரை** : முன்கைவளையல் ஆட, அழகியகுழை தோளில்விழுந்து ஆட, நெற்றிச்சுட்டி ஆட, மென்மையான் மயிருடைய தலைஉச்சியில் கட்டிய கொண்டையணிகலன் ஆட, முறுக்காணியுடைய யாழ்போல்பேசும் அழகியபவளச்செவ்வாயின் ஒளிஆட, ஒப்பற்ற பொன்னம்பலத்தில் ஐந்தொழில்நாடகம் ஆடும் தூக்கிய தாமரைத்திருவடியுடைய சிவபிரான் மனம் கவரும் மிகமிக இளையஉடம்பு துவண்டு ஆட, திருவடியாகிய தாமரை இதழில் கட்டிய பொன்னாலானதும், மென்மையாக ஒலிப்பதும் ஆகிய கிண்கிணி ஆட செங்கீரை ஆடுக. சந்தனமரங்களுடய பொதிகைச் சாரலில் உள்ள தலைமகளே செங்கீரை ஆடுக.

**விளக்கம்** : பொன்னம்பலத்னின் ஐந்துஉறுப்புகள் ஒவ்வொன்றும் ஐந்தொழில் குறியீடுகள் என்பதை;

" தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு " ( உண்மை விளக்கம். 35.)

( தோற்றம்= படைப்பு. துடி= துடிஒலி. திதி= காத்தல். அமைப்பு= அமைந்தகரம். அங்கி= தீ. சங்காரம்= மலசங்காரம். ஊற்றமா= உறுதியாக. திரோதம்= உலகைமறைத்தல். நான்ற= தூக்கிய. முத்தி= அருளுதல் ஆகிய முத்தி. )

## 3. தாலப்பருவம்

1. கொங்கர் முகிழின் நெகிழ்த்(து)உதறிக்
கொன்றைப் பயிரில் படியுநறும்
கொழுந்தண் நறவம் நுகர்வாழ்க்கைக்
குறுங்கண் பறவை இனம்இரியக்
கங்கா நதிப்பெண் ஒருத்திநெடும்
கல்என் திரைவாய்ப் படும்திவலைக்
கவண்கல் எறிந்தும் விழிஎறிந்தும்
காவல் தொழில்பூண்(டு) இனி(து)இருந்த
வெங்கா ளிமனச் சிறுபடலம்

மிடையும் தனிக்கந் தாய்ப்பவள
வெற்பின் தலையில் கழிந்தமுடை
விதிவெண் தலைநாட் டியவேணிச்
செங்காடு) உழக்கி விளையாடும்
தெய்வப் பிடியே தாலேலோ
திருமுக் களவின் கனிகனிந்த
தேனே தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : முகிழின் நெகிழ்த்துக் கொங்கர் உதறி= மொட்டினைமலர்த்தித் தேனைஉதறி. பயிர் படியும்= மலரில் சுரந்துள்ள. . குறுங்கண் பறவை= சிறியகண்களுடைய வண்டு. இரி= விலகிஓட. நெடுங்கல்= பெரிய கல். திரைவாய்ப்படும்= அலையில் தோன்றிய. திவலைக்கவண்கல்= கவணில் இருந்து எறிந்த நீர்த்துளியாகியகல். விழி எறிந்தும்= பார்த்தும்.வெங்காளி = விரும்பத்தக்க கரிய நிறத்தளே. மனம். சிறுபடலம்= மனத்தில் உள்ளஅற்பத்தன்மையுடைய ஆணவமலம். மிடையும் தனிக் கந்தாய்=கட்டிவைக்கும் ஒப்பற்ற கட்டுத்தறியாக. (விதியின் பவள வெற்பு இன் வேணி, கழிந்த முடைவெண்தலை நாட்டிய செங்காடு உழக்கி விளையாடும் என்று கூட்டுக ) விதியின்= பிரமனின். பவளவெற்பு இன்= பவளமலை போன்ற., கழிந்த= கிள்ளி எறியப்பட்ட. முடை= புலாலுடன் கூடிய. வெண்தலை= அறிவில்லாத் தலை. நாட்டிய= ஊன்றி. வேணிச்செங்காடு உழக்கி= சடையுடன் கூடிய குருதிகொப்புளிக்கும்காட்டினை. உழக்கி விளையாடும்= மிதித்து விளையாடும். தெய்வப்பிடியே= தெய்வ இளம்பெண்யானையே. திருமுக்களவின் கனி கனிந்த தேனே= அருள்தருமுக்களாலிங்கரின் அருட்கனி பழுத்த தேனே.

**பொழிப்புரை** : மலரின் தேன்பொருந்திய மொட்டினை மலர்த்தித் தேனை உதறி, கொன்றைமலரில் சுரந்துள்ள மணமும் தண்மையும் உடைய மிக்கதேனைப்பருகும் சிறிய கண்களுடைய வண்டுகள் அதிலிருந்து விலகி ஓடுமாறு; கங்கையாகிய ஒருபெண்ணாக; நீண்டதும், கல்லென்ற ஒலியுடன் கூடியதுமாகிய அலையாகிய கவணால் எறிந்த கல் ஆகிய நீர்த்திவலையை எறிந்தும், கண்களால் பார்த்தும் காவல்தொழில் பார்த்து இருந்த விரும்பத்தக்க கருநிறமுடையவளே!! மனத்தில் உள்ள ஆணவ மலத்தைக் கட்டிவைக்கும் கட்டுத்தறியானவளே! பிரமனின் பவளமலைபோன்ற சடைமுடியுடன் கிள்ளி எறியப்பட்டதும், புலாலுடன்கூடியதும், அறிவில்லாததுமானஅத்தலையில் திருவடிகளைஊன்றி, சடையுடன் கூடிய குருதி கொப்புளிக்கும் அந்தத் தலையை மிதித்துவிளையாடும் தெய்வப்பிடியே! தாலே தாலேலோ! தெய்வமாம் முக்களாலிங்கரின் அருள்பழுத்துக்கனிந்த தேனே! தாலே தாலேலோ.

**இலக்கணக்குறிப்பு** : நெடும் கல்லென் திரைவாய்ப்படும் திவலைக்கவண்கல் - இயையு உருவகம். பவள வெற்பின் - இன் - உவம உருபு. .

2. புழுங்கும் தருணத்(து) அருணவெயில்
புனிதத் தனிக்கை நிமிர்த்(து) எடுத்துப்
புவனப் பரப்பில் உறைந்(து) இருந்த
புதையாக் கறைமூ திருட்கவளம்
விழுங்கும் கதிர்ச்செம் முகக்களிறு
விரவும் இரவு தனைஅறுத்து
வெளிச்சே வகம்போல் குலவிநிற்ப
மேக படலம் பொதிந்துமுனை
மழுங்கும் பொதும்பர்த் தடங்கோட்டு
வளையும் தோட்டிக்(கு) உட்படுத்து
மலையப் பாகன் தன்களிற்றை
மகள்என்(று) உனைவந் தனைபுரியச்
செழுங்குன்(று) அருவிக் கால்நீட்டும்
சிகரா லயத்தாய் தாலேலோ
திருமுக் களவின் கனிகனிந்த
தேனே தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : புழுங்கும்= இருளால் வருந்தும். தருணத்து= நேரத்தில். அருணவெயில்= பொன்ஒளி. நிமிர்த்து எடுத்து= உயர்த்தி நீட்டி. உறைந்திருந்த= படிந்திருந்த. புதையாக் கறை = அழியாத கருமை

மூதிருள்= அடர்காரிருள். கவளம் விழுங்கும்= உண்ணும் ஒருகவளமாக விழுங்கும். கதிர்ச் செம்முகக் களிறு= ஞாயிறாகிய செந்நிறஆண்யானை. விரவும் இரவு தனைஅறுத்து= பரவியுள்ள இரவை நீக்கி. வெளிச்சேவகம்= வானவெளிக்குப் பணி. குலவி நீற்ப= ஒளிசெய்ய. மேகபடலம்= மேகக்கூட்டம். பொதிந்து= மூடி. முனை மழுங்கும் பொதும்பர்= உச்சியை மறைக்கும் சோலை. தடங்கோட்டு= வளைந்த தந்தமுடைய யானை. வந்தனைபுரியா= வணங்க. கால்நீட்டும்= வாய்க்காலாகப் பெருகும். சிகராலயத்தாய்= துவாதசாந்தப் பெருவெளியாகிய கோயிலுடையவளே>

**பொழிப்புரை :** உலகம் இருளால் வருந்தும் நேரத்தில், பொன்ஒளியாகிய புனிதமான கையினை உயர்த்திநீட்டி, உலகமெங்கும் படிந்திருந்த அழியாத காரிருளாகிய கறையை ஒருகவளமாக விழுங்கும் ஞாயிறாகிய செம்முகமுடைய ஆண்யானை, பரவியிருந்த இரவினை அறுத்தெறிந்து, வான்வெளிக்குச் செய்யும் சேவகம்போல் ஒளிசெய்ய; மேகக் கூட்டம் மூடியதால், உச்சிநன்குதெரியாது மறைக்கப்பட்ட சோலையின் வளமான கிளையின் வளைந்த தோட்டிபோன்ற நுனிக்குக் கீழ்ப்படிந்து வணங்கும் மலையரசன் - இமவான் பெற்றயானையாகிய உன்னை வணங்க, வளமான குன்றின்அருவி வாய்க்காலாக ஓடும், துவாதசாந்தப் பெருவெளியாகிய கோயிலுடையவளே! தாலோ தாலேலோ! தெய்வமாம் முக்களாலிங்கரின் அருள்பழுத்துக் கனிந்த தேனே! தாலோ தாலேலோ.

**விளக்கம் :** துவாதசாந்தப் பெருவெளி : இது நம்தலையின் பிரமரந்தரமாகிய உச்சிக்குழிக்குமேல் பன்னிரண்டு தானங்களுக்கு அப்பால் உள்ளஇடம். இங்குச் சதாசிவமூர்த்தியின் இடதுதுடையில் அம்மை வீற்றிருப்பதாகக் கூறுவது மரபு. **இதனைக்கருதியே நாம் வணங்கும்போது நம்இருகைகளையும் தலைக்குமேல் உயர்த்திவணங்கும் மரபுஉண்டாயிற்று.** துவாதசாந்தப்பெருவெளி பற்றி ஸ்ரீ குமரகுருபரர்;

" பரநாத வெளியில் துவாதசாந்த வீடு " ( மீ. பி. தமிழ். சப்பாணி. 4 )

" ..........உயிர்த்துணையாம் தோன்றாத்துணைக்கு ஒர் துணையாகித்
துவாதசாந்தப் பெருவெளியில் துரியம் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு முதலே" ( மீ. பி. த. முத்தப். 1 )

" துரியம் கடந்த துவாத சாந்தப்
பெருவெளி வளாகத்து ஒருபெருங் கோயிலுள்
முளையின்று முளைத்த மூல லிங்கத்து
அளவையின் அளவா..... ( மதுரைக்கலம்பகம். 103. 26 - 29

என்று ஒவ்வோரிடத்தும் ஒவ்வொரு செய்தியாக மூவிடங்களிலும் கூறுகிறார்

3. அருவிச் சிகரப் படாம்முலைப்பச்(சு)
அமைமென் தடந்தோள் குலைக்காந்தள்
அங்கைக் கலைமுற்(று) இருக்குநிலா
அலங்கல் கதிர்வான் மதிவதனம்
பருவப் புயல்வார் குழல்பொதியப்
பாவை உயிர்ப்பச் சந்தனப்பூம்
பழுவச் சிலதி வளர்த்துவிடும்
பணிக்கும் சிறுகால் பசும்குழவி
புருவச் சிலைஆர் வழங்குமுன்றில்
புறத்தில் அகத்தில் காவணத்தில்
பொருவில் படைஏற்(று) இளங்குமரர்
பொலம்திண் கொடிஞ்சித் தேர்உருட்டும்
தெருவில் வளர்ந்து விளையாடும்
சிங்கைப் பதியாய் தாலேலோ
திருமுக் களவின் கனிகனிந்த
தேனே தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** சிகரமுலை அருவிப்படாம்= மலையாம் முலைமேல் அருவியாகிய ஆடை. பச்சு அமை = பசுமையான் மூங்கில். காந்தள் குலைஅங்கை= காந்தள் மலர்க்கொத்தாகிய உள்ளங்கை. கலை முற்று இருக்கு நிலா அலங்கல்= கலைகள் முற்றிய நிலவின் ஒளிபோல் ஒளிரும் அணிகலன். கதிர்வான்

மதி வதனம்= ஒளிரும் வானத்து நிலா முகம். பருவப்புயல் வார்குழல்= கார்காலத்து மேகம்போல் நீண்ட கூந்தல். பழுவம்= சோலை. சிலதி= தோழி. பனிக்கும் சிறுகால்= குளிர்ச்சியான தென்றல். பசுங்குழவி= பச்சிளங்குழந்தை. புருவச்சிலையார்= புருவமாகிய வில்லுடைய மகளிர். வழங்கும் முன்றில்= நடமாடும் இல்முன். காவணத்தில்= பந்தலில். பொருவில் படை ஏற்று= ஒப்பற்ற அலங்காரம் உடைய. பொலன் திண்= பொன்னாலான உறுதியான. கொடிஞ்சி= தேர்த்தட்டின் முன்னிடத்தில் வைக்கும் தாமரைமொட்டுப்போன்ற தொருஉறுப்பு. உருட்டி= தேர் இழுத்து. சிங்கை= விக்ரம சிங்கபுரம்.

**பொழிப்புரை** : மலைபோன்ற முலைமேல் அருவியாகிய ஆடை, பசியமூங்கிலாகிய மென்மையான திரண்டதோள், காந்தள் மலர்க்கொத்தாகிய உள்ளங்கை, கலைமுற்றிய நிலவின்ஒளிவீசும் அணிகலன், ஒளிரும் வானத்து நிலவுஆகியமுகம், கார்காலமேகம்போல் கருமையான நீண்டகூந்தல், பொதியமலையாம் பெண் நுகர அழகியசந்தனச்சோலையாகிய தோழிவளர்த்து விடுக்கும் குளிர்ந்த இளந்தென்றல், புருவமாகிய வில்ஆகியன உடைய மகளிர் நடமாடும் முற்றத்தில் அதன்புறத்தில், அதன்உள்ளே பந்தலில் என்றுஎங்கும், ஒப்பற்ற அலங்காரமுடைய இளங்குமரர்கள்; தேர்த்தட்டில் பொன்னாலான, உறுதியான கொடிஞ்சியுடைய அமைந்ததுமான தேர்களை உருட்டி விளையாடும் தெருவில் வளர்ந்து விளையாடும் விக்ரமசிங்கபுரத்தில் உள்ளவளே! தாலேலோ! தெய்வமாம் முக்களாலிங்கரின் அருள்பழுத்துக் கனிந்ததேனே! தாலோதாலேலோ!

**விளக்கம்** : மகளிர் நடமாடும் இடங்களில் எல்லாம் அலங்கரித்துக்கொண்ட இளங்குமரர் தேருருட்டி விளையாடும் அழகு கூறினார்.

**இல்க்கணக்குறிப்பு** : முன்றில் - இல்க்கணப்போலி. இச்செய்யுள் உருவகவணி.

4\. மூத்து விளைந்து சரியைமுதல்
மூன்றும் கடந்து பரநாத
முடிவில் தெளிந்த சின்மயமாம்
மூலத் தலத்து வேரூன்றி
ஏத்தி வழுத்தும் பழந்தொழும்பர்
இதய கூபத்(து) உவட்டெறிந்(து)ஊற்(று)
இருந்து வழியும் உழுவல்அன்பின்
இன்பப் புனித நீர்பாய
நீத்த மகர சலதிநெடு
நேமிப் பொருப்பு வேலிஇட்ட
நிலத்து வேதத் தொடைவயின்வாய்
நிலையா வகுத்த அறுசமயப்
பாத்தி நிறையப் படர்ந்தபசும்
பயிரே தாலோ தாலேலோ
பாவ நாசத்(து) இனி(து)அமர்ந்த
பாவாய் தாலோ தாலேலோ

**குறிப்புரை** : மூத்து முதிர்ந்து= முதன்மையுடன் முதிர்ந்து. சரியை முதல் மூன்றும்= சரியையை முதன்மையாகக் கொண்டு தொடரும் கிரியை யோகம் ஞானம் ஆகியவற்றை. கடந்து= தாண்டி. பரநாதமுடிவு= ஓங்கார முடிவில். சின்மயம்= ஞானமயம். மூலத்தலத்து= மூலாதாரத்தில். பழந்தொழும்பர்= பழவடியவர். இதய கூபம்= இதயமாகிய நீரூற்று. உவட்டெறிந்து= மேன்மேலும் பெருகி. உழுவல் அன்பு= எழுமையும் தொடர்ந்த அன்பு. நீத்த மகர சலதி= ஆழமானதும் மீன்கள் நிறைந்ததும் ஆகிய நீருடைய. நேமி பொருப்பு வேலியிட்ட= கடல் மலை ஆகியன எல்லையாகச்சூழ்ந்த. வேதத்தொடைவயின்வாய்= வேதமாகிய மாலைக்கண். நிலையா= நிலையானதாக. பாத்திநிறையப் படர்ந்த= பண்படுத்திய நிலத்தில் செழித்துப்படர்ந்த.

**பொழிப்புரை** : முதன்மையுடன் முதிர்ந்த சரியையை முதலாவதாக்கக் கொண்ட கிரியை யோகம் ஞானம் ஆகியவற்றைக்கடந்த ஓங்காரத்தின்முடிவில் தெளிவுடன் விளங்கும் ஞானமயமமான மூலாதாரத்தில் வேர்பதித்து, போற்றி வணங்கும் பழவடியவர்களின் இதயமாகிய நீரூற்றில் பெருகிவளர்ந்து, அதிலிருந்து வழியும் எழுமையும் தொடர்ந்த அன்புநீர்பாய, அதனால் ஆழமானதும் மீன்கள் நிறைந்ததும் ஆகிய கடல் மலைஆகியன சூழ்ந்த உலகில், வேதமாகிய மாலைக்கண்

நிலையானதாக வகுக்கப்பெற்ற ஆறுசமயங்களாகிய பண்படுத்திய நிலத்தில் செழித்துப் படர்ந்த பசியபயிராக விளங்குகிறவளே! தாலே தாலேலோ! பாவநாசமாகிய விக்ரமசிங்கபுரத்தில் இனிமைதர எழுந்தருளியுள்ள பாவையே! தாலோ தாலேலோ.

5. பொருது கரைகொன்று இரங்குதடம்
புணரி அமுதக் கடல்நடுவள்
புதுப்பூங் கடப்பச் சோலையின்வாய்
புரைதீர் கடவுள் மணிகுயிற்றும்
சுருதி பயில்மண் டபத்(து)இருந்த
தோற்றம் எனமுட் புறக்குடக்காய்
தூக்கு முதுகு வடிப்பலவும்
சூதத் தருவும் பெயர்த்(து) எறிந்து
வருதண் தரங்கப் பொருநைநதி
வற்றா நெடுநீர்ப் புறம்கிடக்கும்
மலர்க்கா வணத்தில் உலைமுகத்தில்
மாட்டி உருக்கும் பொலன்இமைத்த
பருதி மதிள்வான் சினகரத்தில்
பயிலும் குயிலே தாலேலோ
பாவ நாசத்(து) இனி(து)அமர்ந்த
பாவாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கரைகொன்று= கரையை இடித்து.இரங்கும்= ஒலிக்கும். தடம் புணரி= வளைந்த அலை. நடு= பூமி. அமுதக்கடல்= பெருமைபொருந்திய கடல். வள்= வளம். சோலையின் வாய்= சோலையில். புரை= குற்றம். கடவுள்மணி குயிற்றும்= தெய்விக மணிகள் பதித்த. சுருதிபயில்= வேதம் பயிலும். தோற்றம்= காட்சி. முள்புறக் குடக்காய்= வெளியே முட்களுடைய பலாக்காய். தூக்கு முதுகு வடிப்பலவும்= தொங்கும் வெளிப்பக்கமுடையதும். வடி= தேன். சூதத்தரு= மாமரம். தண்தரங்கம்= தண்ணிய அலை வற்றாநெடுநீர்வரு தண்தரங்கப் பொருனைநதிஎன்றுகூட்டுக. புறம் கிடக்கும்= கரையில் உள்ள. காவணம்= மலர்ச்சோலை. உலைமுகத்தில்= உலையிடம். மாட்டி= வைத்து. பொலன் இமைத்த= பொன் ஒளிரும். பருதி மதிள் சினகத்தில்= சூரியனை அளாவும் மதிலுடைய கோயிலில். பயிலும்= எழுந்தருளியுள்ள.

**பொழிப்புரை** : கரையைமோதி இடித்து ஒலிக்கும் வளைந்த அலைகளுடைய பெருமைபொருந்திய கடல் சூழ்ந்த பூமியில், வளமான புத்தம்புதிய பூக்களுடைய கடப்பஞ்சோலையில், குற்றமற்ற தெய்வமணிகள் பதித்ததும் வேதம்ஒலிப்பதும் ஆகியமண்டபத்தில் இருந்தகாட்சிபோல்,வெளியே முட்கள் உடையதும், குடம்போல்பருத்ததும், மரத்தின்வெளிப்பக்கம் தொங்குவதும், தேன்போன்ற பழங்களுடையதும் ஆகிய பலாமரம், மாமரம் ஆகியவற்றை வேருடன் பெயர்த்துஎறிந்துவரும் வற்றாத நீரலைகளுடைய பொருநைப்பேராற்றின் பக்கம்உள்ள மலர்ச்சோலையிலும்; உலையில் வைத்து உருக்கும் பொன்போல் ஒளிர்வதும், வானத்துச்சூரியனை அளாவும் மதிலுடைய கோயிலிலும் எழுந்தருளியுள்ள குயிலே! தாலோ தாலேலோ! பாவநாசத்தில் - விக்ர்மசிங்கபுரத்தில் இனிமைதர எழுந்தருளி பாவையே தாலோ தாலேலோ!

**விளக்கம்** : கடப்பஞ்சோலை, வேதமண்டபம், மலர்ச்சோலை, கோயில் எங்கும் உள்ளவள் என்றார்.

6. மட்(டு)ஆர் அளகத் திருத்தாயர்
வாய்விட்(டு) அழுமுன் பசிக்(கு)இரங்கி
மணிக்கால் தொட்டில் விட்(டு)இறக்கி
மடிமேல் இருத்தி முத்தாட்டிக்
கட்(டு)ஆர் மணிக்கச்(சு) இறுக்கஒட்டாக்
கதிர்மா முலையின் முகத்(து)அருகு
கரும்கண் திறந்து பிதிரோடு
கனியும் சுவைபால் நிலத்(து)ஒருபீர்
விட்(டு)ஆ டகக்கை வலம்புரியின்

வெள்வாய் விளிம்பு துளும்பவிட்டு
விம்பக் கனிவாய் நெறித்(து)ஊட்டி
மெல்லென்(று) உருக்கிக் கிடந்தஅணைப்
பட்டா டையின்மேல் கிடக்கும்ஒரு
பச்சைக் குழந்தாய் தாலேலோ
பாவ நாசத்(து) இனி(து)அமர்ந்த
பாவாய் தாலே தாலேலோ.

**குறிப்புரை :** மட்டு= தேன். அளகம்= கூந்தல். முத்தாட்டி= முத்தம்தந்து. கட்டு ஆர் மணிக்கச்சு= கட்டப்பெற்ற அழகிய முலைக்கச்சு. இறுக்கஒட்டா= மேலும் இறுக்கிக்கட்டவியலாத. முகத்து அருகு= நுனியின் அருகில் உள்ள. கருங்கண்= பெருமைபொருந்திய முலைஇடம். பிதிரொடு கனியும்= துளியளவில் இனிக்கும். பீர்= துளி. ஆடகக்கை= பொன்போன்ற கையால். வலம்புரியின் வெள்வாய்= வலம்புரிச்சங்கின் வெண்மையான் உள்ளிடம். துளும்ப= நிரம்ப. விம்பக்கனி= கொவ்வைக்கனி. உருக்கி= இளக்கமுற்று. அணை= தலையணை . .

**பொழிப்புரை :** தேன்பொருந்திய மலர்சூடிய கூந்தலுடைய அழகியதாய்மார், உலகம்மையாகிய குழந்தை வாய்விட்டு அழுமுன் அதன்பசிக்கு வருந்தி, மணிகள் பதித்த கால்களுடைய தொட்டிலிலிருந்து தூக்கி, தமது மடியில் அமர்த்தி, முத்தமிட்டு, இறுகக்கட்டபெற்ற அழகிய கச்சினால் மேலும் இறுக்கமுடியாது ஒளிரும் பருத்தமுலையின் நுனி அருகில் உள்ள பெருமைபொருந்திய இடத்தைத் திறந்து, துளியவில் இனிக்கும் முலைப்பாலின் ஒருதுளியை நிலத்தில்விட்டு, தனதுபொன்னான கையால் வலம்புரிச்சங்கின் வெண்மையான உள்ளிடம் நிரம்புமாறு பீய்ச்சி, குழந்தையாகிய உனது கொவ்வைக்கனி போன்ற வாயினை நெறித்துப் புகட்டி,மென்மையுடன் இளக்கமான அணையுடன் கூடியபட்டாடையில் கிடத்தக் கிடக்கும் மிகஇளைய குழந்தையே! தாலேலோ! பாவநாசமாகிய - விக்ரமசிங்கபுரத்தில் இனிமைதர எழுந்தருளியுள்ள பாவையே! தாலே தாலேலோ!

**விளக்கம் :** பச்சிளங் குழந்தைக்குப் பால்புகட்டுமுன் நிலமகளை எண்ணி நிலத்தில் ஒருசொட்டுவிடும் மரபையும் மறவாது கூறுகிறார்.

**வேறு**

7. மடல்விடு கமலா சனவிதி விதிமுறை வீணே போகாமே
மரகத மழைமே னியன்அருள் புரிதொழில் மாறாய் மாறாமே
கடல்மறி திரைநீர் இடைபல உல(கு)உயிர் பாழாய் மூழ்காமே
கவுள்மத ஐராவத நடஅரசு விணோர்வாழ்வு ஓயாமே
படஅடி எழுதா வருமறை முதலிய மாநூல் மாளாமே
படர்சினை வடஆல் நிழல்வயின் மவுனம தாய்மே வாதேஓர்
தடஇம கிரிமேல் அரன்மணம் விழைபவள் தாலோ தாலேலோ
தமிழ்முனி தொழமால் விடைவரும் உல(கு)உமை தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** மடல்விடு= இதழ்மலர்ந்த. கமலாசன விதி= தாமரையை இருக்கையாகக் கொண்ட பிரமன். விதிமுறை= விதித்த விதிமுறைகள். மரகத மழைமேனியன்= மரகதமணியையும் மேகத்தையும் ஒத்த உடம்புடைய திருமால். அருள்தொழில்= காத்தல் தொழில். இடைபல உலகு= இடைப்பட்ட பலஉலகம். பாழாய் மூழ்காமே= வீணே அழியாமல். கவுள் மத ஐராவத நட அரசு= கன்னத்தில் மதநீர் ஒழுகும் ஐராவதயானையை நடத்தும் இந்திரன். விணோர்= தேவர்கள். ஓயாமே= அழியாமல். படம் அடி எழுதா மறை= எழுத்துஉருவில் அடிகள் எழுதப்பெறாவேதம். மாநூல்= சிறந்தநூல்கள். சினைபடர் வடஆல் வயின்= கிளைகள் படர்ந்த விழுதுகள்உடைய ஆலமரத்தின் கீழ். மவுனமதாய் மேவாதே= மவுனமாய் அருளிய உபதேசத்தில் மவுனமாகவே பொருந்தாமல். அரன்மணம் விழைபவள்= சிவபிரானை மணக்க விரும்பியவள். தமிழ்முனி= அகத்தியர். மால்விடை= திருமாலாகிய விடையூர்தி. உலகுஉமை= உலகம்மை என்று சுட்டப்பெறும் உமையம்மையே.

**பொழிப்புரை :** இதழ்கள் மலர்ந்த தாமரையை இருக்கையாகக்கொண்ட பிரமன் விதித்த விதிமுறைகள் வீணாகாமலும், மரகதமணியையும், மழைமேகத்தையும் ஒத்த உடம்புடைய திருமால் செய்யும் காத்தல்தொழில் அதற்கு மாறுபட்ட அழித்தல் தொழிலாகாமல், மறிந்துவிழும் அலைகளுடைய கடல்சூழ்ந்த உலகஉயிர்கள் வீணே அழியாமல், கன்னங்களில் மதநீர் ஒழுகும் ஐராவதயானைமேல்வரும்

இந்திரன் தேவர்கள் ஆகியோர் வாழ்வு அழிந்துவிடாமல், எழுத்துருவில் எழுதப்பெறாத வேதம் முதலியசிறந்த நூல்கள் அழியாமல், படர்ந்தகிளைகளுடைய வடஆலின்கீழ் நான்குமுனிவர்க்குச்செய்த மவுனஉபதேசம் மவுனமாகவே பொருந்தாமல், ஒப்பற்ற இமயமலைமேல் உள்ள கயிலாயத்தில் சிவபிரானை மணக்க விரும்பியவளே! தாலோ தாலேலோ! தமிழ்முனிவராகிய அகத்தியர் வணங்க, திருமாலாகிய விடைமேல் வரும் உலகம்மையாகிய உமையம்மையே தாலோ தாலேலோ.

**விளக்கம்** : திருமாலின் நிறத்தை, " மையோ மரகதமோ மழைமுகிலோ மறிகடலோ " என்று கம்பரும்," நீலநெடுங்கிரியும் மழைமுகிலும் அலைகடலும் காயாவும் நிகர்க்கும் இந்தக் கோலமும் " என்று வில்லிபுத்தூராரும் போற்றுவர்.

யானைக்கு மதநீர் பெருகுமிடங்கள் அதன் மத்தகம், கன்னம், பீசம் ( ஆணுறுப்பு ) மூன்றும் ஆகும்.

வேதத்தை எழுதாமறை என்றதன் காரணம் பறறிக்கூறும் ஆய்வாளர், ஆதிமுதல் மிகப்பலஆண்டுகள் வரை அதன் ககரவரிசை போன்ற சிலவாகிய நான்குநான்கும், தனித்தனிஎழுத்து வரிவடிவம் பெறாமை என்றும், மறையைப் பிறர்அறியக்கூடாது என்ற எண்ணமுமே என்றும் இருகாரணம் கூறுவர். ..

கல்லால மரத்தின் கீழ் சனகாதியர்க்குச் செய்த மவுனஉபதேசத்தை,

" கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய .... "

என்று மிகமிகச்சுருக்கமாக சிவஞானபோதத்தில் மெய்கண்டாரும்,
இதனைப் பரஞ்சோதி முனிவர் சற்ற விரிவாகத் தமது திருவிளையாடற் புராணத்தில்,

" கல்லாலின் புடைஅமர்ந்து நான்மறைஆ றங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்குஇறந்த பூரணமாய் மறைக்குஅப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்தனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவனை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல்வாம் "

அருளியுள்ளனர்.

சிவபிரானின் ஊர்தியாகிய விடை, திருமாலாவார் .

" சினமால்விடை உடையான் " ( திருவாசகம் 506 )

**இலக்கணக்குறிப்பு** : விணோர் - இடைக்குறை .

8. உருஎனில் உருவாய் அருஎனில் அருவாய் உயிரெனில் உயிரேயாய்
உளதெனில் உளதாய் இலதெனில் இலதாய் உணர்(வு)எனில் உணர்வேயாய்
இருள்எனில் இருளாய் ஒளிஎனில் ஒளியாய் இசைஎனில் இசையேயாய்
இயல்எனில் இயலாய் அயலெனில் அயலாய் எமர்எனில் எமரேயாய்
அருள்எனில் அருளாய் மருளெனில் மருளாய் அறி(வு)எனில் அறிவேயாய்
அலைஎனில் அலையாய் மலைஎனில் மலையாய் அணுவெனில் அணுவாய்ஓர்
சரிதையின் அமையா அமைவினள் இமயா சலமகள் தாலேலோ
தமிழ்முனி தொழமால் விடைவரும் உல(கு)ஏழ் தருபரை தாலேதாலேலோ.

**குறிப்புரை** : இசை= இசைத்தமிழ். இயல்= இயற்றமிழ். அயல்= இவையல்லாத வேறு. சரிதை= ஒழுக்கம். அலை= நீரின்அலை. பரை= உமையம்மை.

**பொழிப்புரை** : வெளிப்படை.

9. **வேறு**

பருமநெ டும்களி(று) உடலம் வகிர்ந்த பசும்புண் அசும்(பு)ஊறும்
பச்(சு)உதிரத்(து) அடிமுடை நாறும்உரிவைப் பருவப் புயல்மூடும்
குருமழ வெயில்கள் விளிம்பு தளும்பிய கோடீ ரப்பழுவக்
குலமா ணிக்க மலைபடு போகம் குழைபயிர் மாதேவி
உருமுஉ றழ்வெடி குரலுடை படுகண்டை ஒலிப்பந டாவுகடா
ஊர்திஎ மன்பதி குறுகா(து) உன்பத உகளம்வ ணங்கினர்சீர்
தருமன பஞ்சரம் வளரும்இ ளங்கிளி தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்பயில் சிங்கைப் பதிஉமை தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : பருமநெடும்= பருத்தபெருமைவாய்ந்த. களிறு= ஆண்யானை. வகிர்ந்த= பிளந்த. பசும்புண் = புதுப்புண். அசும்பு ஊறும்= ஊற்றாக ஊறும். பச்சு உதிரம்= புதுக்குருதி. முடைநாறும் அடி= புலால் நாறும் அடியினையுடைய. பருவப்புயல் மூடும்= கார்காலமேகமாக விளங்கும் உலகம்மை போர்த்துக்கொள்ளும். மழகுரு= இளம்ஒளி - காலைவெயில். விளிம்பு தளும்பிய= ஓரங்களில் சிதறிய. கோடீரப் பழுவம்= சடைக் காடு குலமாணிக்க மலை= மாணிக்கமலையாகிய சிவபிரான். படுபோகம் குழைத்த பயிர்= அனுபவத்தில் குழையச்செய்த செயல். மாதேவி= பார்வதி தேவியாகிய அருள்தரு உலகம்மை. உருமு உறழ்= இடியேற்றை ஒத்த. வெடிக்குரல் உடை= பெருங்குரல் உடையது. படுகண்டைஒலிப்ப= முதுகில் தொங்கும் கண்டாமணி( பெருமணி ) ஒலிக்க. நடாவு கடா ஊர்தி எமன்= செலுத்திவரும் எருமைக்கடா ஊர்தியுடைய எமன். பதிகுறுகாது= உலகம் அடையாமல். உகள பதம்= இருதிருவடிகள். வணங்கினர் சீர்தரு= வணங்கியவர்களின் சிறப்புடைய. மனபஞ்சரம்= மனமாகிய கூடு.

**பொழிப்புரை** : பருத்ததும் பெருமைவாய்ந்ததுமான ஆண்யானையின் உடலைப்பிளந்ததாலான புதுப்புண்ணிலிருந்து ஊற்றாக ஊறும் புதுக்குருதியுடன் புலால்நாறும் தோலைப் போர்த்துக்கொண்ட கார்காலமேகம் ஒத்தவளே! காலைநேரத்து வெயில்போல் ஓரங்களில் ஒளிசிதரும் கூட்டமான சடைக்காடு உடைய மாணிக்கமலையாகிய சிவபிரானை அனுபவத்தில் குழையசெய்தவளாகிய பார்வதிதேவியாம் உலகம்மையே! இடியேறு ஒத்த குரலுடன் முதுகில்தொங்கும் கண்டாமணி ஒலிக்கச் செலுத்திவரும் ஆண்எருமையை ஊர்தியாக உடைய எமனுலகை நான்அடையாதுகாப்பவளாய், உன் இருதிருவடிளையும் வணங்குவோரது சிறப்புத்தரும் மனமாகிய கூட்டில் வளரும் இளம்கிளியே! தாலோ தாலேலோ! தமிழ்ச்சங்கத்தின் தமிழ்பயிலும் விக்ரமசிங்கபுரத்தவளே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : " நாம் நினைப்பதை நாம் ஏவாமல் உணர்ந்து கைசெய்வதுபோல், சிவபிரான் நினைப்பதை அவன்ஏவாமல் செய்து முடிப்பவள் அம்மை" - உலகம்மை என்பது சிவஞானசித்தியார் முடிபு ஆதலின், யானைத்தோல் போர்த்தவளாக அம்மையைக் கூறினார். இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்து வேட்டுவவரியில் அம்மையைப்பரவும் வேட்டுவர்;

" ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரிஉடுத்துக்
கானத்து எருமைக் கருந்தலைமேல் நின்றாயால் "

என்று பரவியதாகப் பாடுவார்

10. திணிந்திடு பொற்குவ(டு) ஆயிர பந்திச் செம்பொன் நெடுங்கிரிவாய்த்
தீபமி டும்சிறு தட்(டு)என முட்டுதி சைப்புவ னம்தோறும்
பிணிந்திடும் ஐந்துபு புலத்தின் வழிப்படு பேதைம னத்தினைஉன்
பேழைமு கைக்கம லச்சரண் வைத்(து)அருள் பெற்றவர் நன்பசியும்
துணித்திடு நெட்டைமு டப்பிறை கட்டுது வண்டகொ டிப்பவளத்
துய்யக திர்ச்சடை ஐயனை வைகல் சுடும்தொ ழிற்பசியும்
தணித்திட மூரல்வி ருந்திடு அம்பிகை தாலோ தாலேலோ
சங்கத்த மிழ்பயில் சிங்கைப் பதிஉமை தாலோ தாலேலோ

**குறிப்புரை** : திணிந்திடு= நெருங்கிய. பொற்குவடு= பொன்போல் பொலியும் உச்சிகள். பந்தி= வரிசை. செம்பொன் நெடுங்கிரிவாய்= மேருமலைக்கண். மூட்டு= நெருங்கிய. புவனம்= உலகமக்கள். பிணிந்திடும்= சேர்த்துக்கட்டப்பெற்ற. ஐந்து புலம்= சுவை ஒலி ஊறு ஓசை நாற்றம் ஆகிய ஐந்து அறிவு. பேதை மனம்= அறிவில்லா மனம். கமலமுகைச் சரண்= தாமரைமலர் ஒத்த திருவடி. நன்பசி= அருட்பசி. துணித்திடு= குறைக்கப்பெற்ற. நெட்டைமுடைப்பிறைக் கட்டு= நீண்டு வளைந்த மூன்றாம்பிறையால் கட்டப்பெற்ற கட்டு. துவண்ட= நெகிழ்ந்த. வைகல்= நாடோறும். தொழில்பசி= ஐந்தொழில் வேட்கை. மூரல்விருந்து இடு= புன்முறுவல் ஆகிய விருந்தால்நிறைவேற்றும்.

**பொழிப்புரை** : நெருங்கியதும் பொன்னாலானதும்போல் பொலியும் ஆயிரம்உச்சிகளுடைய நீண்ட பொன்மலையாகிய மேருமலைக்கண் நெருங்கிய தீபமிட்ட சிறுதட்டுப்போல், உலகில் நெருங்கிய திசைதோறும் உள்ளமக்களுடன் சேர்த்துக்கட்டப்பெற்ற ஐந்துபுலன்களின் வழிப்பட்ட அறிவில்லா மனத்தை, உனது பெருமைபொருந்திய தாமரைமலர்போன்ற திருவடிகளில் வைத்து உன்னருள்பெற்றவர்களின் அருட்பசியையும்; குறைக்கப்பெற்றதும் நீண்டதுமாகிய வளைந்தபிறையால் கட்டப்பெற்ற கட்டுநெகிழ்ந்தது போல் விளங்கும் வளமான பவளக்கொடிபோல் ஒளிரும்விரிந்த சடையுடைய சிவபிரானின், நாடோறும் ஐந்தொழில்செய்யவேண்டுமே என்று வருத்தும் தொழில்பசியையும் தணியச்செய்யும் புன்னகையாகிய

விருந்துஇடும் அம்பிகையே! தாலோ தாலேலோ! சங்கத்தமிழ் பயிலும் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளி - யுள்ளவளே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : ஐம்புலன்களும் சிற்றறிவு தருவனவாதலின் புலன்களைத் தீபமிடும் சிறுதட்டு என்றார். வளைந்த பிறையால் கட்டப்பெற்ற கட்டு நெகிழ்ந்ததால் விரிந்த சடை என்றார். ஐந்தொழில் செய்கிறவள் அருள்தரு உலகம்மையேயாயினும் சொல்லாமல் சொல்லி ஏவும்கருத்தா சிவன். அவன் வருந்தாமல்இவள் செய்வதாகக்கூறினார். அடியவர்களின் அருட்பசியையும், சிவபிரானின் ஐந்தொழிற்பசியையும் தன் புன்முறுவலால் தீர்ப்பவள் அம்மை என்றார்.

11. கொன்னவில் வளைஉடல் வள்வாய் நேமிக் கோன்முத லியர்பரவும்
கொள்ளைச் சும்மையும் மெய்ம்முனி வர்அவ ரொடுகுட முனியும்
பன்னரு முதுமறை யாவும் விராவிப் பழஅடி யவர்நின்(று)
பழிச்சிமு ழக்கும் சதிமுறை பிறழாப் பாணிப தம்பிறழாக்
கன்னியர் அமிழ்தின் மிழற்றும் பாடல் கம்பலை யும்குளிரும்
கடவுள் பல்லிய ஒலியும் தனது கலிப்பொடு மாறுசெயச்
சன்னிதி முன்வரு நன்நதி உடையாய் தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்பயில் சிங்கைப் பதிஉமை தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கொன்நவில்= பெருமைகூறும். வளைஉடல்= வளைந்த உடம்பு. வள்வாய்= வளைந்த வாய். நேமி= சக்கரஆயுதம். கோன்= திருமால். கொள்ளைச்சும்மை= மிகுந்த ஒலி. மெய்ம்முனிவர்= ஞானமுனிவர்கள். குடமுனிவர்= அகத்தியர். விராவி= கலந்து. பழிச்சி= போற்றி. சதிமுறை= தாளமுறை. பாணிபதம்= கைத்தாள அளவு. மிழற்றும்= இனிக்கப்பாடும் கம்பலை= ஆரவாரம். குளிரும்= ஒலிக்கும். பல்லியம்= பலவகை இசைக்கருவிகள். கலிப்பொடு= பேரொலியுடன். மாறுசெய்= மயங்க. நன்நதி= சிறந்த பொருநையாறு.

**பொழிப்புரை** : பெருமையுறக்கூறும் வளைந்த உடலும், வளைந்தவாயுமுடைய சங்கு, சக்கரஆயுதம் ஆகியனவுடைய திருமால் முதலியவர் போற்றும் மிகுந்தஒலியும், ஞானமுனிவர், அகத்தியர், புகழ்தற்கரிய, தொன்மையான மறை முதலியவற்றுடன் பழவடியவர் கலந்து கூடிப்போற்றி முழங்கும் தாளமுறையுடன், பிறழாத கையாலிடும் தாளஅளவும் ஒத்தநிலையில், கன்னியர் அமுதம்போல் இனிக்கப் பாடுகின்ற ஆரவாரமும், ஒலிக்கும் தெய்வத்தன்மையூட்டும் பலவகை இசைக்கருவிகளின் ஒலியும் தத்தம்பேரொலி யுடன் மயங்க - கலக்க, உன்திருமுன் பொருநையாகிய புனிதஆறுஓட உள்ளவளே! தாலோ தாலேலோ! சங்கத்தமிழ் வழங்கும் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ளவளே! தாலோ தாலேலோ!

### 4 சப்பாணிப்பருவம்

1. கோட்(டு)ஆனை எட்டும்உயர் கோட்(டு)அசலம் எட்டும்வெங்
கோட்டுதுளை எயிற்று மோட்டுக்
குலநாகம் எட்டும்புறம் கொள்ளும்நன் உரகர்
கொண்(டு)அலை சுமக்கும் ஆன்றோர்
ஓட்டாத அக்கடவுள் மதிவிளக் கிடுபுவன
உறையுள் புகுந்து முறைநீ
ஓங்கிப் ரபஞ்சம் தழைப்பப்பி ழைப்பிலா(து)
ஒன்றொ டொன்(று) இ னிதுகூட
வீட்டா விதத்தில் பிரித்(து)இவை துடைத்திட்டு
இயற்றி விளையாடு வதுபோல்
எழுந்துபொற் பித்திகைப் பத்திமணி மாடத்(து)
இருந்(து)ஒலி கறங்க நீங்காத்
தாட்டா மரைக்கரம் கூட்டிப்பி ரித்(து)அம்மை
சப்பாணி கொட்டி யருளே
தமிழ்ப்பாடல் முனிதொழும் மணக்கோல வடிவழகி
சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை** : கோட்டு ஆனை= தந்தமுடைய எண்திசை யானைகள். உயர்கோட்டு அசலம்= உயரமான உச்சியுடைய எண்திசை மலைகள். வெம் கோட் மோட்டுத் துளை எயிற்று என்க. வெம்கோட்டுத்துளை எயிற்று= கொடியதும் வளைந்ததும் ஆகிய தலையில் உள்துளை யுடைய பற்கள்.குலநாகம்= கூட்டமான நாகங்கள். புறம்கொள்ளும்= வென்ற. நன்நாகர்= நல்ல நாகருலகினர். அலைசுமக்கும்= பூமியைத்தாங்கும். ஓட்டாத= ஒதுக்காத. அ கடவுள்= சிவபிரானகிய கடவுள். மதி விளக்கு இடு= நிலவாகிய விளக்கினைஇட்ட. புவன உறையுள்= உலகமாகிய வாழுமிடம். பிரபஞ்சம்= அண்டம். பிழைப்பிலாது= தவறு ஏதும்நேராதபடி. வீட்டாது= மோதி அழியாதபடி. இனிது கூட= நன்மையுண்டாகுமாறு சேர்த்து. பிரித்து= தனித்தனி வைத்து. துடைத்திட்டு= தூய்மையாக்கி. எழுந்து= புறப்பட்டு. பித்திகை மாடத்து= அண்டச்சுவர்வரை உயரமான மாளிகை. ஒலி கரங்க= ஒலிஒலிக்க. தாள் தாமரைக்கரம் கூட்டிப் பிரித்து= தாளுடன் கூடியதாமரைபோன்ற கைகளைச் சேர்த்தும் பிரித்தும்( கைதட்டி ) தமிழ்ப்பாடல் முனி= தமிழ்ப்பாடல்கள் போற்றும் முனிவர் - அகத்தியர். மணக்கோல வடிவு அழகி= திருமணக் கோலம்கொண்ட அழகியே.

**பொழிப்புரை** : தந்தமுடைய எட்டுயானைகள், உயரமான உச்சியுடைய எட்டு மலைகள் , கொடியதும் வளைந்ததும் பிளந்ததும் ஆகிய வாயுடைய தலையில் உள்துளையுடைய பற்கள் கொண்ட கூட்டமான நாகங்கள் ஆகியவற்றை வென்று, உலகைச்சுமக்கும் ஆன்றோராகிய நாகர்கள் ஒதுக்காத சிவபிரானாகிய கடவுள், இரவுநேரத்து விளக்காக இட்ட நிலவினையுடைய உலகமாகிய நீ வாழுமிடம் சென்று, முறைப்படி சிறந்து அண்டம்தழைக்கத் தவறு ஏதும் நேராதபடியும், உலகங்கள் ஒன்றுடன்ஒன்று மோதி அழியாதபடியும் நன்மையுண்டாகுமாறு சேர்த்தும் பிரித்தும் தூய்மையுண்டாக நீ விளையாடுவதுபோல், நீ புறப்பட்டு அண்டச்சுவர்வரை உயரமானதும் நவமணிகள் வரிசையாகப் பதிக்கப்பெற்றதும் ஆன மாளிகையில் இருந்துகொண்டு, கைதட்டும்ஒலி ஒலிக்குமாறு, நீண்ட தாள்களுடைய தாமரைபோன்ற அங்கையினைச் சேர்த்தும் பிரித்தும் சப்பாணிகொட்டியருள்க. தமிழ்ப்பாடல்கள் போற்றும் அகத்தியர் வணங்கும்பொருட்டுத் திருமணக்கோலம் கொண்ட பேரழகியே! சப்பாணிகொட்டியருள்க.

**விளக்கம்** : உலகை எட்டுயானைகள் எட்டுமலைகள், எட்டு நாகங்கள் சுமப்பதாகவும், அவற்றுக்குத் தலைமை நாகர்கள் என்றும் கூறும் புராணவழக்கை முதலடி கூறுகிறது.

அண்டவெளியில் உலகங்கள் தம்முள் மோதி அழியாமல் காப்பவளே! இருகைகளயும் கூட்டியும் பிரித்தும் - கைதட்டி - சப்பாணிகொட்டி அருள்க என்றார்.

“தாள் தாமரைக்கரம்” என்ற உவமையில் தாள் என்றது நீண்ட கைக்கும், தாமரை என்றது அங்கைக்கும் உவமையாகும்.

சிவபிரானது மணக்கோலம் காண உலகமெல்லாம் வடக்கில் திரண்டதால் ,உலகின் வடக்குத்தாழ, தெற்கு உயர, அதனால் கெட்ட சமநிலையைச் சீர்செய்ய அகத்தியரைத் தென்பகுதி சென்று சீர்செய்ய சிவபிரான் ஆணையிட்டான். அவனது மணக்கோலம் காணும் தன் பேராவலை அகத்தியர் கூறிவேண்ட, எமது திருமணக்கோலத்தை அங்கிருந்தே காணலாம் என்றபடி, அகத்தியர்க்குத் தன்திருமணக்கோலத்தை அவர்வந்து இருந்த பொதிகைமலையில் காட்டியருளினான் என்பது புராணச்செய்தியை உட்கொண்டது ஈற்றடி. .

2.

மீன்தமர வெண்திரை புரண்(டு)அகழ் கயக்கடலும்
விரிதிசைஓர் எட்டும் ஏழும்
எட்டுபடு பைங்குலக் கிரியும்அவை சூழ்சக்கர
வேதண்டம் அதுவும் உயிரும்
மூன்(று)அளவை உலகமொடு பல்லாயி ரம்கோடி
மூதண்ட வைப்பு நெடுவான்
முப்பத்து முக்கோடி பண்ணவரும் ஐந்தொழிலின்
முடித்துமுடி யாத வரும்ஊழ்
ஆன்றமறை யும்பலஅ னைத்தும்முன் வைப்பும்என்ன
அறிவில் குணிக்க நெறியோர்க்(கு)
அத்தகைய அன்றிமற்(று) இலைஎனக் கைபுடைத்(து)
அறிவுறுத்(து) அருள்வ(து) ஏய்ப்பச்
சான்றவர்ம னக்கோயில் குடிபுக்கு வாழுவாய்
சப்பாணி கொட்டி அருளே

தமிழ்ப்பாடல் முனிதொழு மணகோல வடிவழகி
சப்பாணி கொட்டி அருளே.

**குறிப்புரை** : மீன்= ஒளி. தமரவெண்திரை= பேரொலிஎழுப்பும் வெண்மையான அலை. அகழ் கயக் கடல்= சகரரால் தோண்டப்பட்டதும் ஆழமானதும்ஆன கடல் விரி= பெரிய. ஏழு= ஏழ் உலகம். எட்டுபடு பைங்குலக் கிரி= எட்டாகஅமைந்த வளமானதும் கூட்டமானதுமான மலைகள். சக்ர வேதண்டம்= பெருமைபொருந்திய மலைகள் உயிர்= உயிர்களும். மூன்று அளவை உலகம்= கீழுலகம் பூமி மேலுலகம் என்று எண்ணப்பெற்ற மூன்றும். மூதண்டவைப்பு= தொன்மையான அண்டத்து உலகமும். நெடுவான்= பெரிய தேவருலகம். கோடி= வகை. பண்ணவர்= தேவர்கள் ஐந்தொழிலின் முடித்து முடியாதவர்= ஐந்தொழில் புரிந்தும் தான்அழிவில்லாதவர் - சிவபிரான். ஊழ்= முறையான. முன்வைப்பு= முதன்மையாக உள்ள. அறிவில் குணிக்க= அறிவால்வவரையறுக்க. நெறியோர்க்கு= சன்மார்க்க வழிப்பட்டவர். இலை= இல்லை. அறிவுறுத்துவது ஏய்ப்ப= உணர்த்துவது போல். குடிபுக்கு வாழுவாய்= எழுந்தருளி வாழ்கிறவளே.

**கூட்டுமுறை** : பண்ணவரும் ஆன்றமறையும் அனைத்தும் ஊழ் என்று கூட்டுக.ஐந்தொழிலின்முடித்து முடியாதவரும் உயிரும்முன்வைப்பு என்று கூட்டுக.

**பொழிப்புரை** : ஒளியுடன் பேரொலி எழுப்பும் வெண்மையான அலைகள் புரள்வதும், சகரரால் தோண்டப்பட்டதும் ஆழமானதுமான பெரியகடலும், பெருந்திசை எட்டும், ஏழுலகமும், வளமுடன் கூட்டமாக உள்ள எட்டுமலைகளும் அவைகளைச்சூழ்ந்த பெருமைபொருந்திய மலைகளும், மூன்றாக எண்ணப்பெறும் உலகங்களும், பல்லாயிர வகைப்பட்ட முதுமையான அண்டத்து உலகங்களும், அகன்ற வானத்து முப்பத்து மூவகைத் தேவர்களும் சிறந்த வேதமும் மேலும் பலவாகச் சொல்லப்பெறும் அனைத்தும் முறையாகத் தோன்றியவை. ஐந்தொழில்களைச் செய்துமுடித்தபோதும், தான்அழிவில்லாத சிவபிரானும் உயிர்களும் அநாதியானவை என்று அறிவால் வரையறுக்கும் தன்மை சன்மார்க்கிகளுக்குத் தவிர, பிறர்க்கு இல்லை என்பதை உணர்த்துவதுபோல், சான்றோர் மனமாகிய கோயிலில் எழுந்தருளி வாழ்கின்றவளே! சப்பாணி கொட்டிஅருள்க. தமிழ்ப்பாடல்கள்போற்றும் அகத்தியர்தொழத் திருமணக்கோலம் கொண்ட பேரழகியே சப்பாணிகொட்டிஅருள்க.

**விளக்கம்** : சகரரால் தோண்டப்பட்டது கடல் என்ற புராணவழக்குப்பற்றிக் கடல் சாகரம் எனப்பட்டது என்றும்; .பதி பசு பாசம் மூன்றும் அநாதியானவை என்றதுபோதும், பாசம் பசுவுட்பட்டதாதலின் பதி,பசு இரண்டு மட்டும் கூறினார் என்க.

இறைவன் இருப்பிடம் எது? " உள்ளம் பெருங்கோயில் " என்பார் திருமூலர்,. பெருங்கோயிலாவது அழிவில்லாத கோயில் = உள்ளம்= உயிர். அவனுக்கும் அதற்கும் அழிவில்லை. அழிவைல்லாதவனுக்குப் பெருங்கோயில் அழிவில்லாத உயிரே. பிறகோயில்கள் காலப்போக்கில் அழிவனவே. . .

3. இமைக்கும்க திர்ச்சிகர மேருபொ லன்தலையில்
ஏற்றிக்கி டந்த தொல்லை
எல்லைப்பெ ரும்புவனம் முழுதும்கு ளிப்பாட்டும்
எறிதிரைப் புணரி மூழ்கி
அமைக்கும் கடுங்கால வடவாமு கக்கொள்ளை
அள்ளரிப் படலம் மாந்தி
ஆழித டங்கடலுக்(கு) ஒருபுதல்வி இடைகிடந்து
அலமர வைத்த பாரச்
சுமைக்குங் குமக்குன்(று) அணைந்த புயல்மு தலினோர்
துஞ்(சு)இருள் கங்குல் கழியத்
துரத்தித் திருக்கருணை அவிர்ஒளி பரப்பிநிறை
துயில்முற்(று) எழுப்பி எவையும்
சமைக்கும் பசுங்காந்தள் அங்கைமலர் சேப்பநீ
சப்பாணி கொட்டி அருளே
தமிழ்ப்பாடல் முனிதொழு மணக்கோல வடிவழகி
சப்பாணி கொட்டி அருளே.

**குறிப்புரை** : இமைக்கும்= ஒளிரும். பொலன் தலை= பொன்னிறத்து உச்சியில். தொல்லைப் பெரும் எல்லைப் புவனம்= பழைமையான பேரெல்லையுடைய உலகம். குளிப்பாட்டும்= நீராட்டும். புணரி= கடல்.

கடுங்காலம்= கொடியகாலம். வடவாமுகக் கொள்ளை அள் எரிப்படலம்= ஊழித்தீயகிய மிகச்செறிந்த தீயின் அடுக்கு. மாந்தி= தன்னுள் அடக்கி. அவித்து. ஆழித்தடங்கடலுக்கு= ஆழமுடைய பெரிய கடலில். ஒருபுதல்வி இடைக்கிடந்து அலமர வைத்த= ஒருபெண்ணிடம் அமைந்து வருந்துமாறு செய்த. குங்குமக் குன்று அணைத்த புயல்= குங்குமக்குன்றாக விளங்கிய முலைகளைத் தழுவிய திருமால். துஞ்சி இருள் கழியத் துரத்தி= உறங்கி அவ்விருள் நீங்க ஓட்டி. அவிர்= ஒளிரும். நிறைதுயில் முற்று எழுப்பி= ஆழ்ந்த உறக்கத்திலிருந்து முழுமையாக எழுப்பி,. எவையும்சமைக்கும்= அனைத்தையும் உண்டாக்கும். பசுங்காந்தள் = வளமான காந்தள்மலர். சேப்ப= சிவப்ப.

**பொழிப்புரை:** ஒளிவீசும் கதிர்களுடன்கூடிய உச்சியையுடைய மேருமலையின் பொன்னிறத்து உச்சியில் இருக்குமாறு செய்த பழைமையானதும் பேரெல்லையுடையதுமாகிய உலகம்முழுவதும் கடலில் மூழ்கச் செய்யும் கொடிய காலத்தில், ஊழித்தீயாகிய மிகச்செறிந்த தீயின்அடுக்குளைத் தன்னுள் அடக்கி, ஆழமான அக்கடலில் தோன்றிய ஒரேமகளாகிய திருமகளும், அவளது குன்றுகளாகிய மார்புகளைத் தழுவிய திருமாலும் மற்றும் அனைவரும் இறந்துபட்டதால் ஏற்பட்ட இருளுக்காக வருந்தி, உலகஇருள் நீங்குமாறு அதனைஓட்டி, தனது தெய்விகமான கருணைஒளிரும் ஒளியைப்பரப்பி, உயிர்க்குலம் முதலிய அனைத்தையும் அவற்றின் உறக்கத்திலிருந்து - முற்றொடுக்கநிலையிலிருந்து - எழுப்பி, மீண்டும் உண்டாக்கும் உனது வளமான காந்தள்மலர் போன்ற உள்ளங்கை சிவப்பச் சப்பாணி கொட்டியருள்க, தமிழ்ப்பாடல்கள் போற்றும் அகத்தியர் வணங்கத் திருமணக்கோலம் கொண்ட பேரழகியே! சப்பாணி கொட்டிஅருள்க.

**விளக்கம்** : பிரளயமாகிய பேரூழிக்காலம், மாபெரும் வெள்ளப்பெருக்கு, கொடிய பெருந்தீ, அழிக்கும் ஆற்றல் வாய்ந்த காற்று ஆகியமூன்றினாலும் நிகழ்வது என்பர். மாபெரும் வெள்ளப்பெருக்கிலிருந்து உலகைக்காக்க உலகத்தை மேருமலையின் உச்சியில் இருத்தி, கொடியபெருந்தீயடுக்கைத் தன்னுள் அடக்கி( தீ அடக்கப்பட்டது என்றதால் அதன் ஆற்றலுக்குக் காரணமானகாற்றும் அடக்கப்பட்டது குறித்தார் ) மீண்டும் இருதிணைகளையும் உண்டாக்கி மீட்டுருவாக்கம் செய்தவள் அருள்தரு உலகம்மை என்பதைக்குறித்தார்.

4. அலைவைத்(து) இரங்கும் சகத்திர முகக்கடவுள்
ஆதிப் பழங்க கைவான்
ஆற்(று)அமுத வெள்ளம்ஒரு புல்நுனிப் பனிநீரின்
அளவைபட முடியில் வைத்தோன்
கொலைவைத்த வில்லின் குனித்திட்ட நெட்டைக்
குவட்டு வன்பாழி மேருக்
குன்றினுக்(கு) அப்புறம் சென்று உடல்குலைத்தது
குறித்(து)இப்புறத்தின் நுணுகிக்
கலைவைத்த திங்களன் தலைவன் எதிர்மாலைக்
கணம்குழை சமைத்து நெடுவிண்
கலத்(து)இட்ட திமிரக் கரும்சோ(று) எடுத்(து)உண்டு
கதிர்நில வின்வாய் விளக்கித்
தலைவைத்(து) உறங்கும் மலையா சலத்தலைவிஒரு
சப்பாணி கொட்டி அருளே
தமிழ்ப்பாடல் முனிதொழு மணக்கோல வடிவழகி
சப்பாணி கொட்டி அருளே.

**குறிப்புரை** : அலைவைத்து இரங்கும்= அலைகளின் மூலம் ஒலிக்கும். சகத்திர முகக் கடவுள்= ஆயிரம் முகங்களையுடைய வருணன். வான்கை ஆறு= வானிடத்ததான கங்கை. அளவைபட= அளவாக. முடியில் வைத்தோன்= சடையில் தாங்கிய சிவபிரான். கொலைவைத்த வில்லின்= கொல்லுதற்காக எடுத்த வில்லைப்போல். குனித்திட்ட= வளைத்த. வன் பாழி மேருக்குன்று= வலிமையானதும் வானளாவியதும் ஆகிய மேருமலை. குலைத்தது= அழித்தது - மறைந்தது. நுணுகிக் கலைவைத்த= நுட்பமான ஒளியுடைய. திங்களன் தலைவன்= நிலவாகிய தலைவன். எதிர்= எதிராக. மாலைக்கணம்= மாலைநேரவிண்மீன்களுடன். நெடுவிண் கலத்துஇட்ட குழை திமிரக்கருஞ்சோறு எடுத்து உண்டு என்றுகூட்டுக. விண்கலம்= வானமாகிய பாத்திரம். வாய் விளக்கி= வாய்துடைத்து. தலைவைத்து உறங்கும்= தலைசாய்த்து உறங்கும்.

**பொழிப்புரை** : ஆயிரம்முகங்களாகிய அலைகளின்மூலம் ஒலிஎழுப்பும் வருணனின் ஆதி - மூலம் என்று, பழைமைதொட்டு வைத்த வானத்துக்கங்கையாற்றின் அமுதமாகிய நீர்ப்பெருக்கில், புல்நுனியில் இருக்கும் குளிர்ந்த நீர்அளவு - ஒருசிறுசோட்டுஅளவு தன்சடையில்வைத்த சிவபிரான், முப்புரத்தைக் கொல்லுதல் குறித்து வளைத்த உயரமான உச்சியையுடையதும், வலிமையானதும் வானளாவியதும் ஆகிய மேருமலைக்கு அப்பால்சென்று சூரியன் மறைந்ததால், இந்தப்புறத்தில், நுட்பமான ஒளியுடன் நிலவானது சூரியனுக்கு மாற்றாக,மாலைநேர விண்மீன்களைச் சமைத்ததுடன், பெரிய வானமாகிய கலத்தில் இட்ட இருளாகிய குழைவான சோற்றை எடுத்து உண்டகதிருடைய நிலவு தன்வாய்பூசி உறங்கும்படியான பொதிகைமலைத் தலைவியே ! சப்பாணி கொட்டியருள்க! தமிழ்ப்பாடல்கள் போற்றும் அகத்தியமுனிவர் வணங்க மணக்கோலம் கொண்ட பேரழகியே! சப்பாணி கொட்டியருள்க.

5. சூலாட்டு கூந்தல்அம் பிடியொடும் கடகளிறு
தோய்ந்(து)ஆ டுமலை யருவித்
தூநறும் புனலாட்டி ஈர்ம்புனல் உலர்த்தியும்
சுண்ணம்தி மிர்ந்தும் இருசெஞ்
சேலாட்டு படைவிழிக்(கு) அஞ்சனம் தீட்டியும்
திங்கள்வகி ரன்று நிலவுத்
தெள்நீ(று) அணிந்த வாள்நு தல்என்று
சுட்டிசெஞ் சுட்டி சாத்தி
தாலாட்டு நுழைமருங்கு ஏற்றிஅமு(து) ஊட்டியும்
நெடி(து)உரை பயிற்று வித்தும்
நுண்மணித் தொட்டில் வைத்து உபநிடத மயமான
நுண்பெரும் கீர்த்தி சொல்லித்
தாலாட்டி யும்தினம் வளர்க்கும்நாம் காணஒரு
சப்பாணி கொட்டி அருளே
தமிழ்ப்பாடல் முனிதொழு மணக்கோல வடிவழகி
சப்பாணி கொட்டி அருளே.

**குறிப்புரை** : சூல் ஆட்டு= சூலுடன் விளையாடும். பிடி= பெண்யானை. கடகளிறு= மதயானை. தோய்ந்து ஆடு மலைஅருவி= இன்புற்று நீராடும் மலைவீழ் அருவி. புனலாட்டி= நீரில் குளிப்பாட்டி. புனல் ஈர்ம்= நீரின் ஈர்த்தை. சுண்ணம்= மணப்பொடி. சேல் ஆட்டு= கெண்டைமீன்களை வென்ற. திங்கள் வகிரன்று= பிளக்கப்பட்ட நிலவல்ல. நிலவு= ஒளி. வாள்நுதல்= ஒளிபொருந்திய நெற்றி. செஞ்சுட்டி= அழகான நெற்றிச்சுட்டி. நூலாட்டு நுழை மருங்கு= நூலினை வென்ற நுண்ணிய இடுப்பு. ஏற்றி= அமர்த்தி. அமுது= தாய்ப்பால். பயிற்றுவித்தும்= சொல்லிக்கொடுத்தும். நுண்தாலாட்டு மணித்தொட்டில் வைத்து= நுட்பமாகத் தாலாட்டி உறங்கவைக்கும் அழகியதொட்டிலில் கிடத்தி. கீர்த்தி= புகழ்.

**பொழிப்புரை** : சூலுடன் விளையாடுவதும் பிடரியில் முடிஉடையதுமான பெண்யானையுடன், ஆண்யானை இன்புற்று நீராடும் மலையருவியின் மணக்கும் தூயநீரில் நீராட்டி, நீரின்ஈரத்தைத் துவட்டி உலர்த்தி, மணப்பொடி மிகப்பூசி, கெண்டைமீன்களை வென்றபடைகள் போன்ற இருஅழகிய கண்களுக்கு மைஎழுதியும், இது, பிளந்தநிலவன்று மிகவெண்மையான ஒளிபொருந்திய திருநீறு என்று சொல்லி ஒளிபொருந்திய நெற்றியிலிட்டும், ஒப்பற்ற அழகிய நெற்றிச்சுட்டி சாத்தியும், நூலினை வென்ற தனது மெல்லிய இடையில் வைத்துத் தாய்ப்பால் ஊட்டி, புகழ்ச்சொற்களைச் சொல்லிக்கொடுத்து அழகிய தொட்டிலில் கிடத்தி, உபநிடதங்கள் கூறும் நுட்பக்கருத்துடைய புகழ்மொழிகள்சொல்லித் தாலாட்டி நாடோறும் வளர்க்கின்ற நாங்கள் கேட்டுமகிழ ஒப்பற்ற சப்பாணி கொட்டிஅருள்க! தமிழ்ப்பாடல்கள் போற்றும் அகத்தியர் வணங்கும் திருமணக்கோலம் கொண்ட அழகியே சப்பாணி கொட்டிஅருள்க.

6. **வேறு**

கன்றுசி னத்துள வெண்பல் அராநெளி கடகம்மு றுக்கிஇடும்
கைத்தலை முத்தலை சூலக் கடவுளும் நீயும்மணந்து
ஒன்ற இயங்கிய ஐந்தொழில் வே(று)உற ஒன்றும் இயங்கிலபோல்
உபய வளைக்கை பொருந்த இயங்கிய ஒளிபிரி யப்பிரிய

வென்றி மதம்பிழி வேழக்கோ(டு)உகு வெண்முத் தம்புனல்தோய்
விஞ்சையர் வஞ்சியர் கொங்கைக் கொடுகு வெண்முத் தும்பொதியக்
குன்றில் வரன்றிவ ரும்பொரு நைப்பிடி கொட்டுக சப்பாணி
குலவரை அரசின் மலைமகள் உல(கு)உமை கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை** : .கன்று= முதிர்ந்த. நெளி அரா= நெளியும் நாகம். முறுக்கி இடும்= இறுக்கமாக அணியும். கைத்தலை= கையில். முத்தலைச் சூலப்படைக் கடவுள்= மூன்று நுனியுடைய சூலம் ஏந்திய சிவபிரான். ஒன்ற இயங்கிய= மனம்ஒத்துச் செய்யும். ஐந்தொழில்வேறு உற= படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலிலன்றி. வேறுவழியில். ஒன்றும் இயங்காதது போல். உபயம்= இரண்டு. . பொருந்த இயங்கிய= பொருந்துமாறு கொட்டிய. ஒளிபிரியப் பிரிய= ஒளி மேன்மேலும் வெளிப்பட.. உகு= சொரிந்த. புனல் தோய்= நீராடிய. விஞ்சையர்= தேவருலகினர். வஞ்சியர்= இவ்உலக மகளிர். கொடுகு= உருண்டு திரண்ட வரன்றி= வாரிக்கொண்டு. குலவரை அரசு= கூட்டமான மலைகளுக்கரசன் இமவான்.

**பொழிப்புரை** : முதிர்ந்த சினத்துடன்கூடியதும் வெண்பற்களுடன்.நெளிவதும் ஆகிய நாகம் என்னும் கடகம் இறுகக்கட்டப்பெற்ற கையில், மூன்றுநுனிகளுடைய சூலமேந்திய சிவபிரானைத் திருமணம் செய்துகொண்டு,நீ அவனுடன்மனம் ஒத்துச்செய்யும் ஐந்தொழிலன்றி, உலகில் எவையும் சிறிதும் இயங்கா என்பதால்;, வெற்றிபொருந்திய மதம்சொரியும் ஆண்யானையின் தந்தம்உகுத்த வெண்மையான முத்துகளையும், நீராடும் தெய்வமகளிர், இவ்வுலகமகளிர் ஆகியோர் மாலையாக மார்பில் அணிந்த முத்துகளையும் பொதிகைமலையிலிருந்து உருண்டுதிரண்டுவரும் முத்துகளையும் வாரிக்கொண்டு வரும் பொருநைக்கண் வாழ்பெண்யானையே! உன்வளையலணிந்த இரண்டுகைகளும் ஒன்றுடன் ஒன்று பொருந்துமாறு ஒளியுடன் இயங்கிச் சப்பாணி கொட்டிஅருள்க. கூட்டமான மலைகளுக்கு அரசனாகிய இமவான் மகளாம் அருள்தரு உலகம்மையே! சப்பாணி கொட்டி அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : போல் - அசைநிலை.

7. நீல மணிச்சிறை வண்(டு)உழு செங்கழு நீரைம ணந்தும்வளர்
நீதி அறங்கள் வழாதும் அடுக்கியும் நெட்டிதழ் விட்டபுழைக்
கால ரவிந்தம் மலர்ந்திட நின்(று)அழு கவுணியர் கோன்உண்ணக்
கைச்சிறு கிண்ணத்(து) இளமுலை அமுதுக ரந்துகொ டுத்(து)இருட்(டு)
ஆலம் அடைத்த மிடற்றார் சுடலையில் ஆடத் தாளம்எடுத்து
ஆட்டியும் முன்புசி வந்தன இப்பொழு(து) அப்படி எம்மால்உன்
கோல வளைக்கை சிவந்து விடும்படி கொட்டுக சப்பாணி
குலவரை அரசின் மலைமகள் உல(கு)உமை கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை** : நீலம்= இருள் - கருமை. சிறை= சிறகு. மணந்து= விளங்கி. வழாதும்= தவறாதும். அடுக்கியும்= தொடருமாறு செய்தும். நெட்டிதழ் விட்ட= நீண்ட இதழ்களுடன் மலர்ந்த. புழைக் கால் அரவிந்தம்= துளையுன்கூடிய தண்டினைப்பெற்ற தாமரைமலர். மலர்ந்திட= பார்க்க. கவுணியர் கோன்= கவுணியர் குலத்தில்தலைமை சான்றவராவாகிய திருஞானசம்பந்தர். சிறுகை= சிறிய கையில். முலைஅமுது= தாய்ப்பால்.. ஆலம் அடைத்த= நஞ்சினை அடக்கிய.. மிடற்றார்= கழுத்துடைய சிவபிரான். ஆட= திருக்கூத்திட. தாளம்எடுத்து ஆட்டி= தாளம்போட்டு ஆடச்செய்தும்.

**பொழிப்புரை** : கருநிறம் பொருந்திய அழகிய சிறகினையுடைய வண்டுகள் மலர்த்திய செங்கழுநீர் மலர்போல் விளங்கியும்; உலகில் நீதியும் அறங்களும் தவறாது தொடரச்செய்தும், நீண்ட இதழ்மலர்ந்ததும், துளையுடைய தாளினையுடைய தாமரைமலர்கள் போன்ற கண்களால் பார்த்து, ஞானப்பசியால்அழுத திருஞானசம்பந்தரின் சிறியகையில், பொற்கிண்ணத்தில் ஞானப்பால்கறந்து கொடுத்தும்; கடுமையான நஞ்சின் ஆற்றலைக் கழுத்தில்வைத்து அடக்கிய சிவபிரான், சுடலையில் ஊழிக்கூத்தாடக் கைகளால் தாளமிட்டும் முன்பு சிவந்த உன்கைகளால், இப்போது நாங்கள் காண உமதுஅழகிய வளையல் அணிந்த கைகள் சிவக்கச் சப்பாணி கொட்டுக. கூட்டமான மலைகளுக்கெல்லாம் அரசனான இமவான் மகளே! அருள்தருஉலகம்மையாகிய உமையம்மையே! சப்பாணி கொட்டுக.

**விளக்கம்** : தமிழ்மரபுகட்கு மாறுபட்ட நடைமுறையுடைய சமணர்களைத் திருஞானசம்பந்தர் வென்றதன்மூலம், நம்பண்பாட்டை நிலைநாட்டியதால் தமிழர் நீதி அறங்கள் நிலைத்தமை குறித்தார்.

முன்பு ஞானப்பால் கறந்துஅளித்ததாலும், அப்பன் ஆடத்தாளமிட்டதாலும் சிவந்தவஉன் அங்கை,, இன்றுசிவப்பதை நாம் காணச் சப்பாணிகொட்டுக என்றார்.

8. எட்டுமுன் இட்ட சகத்திர அண்டம் அனைத்தும் வலித்தாளும்
எக்குவ யிற்று முடப்பிறை.வெண்பல் இருட்டுநி றச்சூரன்
விட்டவ யப்படை பட்டப றந்தலை வெற்றிஇ டம்அற்றோடு
மெய்க்குரு திப்புனல் மொய்க்கவெ குண்(டு)அவன் வில்கே(டு) உற்றோட
முட்டிஓர் கொக்கின்அ லைப்புகும் அங்கம்இ ரட்டைப்படக்கீறி
முன்கும ரற்(கு)ஒரு வெற்றி புரிந்(து)அ ம ரர்க்(கு)அ ருளச்சோரி
கொட்டும்அ யில்படை உய்த்தக ரம்கொடு கொட்டுக சப்பாணி
கொட்டுபு னல்பொரு நைத்துறை நின்றவள் கொட்டுக சப்பாணி

**குறிப்புரை** : எட்டு முன்இட்ட= எட்டுஎன்ற எண்ணுக்கு முன்னதான ஏழு. சகத்திரஅண்டம்= ஏழு உலகம். வலித்து= வளைத்து. எக்கு வயிற்று முடப்பிறை= வயிறு ஒட்டி வளைந்த பிறை. சூரன்= சூரபத்மன். விட்டவயப்படை பட்ட= வலிமையான படைகள்எல்லாம் ஆற்றல் அழிந்த. பறந்தலை= போர்க்களம். வெற்றி இடம்= வெற்றி பெற்ற இடம் அற்றோடு= அதனுடன்கூட. மெய்க் குருதிப் புனல்= உடம்பை குருதியாகிய நீர் மூட. வில்கேடு உற்றுஓட= ஒளியிழந்து ஓட. முட்டி= (ஆற்றல்) குறைந்து. கொக்கின் அலைப்புகும்= மாமரத்தின் . வடிவுடன் கடலில் மறைந்த. அங்கம்= உடம்பு. முன்= முதலில். குமரற்கு= மகனாகிய முருகனுக்கு. புரிந்து= செய்து. சோரி கொட்டும்= குருதி கொட்டச்செய்யும். அயிற்படை உய்த்த= வேலினைத் தந்த. புனல்கொட்ட= நீர்ப்பெருக்குடன் ஓடும்.

**பொழிப்புரை** : ஏழுஉலகங்களையும் வளைத்து,ஆண்டவனும், எக்கியவயிறுபோன்று உட்குழிந்த பிறைஒத்த வெண்மையான பல்லுடையவனும் ஆகிய இருள்நிறச் சூரபத்மன் ஏவியபடைகள்எல்லாம் ஆற்றல்இழந்த போர்க்களம், முருகன் வெற்றிபெற்ற இடமாகும். அதனுடன்கூட அவனது உடம்பிலிருந்து குருதி நீராகச்சொரிந்து அவன் உடம்பை மூட, அவன் ஒளிஇழந்து ஆற்றல் குறைந்து ஒருமாமரத்தின் வடிவுடன் கடலில்மறைய அதனால்சினந்து, முன்னாளில் உன்மகனாகிய முருகப்பிரானின் வெற்றிக்காகத் தந்த குருதிகொட்டச்செய்யும் வேலினை ஏவி, அதன்பின்னர் தேவர் துயர்தீர்த்த கையால் சப்பாணி கொட்டி அருள்க. நீர்ப்பெருக்குடைய பொருநைக்கரையில் எழுந்தருளியுள்ளவளே! சப்பாணிகொட்டி அருள்க.

. .

வேறு

9. கட்டுமங் கலநாண் அரம்பையர் பெறத்தேவர்
கதிபெறக் கடவுள் நீலக்
கறைக்கண்டன் என்னும்ஒரு பெயர்பெற அமைக்கும்
கடுக்கறை திரண்ட(து) எனவும்
மட்(டு)உடைந்(து) இதழ்ஊறு தேறலைமு கந்துஇனிதுவாய்
மடுத்(து)அதை உண்ண எண்ணி
மழலையாழ் இசைவண்டு தண்துணர்க் காந்தள்மலர்
முகையினில் வீழ்ந்த(து) எனவும்
முட்டும்எண் திசைதுருவி ........................................................................................
முழுநிழல் பா(சு)ஒளி..........
பருமணி பதித்த(து) எனவும்
முகைவயிறு ஆலம் நறவம்
கொட்டுபைங் கழுநீர்ம ணம்தகைத் தளிர்கொண்டு
கொட்டிஅ ருள்சப் பாணியே
கொம்மைமலை எனவிம்மு பொம்மல்முலை உலகம்மை
கொட்டிஅ ருள்சப் பாணியே.

**குறிப்புரை** : கதி= நல்வாழ்வு. கறை= களங்கம். கடு= நஞ்சு. மட்டு உடைந்து= தேன்பெருக்கால் கட்டுஉடைந்து. தேறல்= தேன். நிழல்=,ஒளி. பாசு ஒளி= பதமான - பக்குவமானஒளி. ஆலம் முழுவயிறு= மலர்ந்தபூவின் முழுவயிறு. நறவம்= தேன். கைத்தளிர்= கையாகிய தளிர். கொம்மைமலை= பருத்தமலை. பொம்மல்= திரண்ட.. விம்மு= இறுகிய.

**பொழிப்புரை** : அரம்பையர் கழுத்தில்கட்டியமங்கலநாண் நிலைக்க, தேவர்கள் நற்கதிபெற, சிவபிரான் கறைக்கண்டன் என்னும் ஒப்பற்ற பெயர்பெற அமைந்த திரண்டநஞ்சின் கறைபோன்ற கரிய வண்டுகள்; தேனால்கட்டு உடைந்து மலரிதழில் ஊறும் தேனை எடுத்துப் பருகநினைத்து, மழலைபோல் இசைத்துத் தண்ணிய கொத்தாக உள்ள காந்தள்மலர் மொட்டுகளில் மொய்த்தாற் போலவும் ; ............................ ........................................ முழுமையான பக்குவமான மணிகள் பதித்தது போல்விளங்கும் செங்கழுநீரின் மணம்கமழும் தளிரொத்த கைகளால் சப்பாணி கொட்டிஅருள்க. பருத்தமலைபோல் திரண்ட முலைகளுடைய உலகம்மையே சப்பாகொட்டி அருள்க.

**குறிப்பு** : புள்ளியிட்ட சீர்கள் மூலபாடத்தில் இல்லை. அவற்றைப் புரிந்துகொள்ளவும் இயலவில்லை.

10.
இழைக்கும்த வத்(து)ஒருவன் மூவுலகும் வேரறும்
இகல்கணைகள் என்றுகுழை சென்று
இரங்கும்களித் தடம்கயல்கட்(கு) உடைந்ததும்
இதழ்த்துகிர் விளிம்பு பூத்துத்
தழைக்கும்கு றுந்தாள் நிறைக்கண் கிடந்ததும்
தண்ணளி துதும்பு வதனத்
தண்அளிஅ ழகுக்குமதி தோற்றதும் குதலைச்
சதங்கைப் பதங்கள் வென்ற
மழைக்கும் பசுந்தளிர்ச் சூதமும் சோகமும்
மலர்ந்தவும் வழங்கி யாழும்
மாங்குயில் கிளவியும் மருட்டித்தி ருக்கொழுநன்
மனமும்கு ழைத்த மொழியாள்
குழைக்கும்க ரும்பும்எ டுத்தகைத் தளிர்கொண்டு
கொட்டிஅருள் சப்பா ணியே
கொம்மைமலை எனவிம்மு பொம்மல்முலை உலகம்மை
கொட்டிஅருள் சப்பா ணியே.

**குறிப்புரை** : ஒருவன் இழைக்கும்= ஒப்பற்ற சிவபிரான் மேற்கொண்ட. தவத்து= தவத்தால். வேர் அறும்என்று= முற்றிலும் அழியும் என்று. இரங்கும் குழைசென்று= வருந்திய காதணியாகிய குழைபோய். தடம்களி கயல்கட்கு உடைந்ததும்= மிக்க களிப்புடைய கண்களாகிய கெண்டை மீனுக்குத் தோற்றதும், விளிம்பு பூத்து= எயிறுகள் தோன்றி. தழைக்கும் குறுந்தாள் நிறைக்கண் துவர்இதழ் கிடந்ததும்= எயிறுகள் தோன்றித் தழைக்கும் தாடையில் கிடக்கக் குறுமுறுவல் பூத்ததும். தண் அளிதுளும்பு வதனத்தண் அளிக்கு மதிஅழகு தோற்றதும்=கருணை ததும்பும் முகத்தின் கருணைக்கு நிலவின் அழகு தோல்வியடைந்ததும் குதலைச்சதங்கைப் பதங்கள்= குதலைமொழிபோல் ஒலிக்கும் சதங்கையணிந்த பாதங்கள். மழைக்கும்= குளிர்ச்சியான.. சூதம்= மாந்தளிர். சோகு= அசோகந்தளிர். மலர்ந்தவும்= அரும்பியதும். வழங்கி= விளங்கி. மருட்டி= வென்று. திருக்கொழுநன்= சிவபிரான். மொழியாள்= சொற்கள் பேசுகிறவளே. குழைக்கும்= வளைக்கும். கொம்மை= பருத்த. பொம்மல்== திரண்ட. விம்மு= இறுகிய.

**பொழிப்புரை** : சிவபிரான் மேற்கொண்ட தவத்தால் மூன்றுஉலகங்களும் முற்றிலும் அழிந்துபோகும். என்று வருந்திய காதணிகள் சென்று மிக்க களிப்புடைய கண்களாகிய கெண்டை மீனுடன் மோதித் தோற்றதும், எயிறுகள் தோன்றித் தழைக்கின்ற தாடையில் இருக்கக் குறுமுறுவல் பூத்ததும், குளிர்ந்த கருணைததும்பும் முகத்தின் கருணைக்கு நிலவின் அழகு தோற்றதும், குதலை மொழிபோல் ஒலிக்கும் சதங்கையணிந்தபாதங்கள் மாமரம் அசோகு ஆகியவற்றின் குளிர்ச்சிபொருந்திய பசியதளிர்களுடன் விளங்கியதும், யாழையும் மாஞ்சோலைக்குயிலையும் வென்று, கணவனாகிய சிவபிரானின் தவநிலையில் நின்றமனம் குழையுமாறு பேசுகின்றவளே! வளைக்கும் கரும்பு ஏந்திய உன்கையால் சப்பாணி கொட்டியருள்க! பருத்த மலைபோல் இறுகித்திரண்ட கொங்கைகளுடைய உமையம்மையே! சப்பாணி கொட்டியருள்க.

**விளக்கம்**.: சிவபிரானின் மனம் தவநிலையில் ஒன்றியதால் ஐந்தொழில் நிகழவில்லை. இதனால் உலகம் அழியும் என்றார், அவனது தவநிலையைக்கலைத்து ஐந்தொழிலில் ஈடுபடச்செய்யும்பொருட்டு அம்மை மேற்கொண்ட செயற்பாடுகளையும் அழகினையும் கூறினார். செயற்பாடுகளாவன, குழை கண்ணில்மோதத் தலையசைத்தல் - தவம்வேண்டாமென்றகுறிப்பும்; புன்முறுவல்பூத்தல் -அவர் மனத்தின்

தவநிலையைக் கலைத்துத் தன்பால் திசைதிருப்புதல் குறிப்பும்; குளிர்நிலவு தோற்குமாறு கருணையுடன் நோக்குதல் உலகின்மேல் கருணைசெய்யக்கூறும் குறிப்பும்; மாந்தளிர் அசோகந்தளிர்களை வென்ற பாதங்களில் சதங்கையணிந்து அவரைநெருங்கியதும் யாழும் குழலும் தோற்கப் பேசியதும் செவிக்கும் மனத்திற்கும் இன்பமூட்டும் செயற்குறிப்பும், ஏந்திய கரும்பு உலகிற்கு இன்பஇனிமைதரும்குறிப்பும் உடையன. ( வளைக்கும்கரும்பு மன்மதனைக்குறிக்கும் குறியீடு ). இவற்றால் சிவபிரானது தவநிலை கலைத்து ஐந்தொழிலில் ஈடுபடச்செய்த கருணையைக் குறிப்பிட்டார்.

11. தத்தோடு கடலுலக முதல்அண்ட கோளகைத்
தட்டுநிலை கோலி அந்தத்
தட்டினுள் கடவுளர் முதல்பல சராசரம்
தருமுதல்வி நீஇ ருக்க
மத்தோ(டு)உ டைந்தவெண் தயிர்என உடைந்(து)உனது
மாயையின் மயங்கி ஈண்டு
மாண்டுபடு தெய்வம்ப ழிச்சித்தி ரிந்(து)இம்மை
மறுமையும் பாழ்ப டுத்திப்
புத்தோ(டு)அ ழுந்திக்கி டக்கும்அவர் புகும்வழிப்
புகுதாமல் எம்மை மறைநூல்
பொம்மல்படு செம்மைத் திருத்தாள் வணங்கப்
புரிந்(து)எமது சுற்றம் முற்றும்
கொத்தோடு தொண்டுகொண்(டு) இருகண்அருள் கொட்டுவாய்
கொட்டிஅ ருள்சப் பாணியே
கொம்மைமலை எனவிம்மு பொம்மல்முலை உலகம்மை
கொட்டிஅ ருள்சப் பாணியே.

**குறிப்புரை** : தத்து ஓடு= தத்திச் செல்லும். கடல்உலகம்= கடல்சூழ்ந்த உலகம். அண்டகோளகை= அனைத்து அண்டங்கள். தட்டு= அடுக்கு. கோலி= வகுத்து. பல சர அசரம்= ஓரிடம்விட்டுஓரிடம் நகர்வனவும், ஓரிடத்திலேயே நிலையாக இருப்பனவும் ( இயங்குதிணை, நிலைத்திணை ) ஆகிய பலவகைப்பட. தரும்= ஆக்கும். மத்தோடு= மத்தினால். உடைந்து= கலங்கி. மாண்டுப்டு தெய்வம்= செத்துப்பிறக்கும் திருமால் போன்றோர். பழிச்சி= வணங்கி. புத்தோடு அழுந்தி= நரகத்தில் மூழ்கிக்கிடந்து. மறைநூல் பொம்மல்படு= மறைகள் போற்றும். கொத்தோடு= ஒருசேர.. கொட்டுவாய்= பொழிகிறவளே.

**பொழிப்புரை** : தத்திசெல்லும் கடல்சூழ்ந்த இவ்வுலகம் முதலாக அனைத்து அண்டஅடுக்குகளின் நிலைகளை வகுத்து, அந்தஅடுக்குகளில் கடவுளர்முதல் நிலைத்திணை இயங்குதிணைகளை ஆக்கும் முதல்வியாகிய நீ இருக்கவும், மத்தில்பட்ட தயிர்போல் உடைந்தும் மயங்கியும்நான், இவ்வுலகில் பிறந்தும் இறந்தும் உள்ள தெய்வங்களை வணங்கி அலைந்து, அதனால்இம்மை மறுமையைப் பாழானதாக்கியதால், நரகத்தில் மூழ்கிக்கிடக்கின்றவர் வழியில் வாழாமல், என்னை மறைநூல்கள் போற்றும் உனது அழகிய திருவடிகளை வணங்கச்செய்து, எனது சுற்றத்தார் அனைவரையும் ஒருசேர உன்திருவடிக்குத் தொண்டனாக்கி, உனது இருகண்களாலும் அருள்பொழிகிறவளே! சப்பாணி கொட்டி அருள்க! பருத்தமலைபோல் இறுகித்திரண்ட முலைகளுடைய உலகம்மையே! சப்பாணி கொட்டிஅருள்க.

## 5. **முத்தப்பருவம்**

1. பொற்றா(து) உறைக்கும் நறைக்கமலப்
பொகுட்டில் விளையும் முத்தம்இரு
புருவச் சிலையார் களமுத்தம்
புணரி கக்குப் படுமுத்தம்
வற்றா நெடும்தண் துறைப்பொருனை
வளைகள் அளிக்கும் மாமுத்தம்
வகுக்கும் புவன கோடிகளும்
மற்றுஎவ் உயிரும் பெற்ற உனக்கு
உற்(று)ஆ தரிக்கும் தாயர்யாம்

உனது தொழும்பு புரியும்அவர்
உறையுள் பொருள்வேட்(டு) அடைந்தால்அவ்
ஒழியா இழுக்கம் நினக்கன்றோ
முற்றா மழலைச் சேதாம்பல்
முத்தம் தருக முத்தமே
முத்தே வரையும் தரும்உலக
முத்தே முத்தம் தருகவே,

**குறிப்புரை :** பொன்தாது= பொன்ஒத்த மகரந்தம். உறைக்கும்= மிகுந்த. நறை= தேன். பொகுட்டு= தாமரைக்கொட்டை. களம்= கழுத்து. புணரி கக்கப்படு= கடல் உமிழ்ந்த. வளை= சங்கு. வகுக்கும்= தோற்றுவிக்கும். உற்று= அடைந்து. ஆதரிக்கும்= அன்புகாட்டும். தொழும்பு= அடிமை. உறையுள் பொருள்= வீடு செல்வம். ஒழியா இழுக்கம்= தீர்க்காத பழி. மழலைச் சேதாம்பல்= மழலை பேசும் செவ்வாம்பல் போன்ற இதழ். முத்தேவர்= அயன் அரி அரன்,

**பொழிப்புரை :** பொன்ஒத்த மகரந்தம் மிக்கதும் தேனுடையதும் ஆகிய தாமரைக்கொட்டையில் விளையும் முத்து, கடல் கக்கியதால் தோன்றும் முத்து, இருபுருவங்களாகிய வில்லுடையமகளிர் கழுத்து, கக்கியதால் வெளிப்படும்( வியர்வை ) முத்து, நீர்வற்றாத நீண்டதுறைகளுடைய பொருநையாற்றின் சங்குகள்தரும் சிறந்தமுத்து. மற்றும் தோற்றுவிக்கும் பலவகை உலகங்களையும் உயிர்களையும்பெற்ற முத்து நீ, உன்னைஅடைந்துஅன்புகாட்டும் தாய்மார்ஆகிய நாங்கள். உன்அடிமைப்பணிசெய்வோர். நாங்கள் வீடு செல்வம் ஆகியனவிரும்பி உன்னை அடைந்தால், அவற்றைத்தந்து வாழ்விக்காத பழி உனக்கேயாகும். அவற்றைத் தந்தருளி, மழலைமொழி பேசும் செவ்வாம்பல் போன்ற உனது உதடுகளால் முத்தம் தருக! அயன் அரி அரன் ஆகியமூவரையும் முப்பணிக்குத் தந்தவளே! முத்தாகிய உலகம்மையே ! முத்தம் தருக.

**விளக்கம் :** முத்துகளையும் உலகங்களையும் பெற்ற நீ எம்வேண்டுதலாகிய வீடு, செல்வம் தராயேல் உனக்குபழியுண்டாகும் என்றார்.

**இலக்கணக்குறிப்பு :** சேதாம்பல் - உருவகம்..

2. தெற்றும் தரங்கக் கருங்கடலும்
சென்னிக் கமலத் தடமும்மடல்
சென்னிக் கமுகப் படப்பையும்நீர்
சிந்தும் முகில்தண் படலமும்போய்ச்
சுற்றும் திரிந்து உருவிஅந்தச்
சுடர்வான் முத்தும் பெறல்அரிதால்
சொன்ன பொருள்அத் தனையும்விழித்
துணையும் அமுதக் கதிர்முகமும்
பற்றும் திருமங் கலத்(து)அணிநாண்
பைம்பொன் கழுத்தும் குழலும் என்(று)இப்
படிஉன் இடத்தில் அவயவம்ஆய்ப்
படர்ந்து சிறந்த பெருங்கருணை
முற்றும் தரும்கண் பசுங்கரும்பே
முத்தம் தருக முத்தமே
முத்தே வரையும் தரும்உலக
முத்தே முத்தம் தருகமுத்தமே.

**குறிப்புரை :** தெற்றும்= அலைக்கும்.தடம்= குளம். சென்னி மடல்= தலையில் மடல். கமுகப் படப்பை பாக்குத் தோப்பு. சுற்றும் திரிந்து= எங்கும் திரிந்து. பெறல் அரிது= பெறவியலாது. சுடர் வான்முத்தம்= ஒளிபொருந்திய மேலான முத்தம். சொன்னபொருள்= கடல்முத்து, தாமரைக்குளத்துமுத்து,பாக்குத் தோட்டத்து முத்து, மேகம் தரும் முத்து. ஆகியன. பெறல் அரிது= உன்வாய் முத்துப்போல் பெறுதற்கரியதன்று - எளியதேயாகும். விழித்துணை= இருவிழி. பொன்= அழகு. அவயவம் ஆய்= உடல் உறுப்புகள் ஆகி. தரும்= வழங்கும். கண்= கண்களுடைய / கணுக்களுடைய. உலக முத்தே= உலகம்மை ஆகிய முத்தே.

**பொழிப்புரை :** அலைக்கின்ற அலைகளுடைய கடல், அழகியதாமரைகுளம், தலையில் மடலுடன்கூடிய பாக்குக்குலைகளுடைய தோப்பு, தண்ணிய மேகஅடுக்கு ஆகிய எங்கும் சுற்றி அலைந்து ஊடுருவித் தேடினாலும், உன்ஒளி இருவிழிகள், அமுதம்பொழியும் ஒளிபொருந்திய முகம், திருமங்கலநாண் அணிந்த சிறந்தபொன்போன்ற கழுத்து என்று உன்உடல் உறுப்புகளெல்லாம் முத்துகளாக அமையக் கொண்டவளே!! சிறந்த உன்பெருங்கருணை முழுவதையும் வழங்கும் கணுக்களாகிய கண்களுடைய கரும்பே! முத்தம் தருக ! அயன் அரி அரன் ஆகிய மூன்று தேவர்களையும் முத்தொழிலுக்கும் தந்த முத்தே! முத்தம் தருக!

**விளக்கம்** : கடல், தாமரைக்குளம், பாக்குத்தோட்டம், நீர்மேகம் என்று முத்தினைத்தேடித் திரியினும் அவற்றை எளிதில்பெறவியலாது என்றார். முதிர் - கரும்பு தன்கணுக்கள் தோறும் முத்துச்சொரியும். அதுபோல் அம்மை தன்னுறுப்புகள் மூலம் அருள் பொழிவதால் அம்மையைப் பசுங்கண் கரும்பு என்றார்.

3. நித்தன் குனிக்கும் பாண்டரங்க
நிருத்தன் ஒருத்தன் கருத்(து)உருகி
நெக்குக் கலவி புலவியின்வாய்
நிரைத்தார் இதழி பொன்கொழிக்கும்
மத்தம் படரும் சடைக்காட்டு
மதிக்கோட்டு அமுதத் திவலைஎன
மலர்ந்த சிறுபூந் தும்பைஅயன்
மந்தா கினிப்பெண் மயில்ஒளிப்பச்
சித்தம் கறுத்து நீஉதைத்த
திருத்தாள் வருடிப் பிழைபொறுப்பாய்
தேனே எனத்தண் செழுங்குமுதம்
திறப்ப நிலவுக் கால்வீசு
முத்தம் பொதிந்த கனிப்பவள
முத்தம் தருக முத்தமே
முத்தே வரையும் தரும்உலக
முத்தே தேதருக முத்தமே.

**குறிப்புரை** : நித்தன்= சிவபிரான். குனிக்கும்= நடனமாடும். பண்டரங்க நிருத்தன்= பண்டரங்கம் என்னும் திருக்கூத்தாடுகிறவன். ஒருத்தன்= ஒப்பற்றவன். நெக்கு- இளகி. கலவிப்புலவியின் வாய்= கூட்டதின்போது ஏற்பட்ட சிறுகோபத்தில். நிரைத்து= வரிசையாக சூடிய. மத்தம்= உன்மத்தமலர். சடைக்காட்டு= சடையாகிய காட்டிலுள்ள. கோட்டுமதியம்= வளைந்த பிறை. அமுதத்திவலை= அமுதத்துளி தும்பை= தும்பைமலர். அயன் மந்தாகினிப்பெண்= சிறந்த கங்கை. கறுத்து= சினந்து. செழும்குமுதம்= வளமான குமுதமலர் ஆகியவாய். நிலவுக்கால்= நிலவின் ஒளி. முத்தம்= முத்தாகிய பற்கள். கனிப்பவளம்= முதிர்ந்த பவளமாகிய வாய்.

**பொழிப்புரை** : பாண்டரங்கக் கூத்தாடும் சிவபிரான் ஆகிய ஒப்பற்றவன் கலவியின்போது மனமுருகி இளகுமாறு, அவனுடனான புலவிக்காலத்தில் அவனதுவரிசையாகச்சூடிய பொன்போலும் கொன்றைமலர், உண்மத்தமலர், படர்ந்த சடைக்காட்டில் உள்ள வளைந்த பிறை, அமுதத்துளிபோன்று விளங்கும் சிறந்த தும்பைமலர், மயிலாகவிளங்கும் கங்கைஆகியன ஒளிந்துகொள்ளுமாறு நீ மனம்சினக்க, உன்திருவடிகளை அவன் தடவிக்கொடுத்து தேனே! என்பிழையைப் பொறுத்தருள் என்றுவேண்ட, நீஉன் வளமான குமுதமலர் போன்ற வாய்திறந்து, நிலவின் ஒளிவீசும் முத்துகளாகிய பற்களை மூடிய முற்றியபவளம்போன்ற இதழ்களால், முத்தாக விளங்குகிறவளே! முத்தம் தருக! அயன் அரி அரன் ஆகிய மூன்று தேவர்களையும் முத்தொழிலுக்குத் தந்த உலகம்மையாகிய முத்தே! முத்தம் தருவாயாக.

**விளக்கம்** : பாண்டரங்கக் கூத்தாவது முற்றழிப்பில் அனைத்தும் வெண்மையான நீறு ஆக, அந்த வெண்மையான நீறணிந்து நீறிடையே சிவன் ஆடும் கூத்து. இதனைக் கலித்தொகை கடவுள் வாழ்த்து,

" மண்டுஅமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணைஎழில் அணைமென்தோள்
வண்டு அரற்றும் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ?

( கடந்து= வென்று. மதுகை= வலிமை, பாண்டு அரங்கம்= நீறினால் வெண்மையான அரங்கம். பாண்டு என்பது பண்டுஎன்றுமுதல்குறுகியது. பணை...... தோள் = அம்மை. வளர் தூக்கு= தொடர்ந்து தாளமிடல் )

கலவிக்காலத்துப் புலவி தீர்க்க " சீறேல் என்று அவள் சீறடி பணிதல் " உலகவழக்கு ஆகும். இலக்கியமாதலின் இதனை " நீ உதைத்த..........தேனே " என்றார்.

4. அள்ளித் திமிரம் சுளித்(து)எறியும்
மலரி மணித்தேர் பதிந்(து)உருளும்
ஆழி உழுத மேலைநிலத்(து)
அந்தப் பருவ வேளாளன்
புள்ளிக் குறும்தா ரகைஒருவெண்
பொடிஇட்(டு) இமநீர் பாய்ச்சிஇளம்
புனிற்றுப் பிறைவான் முளைதெளிப்பப
புதுப்பூங் கலைவேர் ஊன்றிநிலா
வெள்ளிக் குருத்து விரித்(து)அமுத
மென்சூல் முதிர்ந்து பால்கோதி
விளைந்த கதிர்வெண் தலைசாய்க்கும்
விரவும் புரிசை வரம்(பு)உடுத்த
முள்ளித் திருநாட்டு அணங்கரசே
முத்தம் தருக முத்தமே
முத்தே வரையும் தரும்உலக
முத்தே முத்தம் தருகவே.

**குறிப்புரை** : திமிரம் அள்ளி= இருட்டை அள்ளிஎடுத்து. சுளித்து= மனம் சுளித்து. மலரி= சூரியன். பதிந்து= வானமாகிய நிலத்தில் ஊன்றி. ஆழி= சக்கரம். மேலைநிலம்= வானவெளியாகிய நிலம். பருவ வேளாளன்= காலமாகிய உழவன். புள்ளிக்குறும் தாரகை= புள்ளிபோன்ற சிறு விண்மீன். வெண்பொடி= வெண்மையான சிறுவித்து. இமநீர்= குளிர்ந்த நீர். இளம்புனிற்றுப்பிறை= மிகமிக இளைய பிறை. தெளிப்ப= வெளிப்பட. கலைவேர்= ஒளியுடன்கூடிய வேர். நிலா வெள்ளிக்குருத்து= நிலவாகிய வெண்மையான குருத்து. அமுதமென் சூல்= அமுதமாகிய மென்மையான சூல். பால் கோதி= பால்பிடித்து, விரவித் தலைசாய்க்கும்= பரவி முற்றியதால் படுக்கும். புரிசை வரம்பு உடுக்கும்= மதில் எல்லையாகச் சூழ்ந்த. முள்ளித்திருநாட்டு= பண்டைநாளில் முள்ளிநாடு என்று வழங்கிய விக்ரமசிங்கபுரம்.

**பொழிப்புரை** : இருளைமனம் சுளித்து அள்ளிஎடுத்துப் போக்கும் சூரியன், தனது உருளும் சக்கரம் பதித்து உழுத வானமாகிய நிலத்தில், இருட்பருவமாகிய உழவன் புள்ளிபோன்ற சிறிய விண்மீனாகிய வெண்மையான பொடியை இட்டு, குளிர்ந்த நீர்பாய்ச்சி, மிகமிக இளைய மூன்றாம்பிறை என்கிற முளைவிடச் செய்து, புதிய மென்மையான ஒளியாகிய வேரூன்றச்செய்து, நிலவாகிய வெண்மையான இளங்குருத்துவிரியச்செய்து, அமுதமாகிய மென்மையான சூல் முதிர்ந்து, பால்பிடித்துமுதிர்ந்து, தலைவளைந்து கிடக்கும் வெண்நெல்லுடைய மதிலை எல்லையாககொண்ட முள்ளிநாடாகிய விக்ரம சிங்கபுரத்தில், பெண்தெய்வங்களுக்கு எல்லாம் அரசியாக உள்ளவளே! முத்தம் தருக.அயன் அரி அரன் ஆகிய மூன்று தேவர்களையும் அவரவர் தொழிலுக்குப் படைத்த அருள்தரு உலகம்மையாகிய முத்தே! முத்தம் தருக.

5. பொழியும் கருணைக் களிக்கயல்பைம்
பொன்தோள் முகந்த குழைஓலைப்
புறம்போய்த் திரியும் இருபுளகப்
பொருப்பின் நடுவண் பொருத்திஇசைத்தேன்
பிழியும் குழைத்த நரம்(பு)எறிந்து
பிணித்திட்(டு) இறுக்கும் வீணையின்மேல்
பிறைகூர் மெல்விரல் அளைந்து
பெருநீர் மதுரம் மிக்குற்று
வழியும் மழலைப் பசும்கிளிஓர்

மடல்காந் தளில்வந்(து) இருந்த(து)என
வளைக்கை இருந்து மழலைசில
வழங்கு வதற்கு மறுவார்த்தை
மொழியும் பவளம் திறந்து ஒருகால்
முத்தம் தருக முத்தமே
முத்தே வரையும் தரும்உலக
முத்தே முத்தம் தருகவே.

**குறிப்புரை :** கருணை பொழியும் களிக்கயல்= கருணையை மிகவழங்கிக் களிப்புடைய கயல்கள் ஆகிய கண்கள்.. பைம்பொன் தோள்முகந்த = வளமான அழகிய தோள்விரும்பிய. ஓலைக்குழை= ஓலையாகிய காதணி. புறம்போய் திரியும்= அப்பால் செல்லும். இருபுளகப் பொருப்பின் நடுவண் பொருத்தி= இரண்டுபுடைத்த குன்றுகளாகிய முலைகளின் நடுவில் வைத்து. பிழியும்= இசைவழங்கும். குழைந்தநரம்பு= தளர்வான நரம்பு. பிணித்திட்டு. இறுக்கும்= கட்டியபின்இறுகச்செய்யும். வீணையின்மேல்= வீணையில் கட்டிய. எறிந்து= நரம்பைத் துடிக்கச்செய்யும். பிறைகூர் மெல்விரல்= பிறைபோல் கூரிய மென்மையான விரலால். அளைந்து= துடிக்கச்செய்து. பெருநீர்மதுரம் மிக்குற்று= சிறந்த தன்மையுடன் கூடிய இனிமை மிக. வழியும். மழலைப்பசுங்கிளி= மழலை மொழியும் பச்சைக்கிளி. காந்தள் மடல்வந்து இருந்தது என= காந்தள் இதழில் வந்து இருந்தாற்போல்.. வளைக்கை இருந்து= வளையலணிந்த கையால் வீணயை மீட்டி மறுவார்த்தை மொழியும் பவளம் திறந்து= மறுமொழியாகப் பாடும் பவளம்போன்ற வாய்திறந்து ஒருகால்= ஒருதடவை.

**பொழிப்புரை :** கருணைமிக வழங்கிக் களிப்புறும் கண்கள் வளமான அழகிய தோள்கள் விரும்பும் ஓலைக்காதணியைக்கடந்து அப்பால்செல்ல, புடைத்த இரண்டு குன்றுகளாகிய முலைகட்கு இடையில் வைத்து, இசைவழங்கும் வீணையில், தளர்வாக நரம்பினைக் கட்டி இறுக்கியபின், அவ்வீணையின் நரம்பை, பிறைபோல் கூர்மையுடனான மெல்லியவிரலால் துடிக்கச்செய்து இசைவழங்கி, காந்தள் இதழ்போன்ற கைவிரலில் பச்சைக்கிளிஒன்று இருந்ததுபோல் வளையலணிந்த கைவிரலால் வீணையின் இசைக்கு மறுமொழிபோல் பவளவாய்திறந்துபாடும் முத்தாகவிளங்குகிறவளே! ஒருமுறை முத்தம்தருக அருள்தருஉலகம்மையாகிய முத்தே! முத்தம் தருக!

**விளக்கம் :** கண்கள் காதணியைக்கடந்து செல்லுதல் என்பது இசையில்தோய அமையும் மெய்ப்பாடு, வீணையை மார்புகட்கிடையில் அணைத்தல்,கட்டிய நரம்புகளை இறுக்குதல் என்பன வீணையை இசைக்கு ஏற்பத்தகுதி படுத்துதல், விரலால் நரம்புகளை தடவிமீட்டல் இசைவழங்கல், இசைக்கு ஏற்ப மறுமொழி என்றது பாடுதல் குறித்தன.

6. மிக்கத வத்தின்நு ழைந்துவி ருப்பொடு பெற்றஎ னக்(கு)ஒருகால்
விட்(டு)ஒளிர் பொன்பணி ஐம்படை சுட்டிதி ருத்தும்இ வட்(கு)கொருகால்
ஒக்கல்இ ருத்திவ ழங்குப சொற்கள்ப யிற்றும்உ வட்(கு)ஒருகால்
ஒக்கலை வைத்(து)அ மிர்தம்அ ருத்திவ ளர்க்கும்அ வட்(கு)ஒருகால்
மைக்கு வளைக்கண் வளர்த்திடு தொட்டில் அசைப்பஅ வட்(கு)ஒருகால்
. மற்(று)இன் நித்தில வண்டல்வி யர்ப்பவி ளைப்பவ அவட்(கு)ஒருகால்
முக்கள வின்குடி கொண்டவ ருக்(கு)உயிர் முத்தம்அ ளித்தருளே
முத்தமிழ் விக்ரம சிங்கபு ரத்தினள் முத்தம்அ ளித்தருளே

**குறிப்புரை :** ஒருகால்= ஒருமுறை. ஐம்படை= திருமாலின் சங்குமுதலிய ஐந்துபடைகள். சுட்டி= நெற்றிச்சுட்டி. ஒக்கல்= இடுப்பு. வழங்குப= பேசவேண்டிய. அமிர்தம்= பால்.கண்வளர்த்திடு= தாலாட்டுப்பாடி உறங்கவைக்கும். அசைப்ப= மென்மையாக ஆட்ட. வியர்ப்ப நித்தில வண்டல் விளைப்பவள்= வியர்வை வெளிப்பட முத்தாலான வண்டல்விளையாட்டு விளையாடுபவள்., உயிர்= உயிராக விளங்குகிறவளே..

**பொழிப்புரை :** முத்தமிழ் வழங்கும் விக்ரமசிங்கபுரத்தினளே! முக்களாநிழலில் எழுந்தருளியுள்ள பெருமானுக்கு உயிராக விளங்குகிறவளே! விருப்பமுடன் மிக்கதவம்செய்து உன்னைப்பெற்ற எனக்கு ஒருமுறை, ஒளிவீசும் ஐம்படைத்தாலியையும் நெற்றிச்சுட்டியையும் அவ்வப்போது திருத்திச்சரிசெய்யும் இவளுக்கு ஒருமுறை, இடுப்பில் வைத்துக்கொண்டு சொல்லவேண்டிய சொற்களைச் சொல்லிக்கொடுக்கும் இவளுக்கு ஒருமுறை, மடியில் வைத்துக்கொண்டு பாலூட்டும் இவளுக்கு ஒருமுறை, கருங்குவளை மலர்போன்ற கண்கள்உறங்குமாறு மென்மையாகத் தொட்டிலாட்டும் இவளுக்கு ஒருமுறை, உடல் வியர்ப்ப

முத்தாலான இனிய வண்டல்விளையாட்டை உன்னுடன் ஆடுகிறவளுக்கு ஒருமுறை முத்தம் கொடுத்தருள்க.

**விளக்கம்** : நினைவை நம்மூளைவாய்விட்டுச் சொல்லாமலேயே கைசெயற்பட்டு முடிப்பதுபோல் சிவபிரான் தன்நினைவைச் சொல்லாமலேயே அம்மை செயற்பட்டு முடிப்பவள் ( திருக்களிற்றுப்படியார். 78. நம்கையினால்..... ..... ) ஆதலின் அம்மையை உயிர் என்றார்.

7. மைத்தம ணிச்சிறை வண்டுச ரோருக மாளிகை யும்புனல்வாய்
வண்குமு தப்புது மாளிகை யும்போய் மன்றல் விருந்(து)உணத்
தத்தம்உ யிர்ப்பெடை யோ(டு)உயர் சேவல் தாழ்சிறை நேமியினம்
தழுவியும் வழுவியும் மருள்வட இருள்படு தண்டலை யும்படுபூங்
கொத்(து)அலர் வாவிஉ ழக்கியும் மேதிக் குழக்கன்(று) உள்ளமனைக்
குறுகியும் நின்றும லங்கத் திரைதரு குருமணி வெயிலோடு
முத்தம்நி லாவிரி பொருநைத் துறையவள் முத்தம்அ ளித்தருளே
முத்தமிழ் விக்ரம சிங்கபு ரத்தினள் முத்தம்அ ளித்தருளே.

**குறிப்புரை** : மைத்த மணிச்சிறை= கருமையான் அழகிய சிறகு. செரோருகம்= தாமரைமலர். புனல் வாய்= நீரில் உள்ள. மன்றல் விருந்து= மணம்மிக்க தேன்ஆகிய.விருந்து. தாழ்சிறை சேவல் நேமியினம்= நீண்ட சிறகுடைய ஆண்சக்கரவாகப்பறவையின் கூட்டம். வழுவியும்= சருக்கிவிளையாடியும். மருள்= மயங்கும். வட இருள்படு தண்டலை= ஆலமரத்தின் நிழலாகிய இருள்.பொருந்திய. சோலை. பூங்கொத்து அலர் படு= மலர்க்கொத்துகள் மலர்ந்துள்ள. வாவி உழக்கி= குளத்தைக் கலக்கி. மேதிக்குழக்கன்று= எருமையின் இளங்கன்று. திரைதரு= குளத்து அலைகள் தரும். குருமணி வெயில்= ஒளியுடன்கூடிய மாணிக்கத்தின் ஒளியுடன், முத்தம் நிலாவிரி= முத்துகளின் வெள்ளொளி படரும்.

பொழிப்புரை : கருமையான அழகிய சிறகுடைய வண்டுகள் நீரில்புத்தம் புதியயனவாய் பூத்த தாமரை மலர்களாகிய மாளிகையிலும், குமுதமலர்களாகிய மாளிகைகளிலும் மணக்கும் தேன்விருந்து உண்ண, நீண்ட சிறகுடைய ஆண்சக்கரவாகப் பறவைக்கூட்டம் தம் உயிர்போன்ற பெடையுடன் மயங்கும் இருளுடைய ஆலமரத்து நிழல் மற்றும் வண்டுகள் மொய்க்கும் பூங்கொத்துடைய உள்ளசோலைகளில் தழுவியும் சருக்கியும் விளையாட, எருமையும் அதன் இளங்கன்றும் உள்ளவீடுகளை அடைந்துமயங்க, குளத்து அலைகள் எதிரொளிக்கும் மாணிக்கச்செவ்வொளியடன் முத்தின் நிலாவொளியும் படரும்பொருநை யாற்றுத்துறைக்குரியவளே! முத்தம் தந்தருள்க! முத்தமிழ் வழங்கும் விக்ரமசிங்கபுரத்து அம்மையே! முத்தம் தந்தருள்க.

**விளக்கம்** : தெளிந்த நீருடைய பொருநையாறு பொதிகைமலைக்கண் தோன்றுவதால் “மலையில் பிறந்த காமருமணி” யின்செவ்வொளியையும், பொருநையில் தோன்றிய முத்துகளின் வெள்ளொளியையும் ஒருசேரப்படர்வதாயிற்று. .

8. சீதந தித்திரை அடிபட்(டு) உளைபடு சினைஉடை பட்(டு)அலறித்
திரிவளை முத்தம் உடைபடு பலவும்செ ழித்த வளைமுத்தம்
சாதகம் நுகரும் புயல்மழை சிதறித் தகரமு கக்கயல்பாய்
தடவரை முக(டு)உயர் வரைமுத்தம் தனிதழல்பட வரைமுத்தம்
ஆதலின் இத்தகை முத்தம்இ ரண்டும் முன்அணி வாள்நகைமுத்தின்
அம்பவ ளக்கனி முத்தைநி கர்த்தில ஐம்புலன் வழிசெல்லா
மூதறி ஞர்க்கொரு முத்திய ளிப்பவண் முத்தம்அ ளித்தருளே
முத்தமிழ் விக்ரம சிங்கபு ரத்தினள் முத்தம்அ ளித்தருளே.

**குறிப்புரை** : சீத நதித் திரை= குளிர்ந்த பொருநையாற்றின் அலை. உளைபடு= வருந்திய. சினை உடைபட்டு= கருஉடைந்து. திரிவளை= திரிகின்ற சங்கு. உடைபடு= சூல் உடைந்து. சாதம்= சாதகப்பறவை. புயல்மழை= மேகத்து மழைத்துளி. தகரச்சிதறி= உடைந்து சிதறியதால். அம்முகம்= அழகிய முகம். முகடு= உச்சி. வரைமுத்தம்= மூங்கில் ஈன்றமுத்து. தழல்பட= தீப்பட வரைமுத்தம்= மலைதந்த முத்து. முன்= முதன்மை. அணிவாள்நகை முத்தம்= அழகிய ஒளிபொருந்திய பற்களாகிய முத்து. அம்பவளக்கனி முத்து= அழ்கிய பவளம்போல் சிவந்த இதழ்தரும் முத்தம். நிகர்த்தில= ஒப்பாகா. ஐம்புலன் வழிசெல்லா= ஐந்து அறிவுகளின் வழியில் செல்லாத. முத்தி= வீடுபேறு.

**பொழிப்புரை** : குளிர்ந்த பொருநையாற்றின் அலைகளில் மொத்துண்டு வருந்தி, கருஉடைபட்டதால் அலறித்திரியும் சங்குகள் உடைபட்டு ஈன்ற செழித்த உருண்டையான முத்து; சாதகப்பறவை பருகும் மழைத்துளியாகிய முத்து உடைந்து சிதற, வளமான மலைஉச்சிநீரில் கெண்டைமீன்கள் பாயுமாறு வளர்ந்த மூங்கில் தீப்பட அம்மூங்கில் ஈன்றமுத்து ஆகிய இரண்டும், முதன்மையானதும், அழகிய ஒளியுடையதும், முத்துகளாக விளங்குவதும் ஆகிய பற்களைக்காக்கும் அழகிய பவளநிறத்துக் கொவ்வைக்கனி ஆகிய உன்உதடுகள்தரும் முத்தத்திற்கு ஒப்பாகா. ஐம்புலன்கள் வழியில் மனத்தைப்போக்காத ஞானியர்க்கு முத்திப்பேறு வழங்குகிறவளே! முத்தம் தந்தருள்க. முத்தமிழ் வழங்கும் விக்ரமசிங்கபுரத்து அம்மையே முத்தம் தந்தருள்க.

9. பெண்முத்தம் ஒன்(று)உளது சேண்மதி மதித்(து)அம்ம
பெரிதுமுத் தாடல் வேண்டும்
பிறைநுத லிவேறு பொருள்நினைத் தனைகொல்
மெய்ப்பேர்உ வமியம் காட்டி
ஒண்முத்(து) அரும்பும் கனித்துகிர் திறத்(து)எமக்கு
உரையா(து)இ ருத்திநீயாம்
ஓதுசொல் பொருள்சினைப் பெயர்வினை குறித்தன்று
ஒருதொழில் பெயர்கு றித்தேம்
விண்முத்தம் உச்சிப்ப சுங்கமுக முத்தமொடு
விளரிவண்(டு) உளரி முளரி
வெண்ணிலா முத்தமும் தத்தும்தி ரைக்கடல்
விளைந்தபரு முத்த மும்பைங்
கண்முத்த மும்பெற எனக்(கு) அரியமுத்தமே
கனிவாயின் முத்தம் அருளே
கலசமுனி தொழுசிங்கை உலகுடைய மடமங்கை
கனிவாயின் முத்தம் அருளே.

**குறிப்புரை** : பெண்= பெண்ணே. முத்தம் ஒன்று உளது= முத்தம் என்று ஒன்று உள்ளது. மதித்துக்கேண்மதி= ஆராய்ந்துபார்த்துக் கேள். பெரிதுமுத்தாடல் வேண்டும்= சிறந்தமுத்தம் தருதல் வேண்டும். வேறு பொருள்= முத்தம் தருதல் என்றதற்கு வேறுபொருள். நினைத்தனை கொல்= நினைத்தாயா உவமியம்= உவமை. முத்து அரும்பும்= முத்தம் தரும். கனித்துகிர் திறத்து= கொவ்வைக்கனி போன்ற செவ்விதழ்வாயைத் திறந்து. உரையாது இருத்தி= ஒன்றும் கூறாதிருக்கிறாய். யாம்சொற்பொருள்= நாம் சொன்ன முத்தம் என்ற சொல்லின் பொருள். சினைப்பெயர் வினை குறித்தன்று= உறுப்பாகிய இதழின்வினையாகிய முத்தம் தருதலைக் குறிக்கவில்லை. ஒரு தொழிற்பெயர் குறித்தேம்= ஒப்பற்ற விடுதலை - வீடுபேறு என்ற தொழிற்பெயரின் பொருளைக்குறித்தோம். ( முத்தம்= விடுதலை ) . விண்முத்தம் உச்சிப் பசுங்கமுகமுத்தம்= வானளாவிய வளமான பாக்குமரத்தின் முத்துகள், விளைஇசைக்கும் வண்டு= விளரிப்பண் பாடும் வண்டுகள் இசைக்கும். முளரி= தாமரைமலர்.. வெண்ணிலா= முழுநிலவு.. தத்தும் திரை= தாவிவரும் அலை. பருமுத்தம்= பருத்த முத்து. கண்முத்தம்= கரும்பின் கணு தரும் முத்தம். பெற= பெற்ற. வாயின்முத்தம்= இதழ்முத்தம்.

**பொழிப்புரை** : சிறுமியாகிய நீதரும் முத்தம் ஒன்று உள்ளது. நான்சொல்வதை நன்கு ஆராய்ந்துகேள். பிறைபோன்ற நெற்றியுடையவளே! முத்தம் என்றசொல்லுக்கு இதழால் முத்தமிடல் என்ற வேறுபொருள் நினைத்தாயா? (இங்கு)முத்தம்என்பதன் உண்மையானபொருளை, முத்துப் பற்கள்அரும்பும் கொவ்வைக்கனி போன்ற செவ்விதழ்களுடைய உன்வாய்திறந்து தருவது என்று நினைத்து ஒன்றும் சொல்லாதுள்ளாய்! நான் சொன்ன முத்தம் என்பது சினைப்பெயராகிய உதடுகளால்தரும் முத்தம் குறித்ததன்று. நான் குறித்த முத்தம் என்பது தொழிற்பெயராகிய விடுதலை - பிறப்பிலிருந்து விடுதலை - என்றபொருள் தருவதாகும். மேலும். வானை முத்தமிடும் உச்சியையுடைய கமுகமரம்தரும்முத்தம் ( முத்து ) வண்டுகள்விளரிப்பண் பாடும் தாமரைமலர் தரும்முத்தம்( முத்து ), வெண்ணிலாதரும் முத்தம் ( முத்து ) தாவிப்பாயும் அலைகளுடைய கடலில் விளைந்த பருத்த முத்தம் ( முத்து ) ஆகியன பெற்ற எனக்கு அரிய முத்தாக விளங்குகிறவளே! உன்கனிவாயின் முத்தம்தருக! அகத்தியர் வணங்கும் விக்ரமசிங்கபுரத்தவளும், உலகுடையவளும், என்றும் இளமையே ஆனவளும்ஆகிய நீஉன் கனிவாயால் முத்தம் தருக.

**விளக்கம் :** முத்தம் என்ற சொல், வாய்இதழ்கள்தரும் முத்தம் , விடுதலை ( பிறப்பிலிருந்து விடுதலை - வீடுபேறுபெறுதல் ) என்று இருபொருளும் தருவதாகும். இதழ்முத்தத்தைச் " சினைப்பெயர்தரும்வினை " என்றும், பிறப்பிலிருந்து பெரும்விடுதலையைத் தொழிற்பெயர் என்றும்குறித்தார். சினைப்பெயர் என்பது உதடு குறிப்பது. தொழிற்பெயர் என்பது. விடுதலை குறிப்பது.

**இலக்கணக்குறிப்பு :** கனிவாய் - வாய் - முதலாகுபெயர்

10. வெம்பிக்கொ டும்சமர் உடற்றும்ஒன் னலர்நாட்டு
வேண்டுவன கொள்ளை யிட்டு
வேந்தர்க்(கு)அ ளிக்கும்ஒரு சேவகன் செயல்என
விலங்கல் குறிஞ்சி யாடி
தும்பிப்ப ருப்பதம் முதல்பல அனைத்தையும்
சூல்பேய்வி ழித்(து)உ ணங்கச்
சுடும்கொடும் பாலைப்பு லத்(து)எவையும் முல்லைத்தொ
கைப்பெரும் பொருளும் மலர்வாய்ப்
பம்பிப்பொ றிச்சிறைய அளிஉறும ருதப்படப்பை
படுவளனும் வாரிப் பணிலம் முரலும்
வருணன் திருக்கோயில் அடையப்ப ரப்பிஉர
கேசன் மகுடம் எல்லாம்
கம்பிப்ப வருதிரைப் பொருநையம் துறைஇறைவி
கனிவாயின் முத்தம் அருளே
கலசமுனி தொழும்சிங்கை உலகுடைய மடமங்கை
கனிவாயின் முத்தம் அருளே.

**குறிப்புரை :** வெம்பி= மனம் புழுங்கி. உடற்றும்= செய்யும் ஒன்னலர் பகைவர். வேந்தற்கு= தன்அரசனுக்கு. சேவகன்= வீரன். விலங்கல்= கலங்கிய தண்ணீர். ஆடி= வென்று. பருப்பதம் தும்பி=, மலைபோன்ற யானை. சூல்பேய்= கருப்பம் கொண்ட பேய். விழித்து= விளங்கி. உணங்க= ஒலித்து. பாலைப்புலம்= பாலைநிலம். எவையும்= எல்லாவற்றையும். முல்லைத்தொகைப்பொருளும்= முல்லை நிலத்தில் தொகுத்த பொருள்கள். மலர்வாய்= மலரில். .பம்பி= ஆரவாரித்து. அளி= வண்டு. மருதப்படப்பை= மருதநிலத்தோட்டம். படு= விளையும்.. பணிலம்= சங்கு. வருணன் திருக்கோயில்= வருணனின் இருப்பிமாம் கடல். அடைய= முழுவதும். உரகேசன் மகுடம்= ஆதிசேடன் தலை கம்பிப்ப= நடுங்க.

**பொழிப்புரை :** மனம்புழுங்கிக் கொடிய போர்செய்யும் பகைவர்நாட்டில், தாம்வேண்டும்பொருள்களைக் கொள்ளையடித்துத்தனது அரசனிடம் அளிக்கும் வீரனைப்போல்; கலங்கி நீருடையகுறிஞ்சிநிலத்தில் வாழ் துதிக்கையுடையமலைபோன்ற யானை முதலிய பலவகைப்பொருளையும் கருப்பம்கொண்டபேய்போல் ஒலியுடன் இழுத்துத் தன்னுட்கொண்டு. சுடுகின்ற கொடியபாலைநிலத்துப்பொருள்கள் எவற்றையும், முல்லைநிலத்தில் தொகுத்த பெரும்பொருள் அனைத்துடன், மலரின்கண் புள்ளிகளுடன் ஆரவாரிக்கும் வண்டுகள்மொய்க்கும் மருதநிலத்தும் அதன்தோட்டங்களிலும் விளையும் பொருள்களையும் வாரிஎடுத்துக்கொண்டு, வருணனது திருக்கோயிலாகிய சங்குகள் ஒலிக்கும் கடல்முழுவதும், உலகைத்தாங்கும் ஆதிசேடனின் தலைகள் சுமையால் நடுங்குமாறு தான்கொண்டுவந்தனவற்றைப் பரப்பும் பொருநைத்துறைக்கு உரியவளே! கொவ்வைக்கனி ஒத்தஉன் வாயால் முத்தம் அருள்க. கலசமுனியாகிய அகத்தியரால் வணங்கப் பெறுகிறவளும் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள உலகம்மையும் ஆகிய என்றும் இளையவளே! உன்கொவ்வைக்கனி ஒத்தவாயால் முத்தம் தந்தருள்க.

**விளக்கம் :** ஐவகைநிலத்துப் பொருள்கள்களையும்கொண்டுவந்து கடலில்சேர்க்கும்பொருநைநீர்வளம் கூறினார். பாலை என்றொரு தனிநிலமில்லை, முல்லையும் குறிஞ்சியும் வேனில் வெப்பத்தால் திரிந்தது பாலைநிலம். மாரிவளம் பெறின் அது முறையே குறிஞ்சியும் முல்லையும் ஆகும். கடலினை " வருணன் மேய பெருமணல் உலகம் " என்பது தொல்காப்பியம்.

**இலக்கணக்குறிப்பு :** " வெம்பிக்கொடுஞ்சமர் ......சேவகன்செயல் " - உவமையணி, " கனிவாய் - எடுத்துக்காட்டு உவமையணிகள்.

11. உண்என்று கொங்கைக் குறுங்கண் திறந்துபிதிர்

ஓடிவரு பால்அ ருத்தி
ஒக்கலையில் வைத்துமனை முன்றில்பு றம்சென்று
உலாவித் திரிந்தும் ஏனை .
. தண்என்ற தென்றல் குழக்கன்று மெல்என்று
தடவக்கு ழைந்த சீதத்
தமனிய மடக்குயில் பிள்ளைஎன்(று) இனியசெந்
தார்கிள்ளை என்(று)என் அருமைப்
பெண்ணென்று முப்பத்தி ரண்(டு)அறம் வளர்க்கவரு
பெருமாட்டி என்று கடவுள்
பேரமுதம் என்(று)அரு மருந்(து)என்று வாழ்(வு)என்று
பெறல்அரும் செல்வம் என்று
கண்என்று கண்ணின்ம ணிஎன்றுசீ ராட்டுமயில்
கனிவாயின் முத்தம் அருளே
கலசமுனி தொழுசிங்கை உலகுடைய மடமங்கை
கனிவாயின் முத்தம் அருளே

**குறிப்புரை** : குறுங்கண்= சிறியதுளை. பிதிர்= திவலை. ஒக்கலை= இடுப்பு. முன்றில்= முற்றம். தண்தென்றல் குழக்கன்று= குளிர்ந்த தென்றலாகிய மிகஇளைய காற்று. தமனியக் குயில்= பொற்குயில்.. பிள்ளை= குழந்தை. கண்ணின்மணி= கண்பாவை.

**பொழிப்புரை** : முலையில் உள்ள சிறியதுளையைத் திறந்துகொண்டு வெளிப்படும் பாலினைப்பருகச் செய்து, இடுப்பில் தூக்கிவைத்துக்கொண்டு வீட்டின் முற்றத்துக்கு வெளியேபோய் உலாவி, மற்றும் தண்ணியதென்றலின் மிக இளையகாற்று மென்மையாகத்தடவிச்செல்ல; குளிர்ந்த அழகிய இளங்குயிலாம் குழந்தை, இனிய சிவந்தகோடாகிய மாலையணிந்த கிளி, என்அருமைப்பெண், முப்பத்திரண்டு அறமும் வளர்க்கத்தோன்றிய பெருமகள், கடவுளர்க்கெல்லாம் சிறந்த அமுதம், பிறவிபிணி தீர்க்கும்அருமருந்து, உலகின் வாழ்வுக்குரிய பொருள், பெறுதற்கரிய செல்வம், என்கண், கண்ணின் பாவை என்றெல்லாம் சீராட்டப்பெறும் மயிலே! கொவ்வைக்கனியாகிய இதழ்களால் முத்தம் தந்தருள்க! அகத்தியமுனிவரால் வணங்கபெறுகிறவளும், விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ளவளும், உலகம்மையும் ஆகிய என்றும் இளையவளே! கொவ்வைக் கனிஒத்த இதழ்களால் முத்தம் தந்தருள்க.

## 6. வாராப் பருவம் ( வருகைப் பருவம் )

1. பவுரி திரித்த நிருத்தன்அழல்
பழுத்த உடம்பு குழைத்திருந்த
பச்சை உடல்செம் மாந்துசெழும்
பதுமத் திருத்தாள் மண்டலித்துக்
குவியும் முழந்தாள் மிசைவளைக்கை
குனிப்பு நிமிர்த்து நீட்டிமலர்க்
குவளைக் கருங்கண் முகிழ்த்துமணிக்
குமிழின் நுனிக்கண் நோக்கிஅந்த
அவிர்பொற் கிரண மணிக்குமிழின்
அடங்கும் கவன வழியைஉச்சி
அளவும் செலுத்தி நினைவில்அசஞ்
சலமாய் இருந்து தியானிக்கும்
மவுனம் அமையும் இனிஎமது
வாழ்வே வருக வருகவே
மலயம் உடையாள் உலகுடையாள்
மறைநான்(கு) உடையாள் வருகவே.

**குறிப்புரை** : பவுரி= ஒருவகைநடனம். நிருத்தன்= சிவபிரான். அழல்பழுத்த உடம்பு= நெருப்புப்போல் சிவந்த உடம்பு. குழைத்து= குழையச்செய்து. இருந்த பச்சைஉடல்= இருந்த அம்மையின் பசுமையான உடம்பு. செம்மாந்து இருந்து= மிகக் களிப்புடன் இருந்து. பதுமத் திருத்தாள் மண்டலித்து= தாமரைமலர்

போன்ற திருவடியை மடக்கி. குவியும் முழந்தாள்= மடக்கிய முழந்தாள். வளைக்கை= வளைந்த கை. குனிப்பு நிமிர்த்து நீட்டி= வளைத்தலின்றி நீட்டி. கருங்கண்= பெருமைபொருந்தியகண். முகிழ்த்து= குவித்து. குமிழ் மணி= குவித்தவிழி. நுனிக்கண் நோக்கி= கூர்மையாகக் கண்ணால் பார்த்து. அவிர் பொற்கிரண மணிக்குமிழின் அடங்கும்= ஒளிரும் பொன்போன்ற ஒளிக்குமிழின் அடங்கிய. கவன வழியை= விரைந்த வழியை. உச்சியளவும் செலுத்தி= உச்சந்தலை அளவுவரை செலுத்தி. அசஞ்சலமாய்= சஞ்சலமின்றி. மவுனம் அமையும்= மவுனநிலையாக அமையும். இனி= இனிய. மலயம்= பொதிகைமலை

**பொழிப்புரை :** பவுரிஎன்னும் நடனமாடும் சிவபிரானின் மிக்கநெருப்புப்போன்ற திருமேனியைக் குழையச்செய்திருந்த அம்மையே! செம்மாந்த செழுமையான தாமரைமலர்போன்ற அழகியகாலை மடக்கி., மடக்கிய முழந்தாள்மேல் வளைவாக வைத்திருந்த கையை வளைவிலிருந்து நீட்டி, குவளை மலர்போன்ற பெருமைபொருந்திய கண்களைக் குவித்து, குவித்தவழியில் கூர்மையாகப் பார்த்து, ஒளிரும் பொன்போன்ற ஒளியை விரைந்து உச்சந்தலையளவும் செலுத்தி, அந்நினைவின்கண் சஞ்சலமின்றித் தியானிக்கும் மவுனநிலையில் அமைகின்ற எமது இனிய வாழ்வாக உள்ளவளே வருக! பொதிகைமலைக்கு உரிமையுடையவளே! உலகிற்கு உரிமைஉடையவளே! மறைகள் நான்கிற்கும் உரியவளே! வருக!

**இலக்கணக்குறிப்பு :** வாரானை - ஆனை ஈற்றுத்தொழிற்பெயர்.

2. ஊழ்த்து விழுந்து வெயில்கதிர்பட்டு
உலர்ந்து கிடந்த சருகேனும்
உனது சரண உகளசரோ
ருகத்தில் அர்ச்சித்(து) உய்யாமல்
பாழ்த்த சனனத் தொடும்திமிரப்
பரவை அழுவத்(து) அழுங்கவிடும்
பாச எரியும் பவவெயிலும்
பாழ்பட்(டு) எரிப்பத் திரியும்மனம்
காழ்த்த வயிரச் சிலைகுழத்(து)ஓர்
கலவிப் பெருநாண் இறுக்கிநிறை
கலங்கா அறிவின் கணைகொழுவிக்
கனிவாய் நெகிழ்ந்(து)ஈ சனைஅ னையார்
வாழ்த்த மனத்துக்(கு) எட்டாத
வாழ்வு தருவாய் வருகவே
மலயம் உடையாள் உலகுடையாள்
மறைநான்கு உடையாள் வருகவே.

**குறிப்புரை :** ஊழ்த்து= முதிர்ந்து. உகள சரண சாரோருகமம்= இருதிருவடித்தாமரை. .திமிரப்பரவை= இறுமாப்பாகிய கடல். அழுவத்து= ஆழத்தில். அழுங்கவிடும்= வருந்தச்செய்யும். பாச எரி= பாசங்களாகிய நெருப்பு. பவவெயில்= பிறவியாகிய வெயில். எரிப்ப= எரிக்க. காழ்த்த வயிரச்சிலை= முற்றிய வயிரத்தால் ஆன வில். குழைத்து= வளைத்து. கலவிப்பெருநாண் இறுக்கி= உன்னுடன் கலத்தலாகிய வலிமையான கயிற்றை இறுகக்கட்டி. நிறைகலங்கா அறிவின் கணைகொழுவி= உறுதிகுலையாத அறிவாகிய அம்பினைப் பூட்டி. ஈசனை அனையார்= இறைவனை ஒத்தவர். மனதுக்கு எட்டாத வாழ்வு= நினைக்கவும் இயலாத பெருவாழ்வு.

**பொழிப்புரை :** முதிர்ந்து கீழேவிழுந்து வெயிலால் காய்ந்த சருகையாவது உனதுஇருதிருவடித் தாமரையில் இட்டு வணங்கி ஈடேறாமல், பாழான பிறவிகளுடன் இறுமாப்புஆகிய கடலின் ஆழத்தில் கிடந்து வருந்தச்செய்யும்பாசமாகிய நெருப்பும், பிறவியாகிய வெயிலும் எரிப்பப் பாழாகித் திரியும் நிலையில்; மனமாகிய முற்றிய வயிரத்தாலான வில்லை, உன்னுடன் கலத்தலாகிய வலிமையான கயிற்றால் வளையுமாறு இறுகக்கட்டி, உறுதிகுலையாத அறிவாகிய அம்பினைப் பூட்டி, ஈசனைஒத்தவர் தம்கனிஒத்த வாய்திறந்து வாழ்த்த, நினைத்தற்கும் எட்டாத பெருவாழ்வு அருள்கிறவளே வருக! பொதிகைமலையும், இவ்வுலகும் நான்குமறைகளும் உடையவளே வருக

**இல்க்கணக்குறிப்பு :** உகள சரண சரோருகம், திமிரப்பரவை, பாசஎரி, பவவெயில், மன வயிரச்சிலை, கலவிப்பெருநாண், அறிவின்கணை - உருவகங்கள். இச்செய்யுள் முற்றுஉருவகவணி.

3. பொதிவாய் முளரித் தளைநெரியப்
புழுங்கும் சுடரோன் தனைஒருநாள்
புகல்பெற் றமையால் மதிக்களங்கம்
போக்கக் கரம்கொண்(டு) அழைப்ப(து)என
நுதிவாய்ப் புரட்டித் தீட்டியகூர்

**நொள்வாள் மழுங்கக் கறை தோய்த்த**
நுண்ணீர்க் கயிற்றின் குறிப்படுத்தி
நுடங்கா(து) அறுத்துத் திருந்துதிருப்
பதிவாய் உமிழ்ந்த படிவிளக்கும்
பதும ராக அரிசேர்த்த
பருதி மதில்செந் துகில்கொடியால்
பகலை விழுங்கும் மருள்மாலை
மதிவாய் துடைக்கும் தமிழ்ச்சிங்கை
வளநாட் டரசி வருகவே
மலயம் உடையாள் உல(கு)உடையாள்
மறைநான்(கு) உடையாள் வருகவே.

**குறிப்புரை** : வாய்பொதி முளரித்தளை= குவிந்துள்ள தாமரையின் குவிந்தநிலை. நெரிய= அவிழ. புழுங்கும்= சுடும். புகல்= தஞ்சம். மதிக்களங்கம்= நிலவின்முயல்கறை. அழைப்பது என= அழைப்பதுபோல். நுதிவாய்= கூர்மையை. புரட்டித்தீட்டிய கூர்= இருபுறமும் புரட்டித்தீட்டியகூர்மை. நொள்வாள்=கூர்மையான வாள். கறை தோய்த்த= கறைபடிந்த. நுண்ணீர்= நுட்பமான தன்மை. குறிப்படுத்தி= அடையாளப்படுத்தி - நுடங்காது அறுத்து= குறையின்றி அறுத்து. திருந்து திருப்பதிவாய்= அழகிய சிங்கைக்கண். உமிழ்ந்தபடி விளக்கும்= ஒளிவெளியிட்டபடி ஒளிதரும். அரி= ஒளியுடைய. பதுமராக அரிசேர்த்த= மாணிக்க ஒளிபொருந்திய. பருதி மதில்= வட்டவடிவமதில். செந்துகில் கொடியால்= சிவந்த துணிக்கொடியால். பகலை விழுங்கும்= பகற்பொழுதை ஒழிக்கும். மருள் மாலை= மயக்கம் தரும் மாலைநேரம். மருள்மாலை பருதிமதில் செந்துகில்கொடியால் மதிவாய் துடைக்கும் என்க.

**பொழிப்புரை** : குவிந்துள்ள தாமரையின் குவிந்தநிலை அவிழ - மலரச் சுடும் - வெப்பம்தரும் சூரியனைக் காலைநேரத்தில் தஞ்சம்பெற்றதால், நிலவின் முயற்கறை போக்கக் கைகாட்டி அழைப்பது போல் வட்டமான மதிலில்கட்டிய செந்நிறத் துகிற்கொடியானது, இருபுறமும் புரட்டிக்கூர்மையாகத் தீட்டிய கூர்வாள்போல் இருள்மழுங்குமாறு அறுத்து, கறைபடிந்த நுட்பமான ஒளியாகிய கயிற்றால்கட்டி, அழகியசிங்கை நகர்க்கண் ஒளிவெளியிட்டவாறு விளங்கும் மாணிக்கமணி செவ்வொளி உமிழ, பகற்பொழுதை முடித்துவைத்து, மயக்கம் தரும் மாலைப்பொழுதில் விளங்கும். இவ்வாறு நிலவின் மாசுதுடைப்பதுபோல் கொடிபறப்பதும், தமிழ்வழங்குவதும்ஆகிய வளமான விக்ரமசிங்கபுரத்து அரசியே வருக! பொதிகை, உலகம், நான்மறை ஆகியவற்றைத் தன்உரிமையாக உடையவளே! வருக!

**விளக்கம்:** சிங்கையைச்சூழ்ந்த மதிலில் கட்டிய மாணிக்கமணிபோல் ஒளிரும்செந்நிறத் துணிக்கொடி, மாலைச் செஞ்ஞாயிற்றொளியில் நகருக்கு ஒளியூட்டி இடம்வலமாக வீசிப்பறப்பது, தீட்டும் வாளால் நிலவின் களங்கம் துடைப்பதுபோல் விளங்கும் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

4. அழியா முதலே முதற்சமயம்
ஆறும் பொருந்தி அவரவர்க்கு
அருளும் கருணைத் தெய்வதமாய்
அமையும் அமைவே அமையாத
மொழிஆ ரணத்தின் முதுபொருளே
முதிராப் பருவத்(து) ஆணிமுத்தே
முத்தே வரும்உற் பவித்தஒரு
மூலத் தலமே நிலவலையத்(து)

ஒழியா(து) இயற்றும் தவத்தர்உளத்(து)
ஒன்றே ஒன்றால் அளப்பரிய
உணர்வே உணர்வு கடந்தபரத்(து)
ஒடுங்கி ஒடுங்கா(து) உயிர்த்தொகைஊழ்
வழியா இயக்கி விளையாடும்
மாயைக் கடலே வருகவே
மலயம் உடையாள் உல(கு)உடையா
மறைநான்(கு) உடையாள் வருகவே

**குறிப்புரை** : முதல்= முதற்பொருள்.. சமயம் ஆறு= சைவம், வைணவம், காணாபத்யம், கௌமாரம், சௌரம், சாக்தம். மொழிஅமையாத= எழுதாக்கிளவியான. ஆரணம்= வேதம். முதிரா= என்றும் இளைய.. உற்பவித்த= தோன்றிய. நிலவலையம்= பூமி. ஒன்றே= ஒப்பற்றபொருளே. ஒன்றால் அளப்பரிய= எந்த ஒன்றாலும் அளக்கவியலாத. பரம்= சிவபரம்பொருள். ஒடுங்கி= ஒடுங்கி இருந்தும். ஒடுங்காது=வெளிப்பட்டு ஊழ்வழியா உயிர்த்தொகை இயக்கி= அவரவர் ஊழின்படி உயிர்க்கூட்டத்தை இயக்கி. மாயைக்கடல்= திரோதான சத்தி..

**பொழிப்புரை** : அழிவே இல்லாத முதற்பொருளே! முதன்மையான ஆறு சமயங்களிலும் பொருந்தி, அவ்வச்சமயத்தவர்க்கு அருளும் கருணவடிவான தெய்வமாய் அமைந்தவளே! எழுதாக்கிளவியான வேதத்தின் தொன்மைப்பொருளே! என்றும் இளையகட்டாணிமுத்தே! அயன் அரி அரன் ஆகிய மூன்று தேவர்களும் தோன்றக்காரணமான மூலஇடமே! உலகில் தவம்இயற்றுவோர் உள்ளத்தில் இருக்கும் ஒப்பற்றபொருளே! எந்த ஒன்றாலும் அளவிடவியலாத உணர்வே! உணர்வெலாம் கடந்த பரம்பொருளிடத்து ஒடுங்கிஇருந்தும், வெளிப்பட்டு அவரவர் ஊழ்வினையின்படி உயிர்களை எளிதில் இயக்கும் திரோதான சத்தியான கடலே! வருக! பொதிகையையும் உலகையும் நான்மறைகளையும் உடையவளே வருக!

**விளக்கம்** : வேதம் பண்டு வரிவடிவில் இல்லை என்ற செய்தியை மொழிஅமையாத ஆரணம் என்றார். இதன்காரணமாகவே, பின்வந்த சிலர்அதில் இடைச்செருகலாகத் தம்கருத்தைச் சேர்க்கவாய்ப்பு நேர்ந்ததுஎன்பர். முற்றழிப்புக்காலத்தில் உயிர்கள் அனைத்தும் படிமுறையில் ஒன்றினொன்றாக ஒடுங்க, இறுதியில் அவை அம்மையுள் ஒடுங்க அம்மையும் பரம்பொருளில் ஒடுங்குவாள் என்றும், ஒடுங்கி இருந்த அம்மை படைப்புக்காலத்தில் அம்முறையே வெளிப்பட்டு ஐந்தொழில் புரிவாள் என்றும் சைவசாத்திரங்கள் கூறும். அருட்சத்தியாகவும், மறைப்புச்சத்தியாகவும் ( திரோதானசத்தி ) இருப்பவள், அருட்சத்தியாகஇருந்து தகுதிவாய்ந்த உயிர்களுக்கு வீடுபேறு அருள்வாள், தகுதிபெற வேண்டிய உயிர்களுக்கு மறைப்புச் சத்தியாக இருந்து தகுதிபெறும்வரை தக்கபிறவியருள்வாள். மறைப்பாற்றலாய் இருந்து, உயிர் தகுதிபெறப் பிறவி அருள்வதை " ஊழ்வழி இயக்கி விளையாடும் மாயைக்கடலே " என்றுகுறித்தார்.

5. எழுதும் திலக நுதலின்முளைத்(து)
எழும்வேர்(வு) அழிக்க வருகசிற்றில்
இழைத்த சிறுசோறு ஒருகால்இங்(கு)
எமர்க்கும் தரநீ வருகஉடல்
புழுதி துடைக்க வருகவிரைப்
புதுநீர் ஆட்ட வருகபணி
பூட்ட வருக அஞ்சனம்கண்
புனைய வருக பசித்(து)அழுத
அழுகை தணிய ஒக்கலைவைத்(து)
அமுதம் அருத்த வருகஎடுத்த
அயினி சுழற்ற வருகதொட்டில்
ஆட்டித் துயிற்ற வருகதமிழ்
வழுதி உலகம் தனிபுரக்க

வருவாய் வருக வருகவே
மலயம் உடையாள் உல(கு)உடையாள்
மறைநான்கு உடையாள் வருகவே.

**குறிப்புரை :** நுதலின்= நெற்றியில். சிறுசோறு= எளிய உணவு( மணற்சோறு ) ஒருகால்= ஒருமுறை. விரை= நறுமணம். ஆட்ட குளிப்பாட்ட. பணி= அணிகலன். புனைய= அழகாகஎழுத ஒக்கலை- இடுப்பு. அயினி=.ஆலத்தி நீர். தமிழ்- இனிமை. வழுதி= பாண்டியன்.

**பொழிப்புரை :** பொட்டுவைக்கும் நெற்றியில் தோன்றிய வியர்வையைத் துடைக்கவும்; இழைத்த சிற்றிலில். எளிய சோறாகிய மணற்சோற்றை எடுத்து எம்போன்றவர்க்கும் படைக்கவும்; உன் உடலில் படிந்த புழுதியைத் துடைக்கவும், மணக்கும் புதியநீரால் நீராட்டவும்: அணிகலன் பூட்டவும்; கண்களுக்கு மைஎழுதவும்; பசித்ததால் அழுதஉன்அழுகை தணியுமாறு உன்னை எமது இடுப்பில் வைத்துக்கொண்டு உணவுஊட்டவும், சுற்றவைத்த ஆலத்தி சுற்றவும்; உன்னைத் தொட்டிலில் கிடத்தி உறங்கவைக்கவும் இனியபாண்டிய நாட்டை ஒப்பற்ற முறையில் காக்கவும்; பொதிகைமலை, உலகம், நான்மறைகள் ஆகியவற்றுக்கு உரிமையுடையவளே வருக! வருக!

6. கற்றைச்ச டைக்கடவுள் மதிமுதுகு றிஞ்சிஉயர்
கடிமனைஇ யற்று வதுபோல்
கன்னிமா வினைமாக்கள் மணம்முற் குறித்த(து)எனக்
கடையுகம்மு டிந்த காலைப்
பொற்றைத்தி சைக்கிரிகள் தூண்நட்டு நேமிக்குப்
புறஞ்சுவர் எழுப்பி விரியும்
புவனப்பெ ருங்கோடி வீடுகள்அ மைக்கும்பொ
ருட்(டு)எம்பி ராட்டி விழைவால்
இற்றைப்ப கல்புவியில் அத்தகைநி றீஇவகுத்(து)
இட்டதுகொல் என்று மருள்பட்(டு)
இருக்கும்முதல் யாவரும்அ ழுங்கத்தெ ருத்தலைஇ
ருந்(து)இனிது சிற்றில் கோலும்
ஒற்றைப்பி றைக்கண்ணி அண்ணல்பங்(கு) உறையுள்என
உறையும்நா யகிவ ருகவே
உரைதெரிசொல் முனிபரவும் நரைவிடையில் வருகருணை
உலகநா யகிவ ருகவே.

**குறிப்புரை :** கற்றைச்சடை மதி முதுகடவுள்= கற்றையான சடை, பிறை ஆகியன உடைய முழுமுதல் ஆகியசிவபிரான். உயர்குறிஞ்சி= உயரமான மலையில். கடிமனை= பாதுகாப்பான வீடு. கன்னி= கன்னியாகிய அம்மை. கடையுகம் முடிந்தகாலை மாக்கள் மணம் முன்குறித்தது என என்றுகூட்டுக. கடைஉகம் முடிந்தகாலை= கடையூழி முடிந்தபோது. மா வினை= சிறந்ததாகிய படைப்புத்தொழிலை. மாக்கள் மணம்= உயிர்களை நன்னிலையில். முன்குறித்தது என= முன்பு இருந்தவறே. திசை பொற்றை= திசையெங்கும் சிறுதூறுடைய புற்கள். கிரிகள் தூண்நட்டு= மலைகளாகிய தூண்கள்நட்டு. நேமிப்புறம் சுவர் எழுப்பி= அண்டவெளிக்கு அப்புறம் சுவர் அழுப்பி. விரியும்= மேன்மேலும் விரிந்துகொண்டே செல்லும். கோடிபெரும் புவன வீடு= கோடிக்கணக்கான பெரியவீடுகள் - அண்டங்கள். விழைவால்= விருப்புடன். இற்றைப்பகல்= இன்றைய சூரியன். அத்தகை= அதுபோல். நிறீஇ வகுத்து= நிறுவியும் வகைப்படுத்தும். இட்டதுகொல்= புதிதாக அமைத்ததோ. மருள்பட்டு= அதிசயப்பட்டு. முதல்= முதற்பொருளாகிய சிவபிரான். அழுங்க= ஆரவாரிக்க. தெருத்தலை= தெருவில். கோலும்= கட்டும். கண்ணி= மலர்மாலை. பங்கு= பாதி, உறையுள் என உறையும்= வாழிடமாக வாழும். உரைதெரி சொல்= புகழ்வாய்ந்த சொற்கள். முனி= அகத்தியர். நரைவிடை= வெண்மையான எருது. . . .

**பொழிப்புரை :** கற்றையான சடை, பிறை ஆகியனவுடைய முழுமுதலான சிவபிரான், உயரமானமலையில் பாதுகாப்புடைய வீட்டினைக் கட்டுவதுபோல், என்றும் கன்னியான அம்மை; கடை யூழி முடிந்தபோது சிறந்ததாகிய படைப்புத்தொழிலைச்செய்யவிரும்பி, உயிர்கள் நன்னிலையில் வாழக் கடைஊழிக்குமுன் இருந்தபடி திசைஎங்கும்சிறு தூறுடைய புற்கள் முதலிய உயிர்களுக்கு மலைகளாகிய தூண்கள்நட்டும், அண்டவெளிக்குஅப்பால் வெளியேசுவரெடுத்தும், மேன்மேலும் விரிந்துசெல்லும்

அண்டத்தில் கோடிக்கணக்கான உலகங்களை அமைக்கும் விருப்புடன், உலகில் இன்றைய சூரியனையும் நிறுவிவகைப்படுத்தியதுபோல உள்ளதுஎன்று, முதற்பொருளாகிய சிவபிரான் முதலிய அனைவரும் ஆரவாரிக்க, இத்தெருவில்இருந்துகொண்டு அழகிய சிற்றில்கட்டுகிறவளே!; மாலையாகப் பிறைஒன்றை அணிந்த தலைமைசான்ற சிவபிரானின் இடதுபாகத்தை இருப்பிடமாகக்கொண்டு வாழும்தலைவியே வருக.! புகழும்சொற்களால் அகத்தியர் போற்ற வெள்விடையில் ஏறிவருக! கருணைவடிவான உலகம்மையே! வருக!

**விளக்கம் :** கடையூழியில் அண்டம் அழிந்ததால், மீண்டும்படைப்புக்காலத்தில் அம்மை முன்புபோல் புல்முதலிய உயிர்கள்வாழ அண்டங்களைப் புறச்சுவருடன் நிறுவி, சூரியனையும் அமைத்ததுபோல், அனைவரும் ஆரவாரித்து மகிழ இத்தெருவில் சிற்றில் கட்டியவள் என்றார்.

அம்மை, அண்டமீன்றவளாயினும் கருக்கொண்டு ஈன்றவளல்லள். நினைப்பளவில்ஈன்றவள் ஆதலின் கன்னி என்றார். “ பவன்பிரமச் சாரியாகும் பால்மொழி கன்னியாகும் “ என்பது சிவஞானசித்தியார்.

“ அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பரும் கோடி “ என்ற திருவாசகச் செய்தியை இவரும் கூறுகிறார். இதனை இன்றைய அறிவியலும் வழிமொழிகிறது.

உலகத்தோற்றம், முற்றழிப்பு / ஒடுக்கம்பற்றிய ஆன்மிகச்செய்தியும், இன்றையஅறிவியல் முடிபும் பலசெய்திகளில் ஒத்திருப்பதை இவ்வலைத்தளத்தில் எதிர்வரும் எனது “ ஆன்மிகமும் அறிவியலும் “ என்ற கட்டுரையில்விரிவாகக் காணலாம்.

**இலக்கணக்குறிப்பு :** நிறீஇ - இன்னிசை அளபெடை.

7. இருக்(கு)ஓலி டும்பொருள் மணக்கோலம் நெஞ்சகத்(து)
ஏக்கற அடங்க நோக்கி
இத்தலை இருத்திஎன அத்தலையின் அவன்அருளின்
எம்மைத்து றந்து நெடுநாள்
மருக்கோதை விரிகுழல் பன்னியொடும் இன்னியம்
வளர்க்கும் துளக்(கு)இல் முனிவன்
வைகினன்ள எக்கண்டி ரந்தும்அவன் எனவிழையும்
வானவர் ஒருங்கு விழைதோய்
முருக்(கு)ஓம வெங்கனல் இயற்றும்த வத்தரொடு
முதுபொலன்அ ருக்கன் மேரு
முந்துதமிழ் வரைகாண வந்(து)அங்(கு) இருந்த(து)என
முனிவர்விண் ணவரின் விழையும்
உருக்கோபு ரம்திகழ் திருக்கோயில் அரசமட
ஓதிமப் பெடைவ ருகவே
உரைதெரிசொல் முனிபரவு நரைவிடையில் வருகருணை
உலகநா யகிவ ருகவே.

**குறிப்புரை :** இருக்கு= இருக்குவேதம். ஓலிடும்பொருள்= ஐயாஎன்று ஓங்கி அழைக்கும் பொருளாகிய சிவபிரான். மணக்கோலம்= திருமண அழகை. ஏக்கற= ஆசையால் தாழ்ந்து. அடங்க= முழுவதுமாக. அத்தலை= அவ்விடத்தில்.. எம்மைத்துறந்து= தேவர்களாகிய எம்மைப்பிரிந்து. மருக்கோதை விரிகுழல் பன்னி= மணக்கும் நீண்டகூந்தலுடைய மனைவி. இயம் வளர்க்கும்= இசைவளர்க்கும். துளக்கு இல் முனிவன்= கவலையற்ற அகத்தியர்.. அவன் என விழையும்= சிவபிரான் என்று விரும்பும். விழை தோய் விருப்பம் கலந்த. முருக்கு முதிர்ந்த. ஓமவெங்கனல்= மிக்க வேள்வித்தீ. முதுபொலன் மாற்றுயர்ந்த பொன். அருக்கன்= மாற்றுயர் பொன்போன்ற சூரியன். மேரு முந்துதமிழ்வரை= இமயமலைக்கு முன்தோன்றிய பொதிகைமலை. விழையும்= விரும்பும். உருக் கோபுரம்= அழகிய கோபுரம். மட அரச ஓதிமப் பெடை அன்னமே= என்றும்இளைய, தலைமைசான்ற பெண் அன்னம் ஒத்தவளே. உரைதெரிசொல் பரவு முனி= புகழ்வாய்ந்த சொற்களால் போற்றும் அகத்தியர். நரைவிடை= வெண்மையான நிறமுடைய எருது.

**பொழிப்புரை :** இருக்குவேதம் ஐயா என்று உரத்து அழைக்கும் பொருளாகிய சிவபிரானுடனான திருமணக் கோலத்தைப் பொதிகையில் மனத்தில் ஆசையுடன் கண்டுபணிந்து, இங்கேயே இனிமேல் எழுந்தருளவேண்டும் என்று அகத்தியர் வேண்ட, அவ்விடத்தில் ( பொதிகைமலைக்கண் ) அகத்தியர்

வேண்டியபடி,தேவர்களாகியஎங்களைப்பிரிந்து, மணக்கும் மாலைசூடிய தன்மனைவியுடன் இசைவளர்த்தவரும், அவலக்கவலை இல்லாதவரும் ஆகிய அகத்தியருடன் பொதிகையில் உள்ளான் என்று அறிந்து விருப்பத்துடன், முதிர்ந்த வேள்விசெய்யும் தவத்தினருடன், மாற்றுக்குறையாத பொன்போன்று ஒளிரும் சூரியன், மேருமலையாகிய இமயமலைக்கு முன்தோன்றிய பொதிகைமலைக்கு வந்துஅருகில்இருந்தாற்போல், தேவர்கள் விரும்பும் அழகியகோபுரமுடன்கூடிய பாவநாசத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள என்றும்இளையவளும், தலைமை சான்றவளும் ஆகிய பெண்அன்னமே! வருக! புகழ்ந்து வணங்கும் அகத்தியரால்போற்றப் பெறுகின்றநீ வெள்விடையில்வருக! கருணைவடிவானவள் ஆகிய அருள்தரு உலகம்மையே! வருக!

**விளக்கம் :** பொதிகையில் சிவபிரானின் திருமணக்கோலம்கண்ட அகத்தியர் வேண்ட, தேவர்களைப் பிரிந்துவந்து பொதிகையில்தங்கிய பெருமானைத் தேவர்கள் சூழ, சூரியன்பொதிகைமலையில் காணவந்ததுபோல் ஒளிரும் கோபுரமுடைய கோயிலில் எழுந்தருளியுள்ளவளே வருக! என்றார்.

இருக்கு முதலிய வேதங்களால் காணவும் முடியாதவன் சிவபிரான் என்பதை,

" வேதங்கள் ஐயா எனஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே"

என்னும் மாணிக்கவாசகரின் அருள்வாக்கினால் அறியலம்.

அகத்தியமுனிவர் வீணை இசைப்பதிலும் வல்கவர் ஆதலின் அவரை, " இன்னியம் வளர்க்கும் முனிவன் " என்றார்.

புவிஆய்வாளர்கள் அனைவரின் " இமயமலைக்கு முன்தோன்றிய மூப்புடையது பொதிகைமலை " என்ற ஆய்வு முடிவை உட்கொண்டது " மேருமுந்து தமிழ்வரை " என்ற தொடர்.

8. பாலிடுநி லாத்தெள்ளு துள்ளுவெள் அருவிசெம்
பருமணிக் கொள்ளை தள்ளிப்
பாயும்இம சயிலத்(து) அரும்பிநின் கேள்வர்எழு
பண்ணிசைப் பரவை ஆறு
காலிடுதொ றும்தளைதெ றித்(து)ஒழுகும் இதழியக்
கத்திகைத் தேறல் மோதிக்
கட்(டு)அவிழும் வட்டச்ச டாபந்தி வெந்தழல்
கானத்(து)அ லர்ந்து ஞான
நூலிடுநெ றிப்பொறை ஒழுக்கம்தி றம்பாத
நுணங்கிய வரம்பில் புலமை
நோன்மையர்தம் மானதப் புனல்வாவி யில்பொலிய
நூல்சுரு திஆக மம்ஓதி
ஓலிடும் அவர்க்(கு)இறை உவப்பக்க ருத்தகயல்
உண்கண்நா யகிவ ருகவே
உரைதெரிசொல் முனிபரவு நரைவிடையில் வருகருணை
உலகநா யகிவ ருகவே.

**குறிப்புரை :** பாலிடு நிலா= வெண்மையான ஒளி. தெள்ளு= தெளிந்த. துள்ளு= துள்ளிவிழும். செம்பருமணிக் கொள்ளை தள்ளி= மாணிக்கமணிகளை மிகவும்தள்ளிக்கொண்டு. இமசயிலம்= இமயமலை. நின்கேள்வர்= உன்கணவன் அரும்பி= தோன்றி. எழுபண்ணிசைப் பரவை= தோன்றிய இசைக்கடல். ஆறுகால்இடுதொறும்= வண்டுகள் தொடும்போதெல்லாம். கட்டவிழும் இதழியக் கத்திகைத் தேறல்= மலரும் இதழ்களுடைய குருக்கத்தியின் தேன். மோதி= பட்டு. வட்டவெந்தழல் சடாபந்தி கட்டவிழும் கானத்து ஞானம்அலர்ந்து (என்றுகூட்டுக.)= வட்டமாகக் கட்டபெற்ற தழல் ஒத்த சடைக்காடுடையவர் ஞானத்தில் தோன்றி. நூலிடு = நூல்கள் வகுத்த. திறம்பாத= மாறுபடாத. நுணங்கிய வரம்பில் புலமை நோன்மையர்= நுட்பமான, எல்லையற்ற நோன்பினர். மானதப் புனல்வாவியில் பொலிய= மனமாகிய ஞானநீருடைய குளத்தில் சிறந்து விளங்க. சுருதிநூல் ஓதி= வேதம் ஓதி. ஓலிடும்= அழைக்கும். இறை உவப்ப= சிவபிரான் மகிழ. உண்= மையுண்ட.

**பொழிப்புரை :** வெண்மையானஒளியுடையதும், தெளிந்ததும், துள்ளிவிழுவதும் ஆகிய அருவி, மாணிக்கமணிகளை மிகுதியாகத் தள்ளிக்கொண்டு பாயும் இமயமலையில், வட்டமான தழல்போன்ற சடைக்காட்டில் உள்ள குருக்கத்திமலர்களில், ஆறுகால்களுடைய வண்டுகள் மோதக் கட்டவிழ்ந்து

தேன்பாயும் சடைகாடுடையவர் உன்கணவர். அறநூல்கள் விதிக்கும் பொறுமை, ஒழுக்கத்தில் மாறுபடாமை, நுட்பமானதும் எல்லையற்றதும் ஆகியநோன்புடையவர்களின் ஞானநீர் நிறைந்தமனமாகிய குளம் பொலிவுபெற வேதநூல்கள், ஆகமங்கள் ஓதிச்சிவபிரானை அழைக்க, அதனால் மகிழ்கிறவளும், மைஎழுதியதும், கருமையானதும், கெண்டைமீன் போன்றகண்கள்உடையவளும் ஆகிய தலைவியாகிய அருள்தரு உலகம்மையே வருக! புகழ்ந்துவணங்கும் அகத்தியரால் போற்றப்பெறுகிறவள் ஆகியநீ, வெள்விடையில் வருக! கருணைவடிவான அருள்தரு உலகம்மையே! வருக!

**விளக்கம்** : சான்றோர், தன்கொண்கனை விரும்பி அழைப்பது கேட்ட அவன்மனைவி மகிழ்வது ஒத்தது இச்செய்தி

.

9. கோடி இரண்டும் ஒன்றொ(டு)
ஒன்றுகூடாது உடல நடுமுடங்கு
குழவித் தவள அம்கண்நிலா
கொழும்பொன் சடிலம் திசைஅளப்ப
பாடி இரண்டு மணிக்குழையும்
பாடல் சுருதி இசைதூங்கப்
பண்ணும் சுருதி வீணைஇசைப்
பாணர் இருவர் குடியிருப்ப
வாடி இரண்டு பதம்சிவந்த
மலரின் விமலப் பெருஞ்சோதி
ஆகம் குழையப் பொதிந்துகணை
அரவம் புகுந்த(து) எனச்சினவி
ஓடி இரண்டு குழைநுழையும்
உபய விழியாள் வருகவே
ஒன்றும் பலவும் ஆகிநிறை
உலகே வருக வருகவே.

**குறிப்புரை** : கோடிஇரண்டும்= இருநுனிகளும். உடைநடு= உடம்பின் நடுப்பகுதி. முடங்கு= வளைந்த். தவள= வெண்மையான. பொன்சடிலம்= பொன்போல் ஒளிரும்சடை. பாடி= பாசறை - தங்குமிடம். சுருதி+ இசை. தூங்க= தொங்க. இசைப்பாணர்= இசையுடன்பாடும் பாணர்கள். இரண்டு பதம் வாடி= இருதிருவடிகள் வருந்தி. விமல= மலமில்லாத. குழையப் பொதிந்து= வருந்த மூடி. கணை= ஒலிக்கும் - சீறும். புகுந்தது= புகுந்துவிட்டது. சினைவி= சினந்து.

**பொழிப்புரை** : ஒன்றுடன்ஒன்று கூடாதநுனிகளுடன் ஒளிபொருநதியதும், உடலின் நடுப்பகுதி வளைந்ததுமாகிய இளம்பிறை சூடியவரின் மாற்றுக்குறையாத பொன்போலும் சடை திசைஎங்கும் விரிந்துசெல்ல, அணிந்த அழகிய இருகுண்டலங்களும் ( இசைப்பாணரின் பாடலிசைக்கு ஏற்ப) ஆடித்தொங்க, வீணைஇசைத்துப்பாடும் பாணர்இருவர் காதுகளில் குடியிருக்க, திருக்கூத்தாடுவதால் மலரொத்த இருதிருவடிகளும் வாடிச்சிவக்க, மலமில்லாத ஒளிவடிவானசிவபிரானின் உடல்முழுவதையும் மூடிச்சீறும்நாகம் வந்துவிட்டது என்று கருதி, இருகுண்டலங்களில் ஒளிந்துகொள்ளும் இருவிழிகள் உடையவளே! வருக! ஒப்பற்ற ஒருபொருளாகவும் பலபொருள்களாகவும் உலகில் நிறைந்து விளங்கும் அருள்தரு உலகம்மையே வருக!

**விளக்கம்** : சிவபிரானின் இருகாதுகளிலும் பாணர் இருவர் நிலையாக இருந்துகொண்டு இசைப்பதாகக் கூறும் வழக்கினைப் புராணங்களில் காணலாம். அதனை இங்குக்குறிப்பிட்டார்.

**இலக்கணக்குறிப்பு** : “ கணை அரவம்......... உபய விழியாள் - தற்குறிப்பேற்றவணி.

10. செரியும் சுளைமுள் கனிதகர்ந்து
சுரிகூன் உடம்பின் இடக்கயங்கி
துணைமா கடுவன் அலர்ப்பிணவு
துனிஉற்(று) அகன்(று)ஓர் புடைஒதுங்க
விரியும் குவட்டுத் தலைதூங்கும்
வெண்பால் அருவிக் குறும்திவலை

வீசும் கூதிர்க்(கு) உள்நடுங்கி
மெல்லென் குழவி கைநெகிழப்
பிரியும் கடுவன் புகுந்(து)அணைத்துப்
பெரும்கொம் பரில்பாய் தலும்தொடர்ந்(து)அப்
பிணவும் குதிப்பப் பணிந்(து)எழுந்து
பிறங்கும் கனகப் பழஞ்சுவர்தேய்த்த(து)
உரியும் பொதும்பர் தடம்பொருநை
ஒலிநீர்த் துறையாள் வருகவே
ஒன்றும் பலவும் ஆகிநின்ற
உலகே வருக வருகவே.

**குறிப்புரை** : செரியும்= மிகுந்த. சுளைமுள்கனி= சுளைகளையும்முட்களையும் உடைய பலாக்கனி. தகர்ந்து= பிளந்து. மாகடுவன் துணை அலர்பிணவு= பெரியஆண்மந்தியின் துணையாகிய பெண்குரங்கு ஈன்ற குட்டி. சுரி கூன் உடம்பின் இட= வளைந்து கூனிய உடம்பில் விழ. கயங்கி= விலகி. ஒருபுடை ஒதுங்க= ஒருபக்கம் ஒதுங்கிக்கொள்ள.. விரியும் குவட்டுத்தலை தூங்கும்= அகன்றமலை உச்சியிலிருந்து இறங்கும். வெண்பால் அருவி= வெண்மையானபால்போன்ற அருவி. குறும்திவலை வீசும் கூதிர்= சிறிய நீர்த்திவலைகளால் ஏற்பட்ட குளிர். கைநெகிழ= பிடியைவிட. கடுவன்= ஆண்குரங்கு. புகுந்து= ஓடிவந்து. பெரும்கொம்பரில் பாய்தலும்= பருத்த கிளையில் பாய. பிணவு= குட்டி. பணிந்துஎழுந்து= வளைந்து தாவி. கனகப்பழஞ்சுவர்= பொன்போன்ற சுளைகளுடைய பலாப்பழத்தின்தோல். அது உரியும்= அதனை உரிக்கும். பொதும்பர்= சோலை. தடம்பொருநை= பெருமைபொருந்திய பொருநையாறு.

**பொழிப்புரை** : மிகுந்த முட்களையும் சுளைகளையும் உடைய பலாக்கனி பிளந்து, பெரியமந்தியின் துணையான பெண்குரங்கு ஈன்ற குட்டியின் வளைந்து கூனியஉடம்பில் விழ, அது அஞ்சி விலகிஒருபக்கம் ஒதுங்க, அகலமான உச்சியையுடைய மலையிலிருந்து இறங்கும் பால்போல்வெண்மையான அருவிநீரின் சிறியதிவலைகளால் ஏற்பட்ட குளிர்காரணமாகக் குட்டியின் கைப்பிடிவிட, பிரிந்துஇருந்த ஆண்குரங்கு ஓடிவந்து அணைத்துக்கொண்டு பெரியகிளைக்குத்தாவ, அதைத்தொடர்ந்து குட்டி ஆண்குரங்கின் பிடியிலிருந்து தாவிப் பொன்போல் பொலியும் பலாச்சுளைத்தின்ன உரித்து எடுக்கும் சோலையுடன் பெருமைபொருந்தியதும் ஒலிப்பதும் ஆகிய பொருநையாற்றுத்துறையுடையவளே! வருக ஒப்பற்றவளாகவும் பலபொருள்களுடன் கலந்தும் உள்ள அருள்தரு உலகம்மையே வருக வருக.

**இலக்கணக்குறிப்பு** : வெண்பால் அருவி, கனகப்பழம் - உவமைத்தொகைகள்.

11. பொன்னில் பொலிந்த மேனைவலம்
புரிதேக் கியபால் புகட்டிமணிப்
பொலந்தொட் டிலின்மேல் கிடந்(து)இரு
புடைநின்(று) ஆட்டும் சேடியர்கள்
கன்னிப் பிடியோ ஒருபிடிக்கும்
காணா மருங்குல் கருங்குயிலோ
காணும் பொருளோ காண்பவர்தம்
கண்ணோ எங்கள் கண்மணியோ
தன்னில் புவனம் ஈன்றெடுத்த
தாயோ இமபூ தரத்(து)இறைவன்
தலைமா மகளோ வான்வாய்க்கை
தழையும் திருவோ என்(று)உன்னை
உன்னிப் புகழ்ந்து தாலாட்ட
உழைக்கண் வளர்வாய் வருகவே
ஒன்றும் பலவும் ஆகிநின்ற
உலகே வருக வருகவே.

**குறிப்புரை** : பொன்னில்= பொன்போல். மணிப்பொலம்= அழகிய பொன்னாலான. இருபுடை= இருபக்கமும். கன்னிப்பிடி= இளம்பெண்யானை. பிடி= கைப்பிடி. தன்னில்= தன்னொப்பற்ற. இமபூதரம்=

இமயமலை. இறைவன்= அரசன் - இமவான். தலை= மிகச்சிறந்த. கை தழையும்= ஆற்றல் தழைக்கின்ற. உன்னி= நினைத்து. உழைக்கண்வளர்வாய்= இருகண்களையும் மூடிஉறங்குகிறவளே.

**பொழிப்புரை :** தாயாகிய மேனை பொன்போல்சிறந்த வலம்புரிச்சங்கில் பால்நிறைத்துப் புகட்டி, அழகிய பொன்னாலான தொட்டிலில் கிடத்தக் கிடந்து, இருபக்கமும் நின்று தாலாட்டும் சேடியர்கள், இளம்பெண்யானையோ, கைப்பிடியில் அடங்காஇடுப்புடைய கருமையான குயிலோ, தேடும்உயர் பொருளோ, காண்கின்றவர் கண்ணோ, எங்கள் கண்பாவையோ, தன்னொப்பில்லா உலகை ஈன்ற தாயோ, இமயமலை அரசனாகிய இமவானின் மிகச்சிறந்த மகளோ, வானத்து ஆற்றல்தழைகின்ற தெய்வமோ, என்றுபாடி உன்னைத் தாலாட்ட, இருகண்மூடி உறங்குபவளே வருக! ஒப்பற்றவ்ளாகவும்,, எல்லாப்பொருள்களிலும் கலந்து விளங்குகிறவளாகவும் உள்ள அருள்தரு உலகம்மையே வருக! வருக!

## 7. அம்புலிப்பருவம்

1. தளிசிந்து வெண்திரைக் குரைகடல் பட்(டு)அவ
தரித்துவரு ஞான்று பொய்கைத்
தடத்(து)அழு மறைக்குழவி கைம்மலரின் அம்மைதரு
தமனியம்இ ழைத்த வள்ளத்
துளிசிந்து தெள்ளமுது வெள்ளம்என வெள்ளொளி
துளும்பினை கிடத்த லானும்
சுற்றும்தி கம்பரர் தரிப்பநீ புனையும்
சுடர்க்கலை கொடுத்த லானும்
களிசிந்தி இர(வு)அலர் முகம்மலர வீசும்
கலாநிதிஅ(து) என்னும் ஒருதான்
கற்பித்த பேருலகம் அடையஇருள் அடையாது
கான்(று)ஒளி விரித்த லானும்
அளிசிந்து கண்கடை செலுத்தினாள் அஃஅறிந்(து)
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை :** தளி= நீர்த்துளி. குரைகடல் பட்டு= முழங்கும்கடலில் தோன்றி. தடத்துஅழு= குளத்தின் கரையில் அழுத. மறைக்குழவி= திருஞானசம்பந்தர். கைம்மலரின்= கைகளாகிய மலர்களில். அம்மை= அருள்தரு திருநிலைநாயகி. தமனியம்= பொன். வள்ளம்= கிண்ணம். தெள்ளமுது வெள்ளம்= தெளிந்த ஞானப்பால் அமுது. வெள்ளம் என= பெருக்குப்போல். துளும்பி= ஒளிர்ந்து திகம்பரர்= திசையையே ஆடையாக உடுத்த சிவபிரான். சுற்றும்= உடுத்தும். புனையும் சுடர்க்கலை= அணியும் ஒளியாகிய ஆடை. இரவு அலர்= இரவில் மலரும் மலர்கள். முகம் மலர= நுனி மலருமாறு. வீசும் கலாநிதி= ஒளியாகியசெல்வம்= மிக்கஒளி. ஒருதான்= ஒப்பற்ற நீ. பேருலகம் அடையக்கற்பித்த= பெரிய உலகமுழுவதும் உண்டான. ஒளிகான்று விரித்தல்= ஒளியை உமிழ்ந்துபரப்புதல் அளிசிந்து கடைக்கண்= கருணை பெருகும் கடைக்கண். மழு= மழுவாயுதம்.

**பொழிப்புரை :** நீர்த்துளிகளைச்சிந்தும் வெண்மையான அலைகள்ஒலிக்கும் பாற்கடலில் நீதோன்றி வாழும்நாளில், சீர்காழிக்குளக்கரையில் அழுத திருஞானசம்பந்தராகியகுழந்தைக்கு அவரது கைகளாகிய மலரில், அருள்தரு திருநிலைநாயகியம்மைதந்த பொற்கிண்ணணத்தில் ஞானப்பாலாகிய அமுதம் துளும்பியதுபோல் வெண்மையான ஒளியைச்சிந்திப் பரப்பவும்: திகம்பரராகிய சிவபிரான் உடுத்துவதற்கு நீ உன்னைச்சூழ உடுத்தும் ஒளியாகியஆடையை வழங்கவும்; களிப்புச்சிந்த இரவில் மலரும்மலர்களின் நுனி - முகம்மலருமாறு ஒளிச்செல்வமுடைய நீ, பேருலகம் முழுவதும் இருளடையாது ஒளியை உமிழ்ந்து பரப்பவும், உன்மேல் தனது கருணைசிந்தும் கடைக்கண் அருளினாள். இதனை அறிந்து அம்புலியே நீ இவளுடன் விளையாடவா, தன்அழகியகையில் மழுப்படைஏந்திய சிவபிரானுடனாய விக்கமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தருஉலகம்மையுடன் அம்புலியே விளையாட வா.

2. உள்ளிவெளி யில்கிடந்த ஆசைஇருள் வேரறுத்(த)
ஒழு(கு)ஒளிநி லாப ரப்பி
உயர்வுபட முயல்படும் கலைபலவி ரித்துநீர்
உடையகுவ லயம்ம லர்த்தி
எள்ளரிய மேல்நெறி பயின்றுதண் அளிசுரந்து
இன்பம்ப யந்து தெளிவாய்
இம்மதிய மெய்த்தொண்டர் தம்மதியம் ஒத்(து)இவண்
இருந்த(து)என்(று) உனைவி ழைந்தாள்
மள்ளர்உழு கொழுநுதி படும்தோறும் உள்ளுறைய
வனசம்கி ழிந்து சாய்க்கும்
மகரந்த சீகரம்வ ரம்(பு)இடறி வருசோனை
மாநதியை மான வழியும்
அள்ளல்நீர் வயல்வேலி முள்ளிநாடு உடையவளோ(டு)
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை** : உள்ளி= ஆராய்ந்து. வெளி= வானம். ஆசை இருள்= மயக்கம்தரும் இருள். ஒழுகு= இடைவிடாது. நிலாஒளிபரப்பி. உயர்வுபட= சிறப்பாக. முயல்படும்= களங்கமுடைய. கலைபல விரித்து= பலகலைகளின் ஒளியைப்பரப்பி. நீர்= கடல். எள்ளரிய= இகழ்தல் இல்லாத. மேல்நெறிபயின்று= வானத்தில் உலவி. தண்ணளி= கருணை. தெளிவாய் இன்பம் பயந்து= தெளிந்த இன்பம் தந்து. இம்மதியம்= இந்த நிலா. மெய்த்தொண்டர்தம் மதியம்= ஞானமுறு தொண்டகளின்அறிவை - ஞானத்தை. விழைந்தாள்=விரும்பினாள். மள்ளர்= உழவர். நுதி= நுனி வனசம் கிழிந்து= தாமரைமலர் கட்டவிழ்ந்து. உள்ளுறைய= உள்ளிருக்கும். மகரந்த சீகரம்= மகரந்தத்துடன் கூடிய தேன். சாய்க்கும்= ஊற்றும். வரம்புஇடறி= வரப்பினை உடைத்து. சோனைமாநதி= இடைவிடாது நீர் ஓடும்பேறாறு. மான= போல. அள்ளல்நீர்= சேற்றுடன்கூடியநீர். வேலி= சூழ்ந்த.

**பொழிப்புரை** : வானவெளியில் கிடந்த மயக்கம்தரும் இருளை ஆராய்ந்து, அதனை வேரோடறுத்து, இடைவிடாது ஒளிபரப்பி, முயற்கறையுடன் கூடிய கலை - ஒளிபரப்பி, கடல்சூழ்ந்த உலகு ஒளியால் உயர்வுபெறுமாறு இகழ்தல் இல்லாத வானில் உலவி, கருணைசுரந்தும் இன்பம்தந்தும் தெளிவுடைய இந்நிலவு, ஞானமுற்ற அடியவரின் ஞானத்தை ஒத்து இங்குள்ளது என்று எண்ணி இவள் உன்னை விரும்பினாள். உழவர்கள் உழுகின்ற கொழுவின் நுனிபட்டுக்கிழிந்த தாமரையின் உள்ளிருக்கும்மகரந்தமும் தேனும் ஊற்றி வயல்வரப்பினை உடைத்துக்கொண்டு வெளிப்பட்டு, இடைவிடாது நீர்ஓடும் பேராறு போல் தேனும் மகரந்தமும் ஓடி வழிகின்ற சேற்றுடன்கூடிய நீருடைய வயல் சூழ்ந்த முள்ளிநாட்டுக்கு உரியவளுடன் அம்புலியே! விளையாடவா! கையில் மழுப்படைஏந்திய தலைமைசான்றசிவபிரானுடன் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

**இலக்கணக்குறிப்பு** : இம்மதியம் ....... ஒத்து இவண் இருந்தது; சோனைமா நதியை மான வழியும் - உவமையணிகள்.

3. மீனவெறி வெள்ளத் தரங்கப் பெருங்கொள்ளை
வெள்ளத்த டம்பள் ளவாய்
விரிநெடும் கடல்அகடு கிழியப்பி ளந்(து)ஒளி
விளங்கும்இள ஞாயி(று) என்(று)ஊழ்
வான்அமர வெண்திரைக் குண்டுநீர் உவளகம்
மலர்த்திடு நறும்பொ குட்டு
வட்டவாய் அம்புயம்இன் அமுதப்ப சுங்கதிரின்
மருமடல்ஒ டுக்கு நின்று
பால்நவில்நி லாக்கற்றை முற்றும்இ ருள்நுங்கிப்
பரந்(து)இரு விசும்பு பொதிய
பாசடைம லர்க்குமுதம் முகம்மலர நீவருதல்

பார்த்(து)இனி(து))என் அம்மை வாள்கண்
ணால்நன்ம லர்க்கா(சு)அ அலர்த்தஅதி சயம்நோக்கி
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை** : மீனவெறி= மீன்நாற்றம். வெள்ளத் தரங்கம்= நீரலை. பெருங்கொள்ளை வெள்ளம்= அளவற்ற நீர்மிக்க கடல். பள்ளவாய்= ஆழத்தில். அகடு= வயிறு.

**கூட்டுமுறை** : " ஒளிவிளங்கும் இளஞாயிற ஊழ்மலர்த்திடு வட்டவாய் நறும்பொகுட்டு அம்புய மருமடல், உவளகம் இன் பால்நவில் நிலாக்கற்றை அமுதப்பசுங்கதிரின் பொதிய ஒடுக்கும். நின்று முற்றும் இருள்நுங்கி. இருவிசும்பு பரந்து, பாசடை மடல்குமுதம் முகம்மலர நீவருதல் வாள்கண்ணால் நன்மலர்க்காசு அலர்த்த அதிசயம் நோக்கி அம்புலீ ஆடவாவே என்க.

**குறிப்புரை** : இளஞாயிறு= ஒளிரும்காலை ஞாயிறு. மலர்த்திடு= மலரச்செய்யும். வட்டவாய் நறும்பொகுட்டு=வட்டமான விளிம்புடன் மணக்கும் தாமரைக்கொட்டை. அம்புய மருமடல்= தாமரையின் மணக்கும் இதழ். உவளகம்= எதிர்ப்புறம் - கிழக்கு. இன்பால் நவில் நிலாக்கற்றை=இனியபால்போன்ற நிலாவின். பசுங்கதிரின் =வளமான ஒளிக்கதிரால். பொதிய ஒடுக்கும்= மூடுமாறு குவிக்கும். நின்று= மேலும். முற்றும் இருள் நுங்கி= முற்றிவரும் இருளைத் தளர்த்தி. இருவிசும்பு பரந்து= அகலமான வானில் பரவி. பாசடை மடல் குமுதம்= பசிய இலையுடன்கூடிய குமுதமலர்.. முகம் மலர= வாய்மலர. நீவருதல் நிலவாகிய நீ வருவதை. வாள்கண்= ஒளிபொருந்திய கண். காசு அலர்த்த= குவிந்திருந்த குற்றம் நீக்கிய - மலரச்செய்த. நோக்கி= நினைத்து.

**பொழிப்புரை** : மீன்நாற்றமெடுக்கும் நீரலையுடனானஅளவற்றநீருடைய ஆழமானகடலின் நடுவிடம் - வயிறுகிழிபடப் பிளந்து ஒளிரும் காலைஞாயிறு, வட்டமானவிளிம்புடன் கமழும் தாமரைக் கொட்டையுடன் கூடிய தாமரையின் இதழ்களை மலர்த்தும். எதிர்ப்புறம் இனியபால்போன்ற நிலா தனது அமுதமாக விளங்கும் ஒளிக்கதிரால் அத்தாமரையை அதன்இதழ்களால் மூடுமாறுசெய்யும். மேலும்,அது முற்றிவரும் இருளைத் தளர்த்தி - குறையச்செய்து, அகலமான வானில்பரவி, பசியஇலையுடன் கூடிய குமுதமலர்களின் இதழாகியமுகம் மலர வருவதை என் அம்மை தன்ஒளிபொருந்திய கண்களால் நோக்கி, குமுதமலர்களின் குவிந்திருந்த குற்றத்தைநீக்க உனக்கு உதவிய அவளது அற்புதமான செயலை எண்ணி அம்புலியே இவளுடன் விளையாடவா! கையில் மழுப்படை ஏந்திய தலைமைசான்ற சிவபிரானுடன் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

4. விரிபொறி நெடும்பணக் கயி(று)இறுக்கும்இள
வெயில்விட்(டு) எரித்த சடில
விமலனுக்(கு) இருவிழிஎ னும்தகையும் இரணிய
விலங்கல்வட மேரு வலனாத்
திரிதொழிலும் அம்பரப் பெருவெளி அடைக்கும்முது
செறிஇருட் படலை வெட்டித்
திறக்கும்தி றத்(து)இரு நிறத்தசுடர் என்னவும்
சிறந்தஇரத பானு டன்நீ
உரியசெயல் ஒருவனென்(று) உறையும்இப் பெருமிதம்
ஒழித்திஅவன் உதய கதிர்பட்(டு)
ஒளிஇழந் தும்புகல் புகுந்துபடு புன்மையும்
உணர்ந்(து)அவண் இருப்ப(து) ஒருவி
அரிவைஎம் பெருமாட்டி சரண்அடைந்(து) அதுகளைந்து
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை** : விரிபொறி= அகலமானதும் புள்ளிகளுடையதும். நெடும்பணக்கயிறு=நீளமான பாம்பாகிய கயிறு. இறுக்கும்= கட்டிய. இளவெயில் விட்டு= இளவெயிலின் ஒளிவீசி. எரித்த= ஒளிர்கின்ற. சடிலம்= சடை. இருவிழி= இரண்டு கண்கள். தகை= தகுதி. இரணிய விலங்கல் வடமேரு= வடக்கில் உள்ள.

பொன்மலையாகிய மேருமலை. வலனாத் திரிதொழில்= வலமாகச் சுற்றிவரும் செயல். அம்பரப்பெருவெளி அடைக்கும்= வானமாகிய பெரியவெளியை மறைக்கும். முது செறி இருட் படல்= மிகச்செறிந்தஇருள்ஆகிய மூடி. திறத்து= தன்மையில். இருநிறத்த சுடர்= இருவேறு நிறங்களுடைய சுடர்கள். இரதபானு= தேருடைய சூரியன். உரியசெயல்= இருள்நீக்கும் செயல். பெருமிதம்= தருக்கு - செருக்கு. அவன்= சூரியன். புகல்புகுந்துபடு புன்மை= அடைக்கலமாகப்புகும் கீழ்மை. அவண் இருப்பது ஒருவி= அங்கிருப்பதை விட்டு நீங்கி. சரண்= திருவடி, அது= அந்தப்புன்மையை விட்டுவிட்டு.

**பொழிப்புரை :** விரிந்துஅகலமானதும் புள்ளிகளுடையதும் ஆகிய படமுடைய நீண்ட நாகமாகிய கயிற்றால் இறுகக்கட்டப்பெற்ற ஒளிரும்சடையுடைய சிவபிரானின் வலது இடதுகண்கள் என்றதகுதியும், வடக்கில் உள்ள பொன்மலையாகிய மேருமலையை வலமாகச்சுற்றிவரும் தொழிலும், வானப்பெரு வெளியை மறைக்கும் முதிர்ந்த செறிந்த இருளாகியமூடியை வெட்டித்திறந்து வானத்தைக்காட்டும் தன்மையில் இருவேறு நிறங்களுடைய சுடர்கள் என்றும்புகழும் உடைய நீ, உனக்குரிய இருள்போக்கும் செயலுடையவன் என்ற செருக்கினை ஒழிப்பாயாக. சூரியனின் காலைஒளிபட்டதும் நீ உன் ஒளிஇழந்து அவனிடம் அடைக்கலமாகும் கீழ்மையை உணர்ந்து அங்கு அவனோடு இருப்பதிலிருந்து நீங்கி, எமது பெருந்தலைவியாகிய இவளோடு விளையாடவா! கையில்மழுப்படைஏந்திய தலைமைசான்றசிவபிரானுடன் விக்ரமசிங்கபுத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாட வா!.

5. சுழிபட்ட வெண்திரைச் சலராசி மூழ்கித்
துயில்சுவை மறந்து வயிறு
சூல்கொண்டு தெள்ளமு(து) அளித்துவட மேருவில்
சுரரைவலம் வந்து நுதல்வாய்க்
கிழிபட்ட ஒற்றைத்த ழல்பார்வை எம்பிரான்
கிளர்சடைப் பழுவ அமிர்த
கீழ்ஆலம் ஏற்றுதனி இருந்தனை உனக்(கு)என்
கிடைத்த(து)அவண் இகழின் ஒழியாப்
பழிப்பட்ட வினையும்து டைத்(து)எம்ம னோர்பெரும்
பாவம்தொ லைக்கும் ஆதி
பாவநா சத்திருத் தலமகிமை இன்னம்
பகுத்தறிந்த(து) இல்லை போலும்
அழிபட்ட நின்குறைஒ ழித்தருளும் இங்(கு)இவளோ(டு)
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை :** சுழிப்பட்ட= வளைந்து விழும். சலராசி= கடல். மூழ்கி= மறைந்து. துயில் சுவை= உறக்கம் உணவு. வயிறு சூல்கொண்டு= வயிறு - நடுவிடம் பருத்து. தெள்ளமுது அளித்து= தெளிந்த அமுதகிரணம் வழங்கி. சுரர்= தேவர். நுதல்வாய்க் கிழிபட்ட= நெற்றியில் பிளவுபட்ட. தழல்ஒற்றைப் பார்வை= நெருப்புவடிவான ஒற்றைக்கண். சடைப்பழுவம்= சடைக்காடு. அமிர்த கீழ் ஆலம் ஏற்று= அமிர்தம் கீழான நஞ்சு ஆகியவற்றை உண்டு. தனி இருந்தனை= ஆதரவுஇல்லாமல் இருந்தாய்.அவண்என்கிடைத்தது = அங்கு என்னநன்மையடைந்தாய். இகழின் ஒழியாப் பழிப்பட்ட வினையும் துடைத்து= தீராத பழிப்பட்ட பாவம்போக்கி. ஆதி= முழுமுதல்வன். அழிபட்ட= முதிர்ந்த. இங்கு இவளோடு= இங்குள்ள இவ்வம்மையுடன்.

**பொழிப்புரை :** வளைந்துவிழும் வெண்மையான அலைகளுடைய கடலில் மூழ்கி, அதனால் உறக்கமும் உணவும் மறந்து, வயிறாகிய நடுவிடம் கருக்கொண்டு - முழுநிலாவாகி - தெளிந்த அமுதை அனைவர்க்கும் வழங்கியும், தேவர்களின் வடமேருமலையை வலம்வந்தும், பிளந்தநெற்றியில் நெருப்பாக விளங்கும் ஒற்றைக்கண்ணுடைய எம்தலைவனாகிய சிவபிரானின்சடையாகியகாட்டில் இருந்துகொண்டு அமுதமும் நஞ்சும் உணவாக உண்டும், ஆதரவின்றி இருந்தாய். அதனால் உனக்கு அங்குஎன்னநன்மை கிடைத்தது? குருவின்மனைவியைப் புணர்ந்ததால் வந்ததீராப் பழிப்பட்ட பாவத்தால்வந்த கலைதேய்வைப் போக்கியதுடன், எம்போன்றோர் பாவத்தையும் போக்கும்பாவநாசம் என்ற இத்திருத்தலப்பெருமையை

இன்னும்நீ ஆராய்ந்து அறியவில்லைபோலும். முதிர்ந்த உனதுகுறையை ஒழித்துஅருளிய இவ்விடத்து அம்மையுடன் அம்புலியே! விளையாடவா ! கையில்மழுப்படைஏந்திய தலைமைசான்ற சிவபிரானுடன் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

**விளக்கம்** : தன்குருவின் மனைவியைப் புணர்ந்த பாவத்தால் ஏற்பட்ட சாபத்தால், தன்கலைகள் தேயப்பெற்ற சந்திரன், இறுதியில் சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்து, நாடோறும் ஒவ்வொரு கலை வளரவும் தேயவும்பெற்றான் என்பது புராணவழக்கு. ஒருவரின் குறைதீர்த்து அருளுகிறவள் அம்மையே ஆதலின் " பழிப்பட்ட வினையும் துடைத்து " என்று துடைத்தவள் அம்மை என்றார்.

6. மருளூறு சிந்தைக்க ளங்கம்து ளங்குநிலை
மம்மர்படு விரகம் ஒருவா
மற்றைஒரு செயல்அற்ற சஞ்சலமொ டும்தன்னை
வந்தித்(து)இ ருக்கும் அமைதித்
தெருளூறும் அன்பர்தம் கண்புலத்(து) அன்றிமுது
தெய்வப்ப ழஞ்சு ருதியும்
தெரிதரவெ ளிப்படா ஒருதனி முதல்பரம்
சித்பரைஎன் அம்மை இவள்காண்
இருளூறும் உள்ளக்க ளங்கமும் பிறநிலையும்
இருபதிற்(று) எழுதா ரத்தின்
இறைவனெனும் ஆசையும் சஞ்சலமும் உடையநிற்கு
எளிதின்வெளி வந்து வாள்கண்
அருளூற வம்என்(று)அ ழைத்தனள்கி டைப்பதன்(று)
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை** : மருள் ஊறு= திரிபுணர்ச்சி மிகும். சிந்தைக்களங்கம்= மனக்குற்றம். துளங்குநிலை= உண்டாகும் நிலையில். மம்மர்படு விரகம் ஒருவா= அறியாமையால் வரும்காமநோய் நீங்காது. சஞ்சலமொடு= மனக்கலக்கமுடன். தன்னை= அம்மையாகிய தன்னை. வந்தித்து= வாழ்த்தி. அமைதித்தெருள்= மனஅமைதியால் வந்த தெளிவு. கண்புலம்= பார்வை. சுருதி= வேதம். ஒருதனிமுதல்= ஒப்பற்ற முதன்மையான. சித்பரை= ஞானவடிவான மேலானவள். இருள்= அறியாமை. பிறநிலை= பிறவான துன்பங்களும். இருபதிற்றுஎழு தாரத்தின் இறைவன்= இருபத்தேழு மனைவியராகிய விண்மீன்களின் கணவன். சஞ்சலமும்= மனக்கலக்கமும். நிற்கு= உனக்கு. அருள் ஊற= அருள்சுரக்க. வம்= இங்குவா.

**பொழிப்புரை** : திரிபுஉணர்ச்சியால் உண்டாகும் மனக்குற்றம் உண்டாகும் நிலையில், அறியாமயால் விளையும் காமநோய்நீங்காது, எச்செயலும் செய்யாது மனக்கலக்கமுடன் இருக்கும்போது; அம்மையாகிய உன்னை வாழ்த்திய மனஅமைதியால் வந்ததெளிவுசுரக்கும் அடியவரது கண்களுக்கன்றி;, கருத்து முதிர்ந்த பழைமையான வேதத்தினாலும் காணவியலாதவளும், ஒப்பற்ற, முதன்மையான, மேலான ஞானமேதன் வடிவானவளும் ஆகிய இவ்வம்மை; உனது அறியாமை சுரக்கும் மனக்கலக்கம், பிறதுன்பங்கள், மற்றும் இருபத்தேழுமனைவியராகிய விண்மீன்களுக்குக் கணவன் என்றஆசையுடன் கவலையும் உடைய உனக்காக; எளிதின் வந்து தனது அருள்சுரக்கும் கண்களால் பார்த்து, இங்குவாஎன்று உன்னை அழைக்கிறாள். இவ்வாய்ப்பு எளிதில் கிடைக்காதது. எனவே அம்புலியே இவளுடன் விளையாடவா! கையில் மழுப்படைஏந்திய, தலைமைசான்ற சிவபிரானுடனானவளாய், விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

**விளக்கம்** : இறைவன் அல்லது இறைவி, பதிஞானத்துக்கன்றி பசு ஞானத்திற்குத் தோன்றார். வேதம் பசுஞானமேயன்றிப் பதிஞாமன்று. ஆதலின் மறைகட்கு எட்டார் என்றார்

7. தளவைப்ப தித்தசெங் குமுதஇதழ் அமு(து)ஊற
தடமுலைக் குவடு படரா
தண்பொலன் மருமத்தி ரைந்(து)ஒழுக மெல்லென்று
தனிக்குதலை வீசும் இன்ப

இளமைத்தி ருப்பருவ உருவுகண்(டு)அறிவதற்(கு)
எளி(து)இதுவெ ளிற்று மதிநீ
என்பதால் அறியகிற்(று) இலைபோலும் அம்மையிவள்
இடபிங் கலைக்கு மேலாய்க்
குளவைப்பி னைக்கடந்(து) அப்புறத்(து) ஆயிரம்
குருதியம் தோட்டு மோட்டுக்
குலமுளரி மேல்பரம் பொருளொடும் கூடும்
கோமளா னந்த ரூபம்
அளவைக்(கு) அகப்படா(து) எங்ஙனம்தெ ளிவ(து)இனி
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை :** தளவு= முல்லை அரும்பு ( பல் ) செங்குமுத இதழ்= செங்குமுதமலரிதழொத்த உதடு. அமுதம்= எச்சில். குவடு= உச்சி. படரா= பரவ. தண்= உட்குழிவான. பொலன் மருமத்திடை= அழகிய இடுப்பில். தனிக்குதலை= ஒப்பற்ற குதலைமொழி. வீசும்= விரைந்துபேசும். வெளிற்றுமதி= அறிவில்லாத.. அறியகிற்று இலை= அறியவியலாது. இடகலை பிங்கலைக்கு மேலாம்= மூச்சுஓடும் நாசியின் இடதுபக்கம் வலதுபக்கத்துக்கு மேலே. குள வைப்பினை= நெற்றி இடத்தை. கடந்துஅப்புறம்= தாண்டி அதற்குமேலே. மோட்டு அம்குருதி ஆயிரம் தோட்டு= உயரத்தில்அழகிய சிவந்த ஆயிரம் இதழ்களுடைய. குலமுளரி மேல்= சிறந்த தாமரையில் - சகஸ்ராரத்தில். கோமளானந்த ரூபம்= அனைவர்க்கும் பேரின்பநிலை - வீடுபேறு - அருளும் வடிவம். தெளிவது= அறிவது

**பொழிப்புரை :** முல்லை அரும்புகளைப்பதித்ததுபோன்ற பற்களுடன்கூடிய செங்குமுதமலர்களாகிய இதழ்களில் - உதடுகளில் - இருந்து எச்சிலாகிய அமுது சுரக்க, அதுபெருமைபொருந்திய முலைஉச்சியில் படர்ந்து, உட்குழிவான - மெல்லிய அழகிய இடுப்பில் ஒழுக. மென்மையாக இன்பம்தரும் ஒப்பற்ற குதலைமொழியை விரைந்து பேசும்இவளை, உன்அறிவின்மையால் அறியவில்லைபோலும். இவ்வம்மை, இடகலை பிங்கலை இரண்டிற்கும் மேலே, நெற்றியிடத்தைக்கடந்து அதற்குமேல்உயரத்தில் உள்ள அழகிய சிவந்தஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரையின்மேல் - சகஸ்ராரத்தில் - சிவபரம்பொருளுடன் இருந்து, அனைவர்க்கும் வீடுபேறு அருளும் இவள்வடிவம் அளவிடற்கரியதாகும். அதனை நீ எப்படித்தெளிவாய்?. உன்னால் இயலாது. ஆயினும்அம்புலியே இவளுடன் விளையாட வா! கையில்மழுபடை ஏந்திய தலைமைசான்ற சிவபிரானுடனானவளும், விக்ரமசிங்கபுரத்தினளும் ஆகிய அருள்தரு உலகம்மையடன் அம்புலியே! விளையாடவா!

**விளக்கம்** அம்மையாகிய குழந்தை; தன்எச்சில், உதடு, மார்பு, உட்குழிந்த இடுப்பு ஆகியவற்றைக் கடந்துவழிய இன்பம்தரும் குதலை பேசுவதுகுறித்தார்.

நம்சுவாசம் மூக்கின் இடது துளைவழி ஓடுவது இடகலை - சந்திரகலை; வலது துளைவழி ஓடுவது பிங்கலை - சூரியகலை என்பர். நெற்றியைக்கடந்து உச்சந்தலைக்குமேல் பன்னிரண்டங்குல உயரத்தைச் சகஸ்ராரம் என்பர்; அது ஆயிரம் இதழ்களுடைய தாமரைவடிவினது; அதில் அப்பனோடு அம்மையும் வீற்றிருக்கிறாள் என்பது யோகியர் அனுபவம் என்பர். இங்கிருக்கும் இவளே நம்மை வீடுபேற்றுக்கு வழிசெய்பவள், இவளை முதிர்ந்த ஞானியரே உணரவியலும், அறிவில்லாத சந்திரனாகிய உன்னால் இவளது மீஉயர்நிலையை உணரஇயலாது. ஆயினும் உன்னை இவள்விளையாட அழைக்கிறாள், வா என்று அழைக்கிறார்,

அம்மை, பேராற்றலின் வடிவம். எனவே சத்தி எனப்பெறுகிறாள். இவள் ஆற்றல்வடிவில் இவ்வுலகில் மட்டும் அன்றி பேரண்டமெங்கும் நிறைந்தவள். பேராற்றல் வடிவான இவள் ஆற்றல்வடிவுடன் எங்கும் நிறைந்துள்ளாள் என்ற ஆன்மிகமுடிவு, அறிவியல் நோக்குடைய முடிவாகும்.

“ எங்கெங்கும் நோக்கினும் சத்தியடா
ஏழுகடல் அவள் வண்ணமடா”

என்பார் பாரதியார். தாயுமான அடிகள்;

“ அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததுஎது தன்அருள் வெளிக்குளே

அகிலாண்ட கோடிஎல்லாம்
தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த்
தழைத்ததுஎது "

என்றுவிரித்துரைப்பார்.

8. ஊழிக்க டும்கனல் எடுத்துக் கவிழ்க்கும்விழி
உழுவைஅம் போத்தின் உரிவை
உடைதிரு மருங்(கு)அசைத்(து) இர(வு)ஆடும் நாடகத்(து)
ஒருதலைவன் நட்ட கேண்மை
வாழிப்பெ ருந்தகைச் செல்வக்கு பேரன்எழில்
மாற்றியதை முன்னி அன்னோன்
வன்பெயர்ச் சார்பினால் முனியும்என வருவதற்(கு)
அஞ்சல்அஞ் சல்அஞ் சல்என
வீழிக்க னிப்பவள வாய்திறந்(து) அண்ணல்அருள்
மெய்ப்படிவம் என்ன விழியும்
மேன்மையும் அளித்தனள் உனக்குமுன் குறைநீக்கி
மேற்பதம் வழங்கி அருள்வாள்
ஆழிப்ப ழம்புவனம் அடையப்ப டைத்தவளொ(டு)
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை** : கவிழ்க்கும்= வெல்லும். விழி= நுதற்கண். உழுவை அம்போத்து= இளைய ஆண்புலியின். உரிவை= தோல். திருமருங்கு அசைத்து= அழகிய இடுப்பில் கட்டி. இரவு ஆடும் நாடகம்= ஊழிஇறுதியில் ஆடும் திருக்கூத்து. நட்டகேண்மை வாழி= நட்புக்கொண்ட நட்பு வாழ்க. குபேரன்= சந்திரன். வன்பெயர்ச்சார்பினால் எழில்மாற்றியதை முன்னி= புகழ்வாய்ந்த சிவபிரானை அடைந்து அழகனாக மாற்றிக்கொண்டதை நினைத்து. முனியும்= தக்கன்சினந்து சாபமிடுவான். அஞ்சல்= அஞ்சாதே. வீழிக்கனி= கொவ்வைக்கனி மெய்ப்படிவம் என= உண்மை வடிவம் என்று. முன்குறை = கலை - ஒளி குறைந்துவந்த முன்னைக்குறை. விழியும் மேன்மையும்= கலையும் - ஒளியும் தன்தலையில் சூட்டிக்கொண்ட உயர்வும். மேற்பதம்= மேலான நிலை. பழம் ஆழிப்புவனம் அடைய= பழைமையான கடல்சூழ்ந்த உலகம் முழுவதையும். படைத்தவள் = உண்டாக்கிய இவ்வன்னை.

**பொழிப்புரை** : ஊழிக்காலத்து நெருப்பையும் எடுத்து வெல்லும் நுதற்கண்ணுடன், ஆண்புலியின் அழகியதோலை இடுப்பில்உடுத்து ஊழியில் கூத்தாடும் ஒப்பற்றவனான சிவபிரான் நட்பு உனக்கு வாழ்க. ஒளிச்செல்வமுடைய சந்திரனாகிய உனது, ஒளியழகு குன்றிவந்தநிலையை, வலிமையும் புகழும்வாய்ந்த பெருந்தகையாகிய சிவபிரானால் மாற்றிக்கொண்டதை நினைத்துச் சினங்கொண்டு தக்கன் முனிவன் - உன்னை மீண்டும் சபிக்கவருவான் என்று அஞ்சாதே! அஞ்சாதே! அஞ்சாதே! கொவ்வைக்கனி ஒத்த உதடுகள் திறந்து, சிவபிரான் அருளால் உனக்கு உண்மை வடிவம் என்னுமாறு அறிவும், தன்சடையில் சூட்டிக்கொண்டதால் பெற்ற உயர்வும் அளித்தவள் இவள். உனது முன்னைக்குறைகளை நீக்கி மேல்நிலை அருள்வாள். எனவே கடல் சூழ்ந்த பெரியஉலகம் முழுவதையும் உண்டாக்கிய இவ்வன்னையுடன் விளையாடவா! கையில் மழுபடைஏந்திய தலைமைசான்ற சிவபிரானுடனாய விக்ரமசிங்கபுரத்து அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

**விளக்கம்** : தன்மனைவியர் இருபத்தெழுவரில் உரோகிணி மீதுபேரன்பு காட்டியதால் தக்கனால் ஒளி - கலை குன்றுமாறு சாபமிடப்பெற்ற சந்திரன், சாபநீக்கம்பெறத் தேவர்கள் பலரையும் சரணடைந்தும் பலனில்லையாதலால் இறுதியில் சிவபிரானைச் சரணடைந்தான். பெருமான் கலைவளரவும் தேயவுமாகச் சாபவிடுதலை அருளிச் சடையில் சூடினான் என்பது புராணச்செய்தி.

**இலக்கணக்குறிப்பு** : அஞ்சல் அஞ்சல் அஞ்சல் - அடுக்குத்தொடர். ( அடுக்கு நான்குமுறை வரலாம். நன் சூ. 395 )

9. உலைக்கும் படிற்று மயலுற்றுத் தகாதன

உஞற்றும்ஒரு வணிகன் இடர்கள்
ஒழித்(து)அவன் அசைத்தகலை மலினம்து டைத்தஇவள்
ஒருதிருச் சந்நி தியில்நீர்
நிலைக்கும் பெரும்திமிர சலதிவான் படவிடு
நெடுஞ்சுடர் அலங்கல் அமிர்த
நின்கலையின் இவன்வரின் கழுவுவ(து) என்கின்ற
நிலைமைஅஃ(து) அரிய தன்றே
மலைக்கும்சி லைக்கொலை எமதுவன சரர்விடும்
வடிகணைஉ டைக்க முதுவேய்
வைத்திடும்இ றால்உடல்உ டைத்துக்கு தித்(து)ஒழுகு
வண்திரைநி றைந்த பொருநை
அலைக்கும்த டங்குடுமி மலையாச லத்தியுடன்
அம்புலீ ஆட வாவே
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை** : உலைக்கும்= வருத்தும். படிற்றுமயலுற்று= வஞ்சனைகளில் ஆசைப்பட்டு. தகாதன உஞற்றும்= செய்யகூடாத செயல்கள் செய்யும். கலை அசைத்த= உடம்பில் தங்கிய. மலினம் துடைத்த= குறைகளைப் போக்கிய. பெரும்திமிர சலதிவான்பட விடு= இருட்கடலை வானில்துரத்தும். நெடுஞ்சுடர் அலங்கல்= ஞாயிற்றொளி. அமிர்த நின்கலையின் இவள்வரின்= அமிர்தமயமான உனது ஒளிக்கண் இவ்வம்மை வந்தால். கழுவுது= கறைபோக்குவது. அரியதன்று= எளியதாகும். சிலை மலைக்கும் கொலை= வில்லால் போரிட்டுக்கொல்லும். வனசரர்= வேடர். வடிகணை= கூர்மையான அம்பு. வேய் வைத்திடும் முதுஇறால்= மூங்கிலில் கட்டிய பெரியதேனடை. வண்திரை= பெரியஅலை. அலைக்கும்= கலக்கும்.

**பொழிப்புரை** : வருத்துகிற வஞ்சனைச்செயல்களில் ஆசைப்பட்டுச் செய்யத்தகாதன செய்த ஒருவணிகனின் துன்பங்களை ஒழித்து, அவனது உடம்பில் தங்கிய குறைகளையும் போக்கிய இவ்வம்மையின் திருமுன் நீவந்தால், தண்ணீர் நிலைத்த கடல்சூழ்ந்த உலகத்து இருட்கடலினை வானில்துரத்தும்ஞாயிற்று ஒளியால் நீபெறும் அமுதமயமான உனதுஒளிக்குள் இவ்வம்மைவரின் - இவ்வம்மை எதிரே நீ வந்தால் - உன் கறைபோக்குவது எளிது. எனவே, அம்புலியே! வில்லால் போரிடும் வேடர் எய்யும் கூர்மையான அம்பு, மூங்கிலில் கட்டிய பெரிய தேனடையை உடைக்க, அதிலிருந்து பொங்கி ஒழுகும் தேன், பெரியஅலைகளுடைய பொருநையில் கலக்கும் பொதிகைமலைக்குரிய இவ்வம்மையுடன் அம்புலியே! விளையாடவா! கையில் மழுப்படை ஏந்திய தலைமைசான்ற சிவபெருமான் உடனாய விக்ரமசிங்கபுரத்து அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : செய்யத்தகாத வஞ்சனைகள் செய்ததால் துன்பங்களும் , பலவகை நோய்களும் கொண்ட வணிகனுக்கு, முழுநலம் செய்த பாவநாசப் பெருமாட்டின் அருளினை அவ்வூர் வரலாற்றில் காணலாம்.

10. புள்ளிச்சி றைப்பாடல் மகரந்த வண்டுபடு
பொன்இதழ்க் கொன்றை பூத்த
புரிசடை வைத்தனன் இறைவன் என்றுநீ
பேசா(து) இருக்கின் மிகைகாண்
வெள்ளிப்ப ருப்பதத்து விழைவோ(டு) ஒருஞான்று
மேவா இருந்த தன்னை
விட்டுவலம் வந்தகண நாதனை முனிந்(து)அயில்
விழிக்கடை சிவந்து காட்டி
எள்ளிக்க தறக்குருதி ஊனும்ப றித்தஅந்த
எம்பிரான்ப சும்பொன் மேனி
இடமும்ப றித்தனள்முன் அப்படிஒர் கோபம்வரின்
எப்படிப்பி ழைப்ப(து) அளிதேன்
அள்ளிக்கொ ளும்குழவி வம்என்(று) அழைத்தவுடன்
அம்புலீ ஆட வாவே

அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை :** புள்ளிச்சிறைவண்டு பாடல்= புள்ளிகளுடைய சிறகுபெற்ற வண்டுகளின் பாடல். மகரந்தம் படு= மகரந்தமுடைய. பூத்த= பொலிவுடன் விளங்கும். போதாது= இங்கு வராது. மிகை= குற்றம். வெள்ளிப் பருப்பதம்= கயிலைமலை. மேவா= பொருந்தி. விட்டு வலம்வந்த= இவ்வன்னையையொதுக்கிவிட்டுப் பெருமானைமட்டும் வலம்வந்து வணங்கிய. முனிந்து= சினந்து. அயில்= வேல். குருதி ஊன்= இரத்தமும் சதையும். இடம்= இடப்பகுதி. அளி= வண்டு. குழவி= குழந்தையாகிய அம்மை. வம்= வா.

**பொழிப்புரை :** புள்ளிகளுடைய சிறகுபெற்ற வண்டுகள், பாடலுடன் படிந்த மகரந்தமுடைய பொன்போலும் மலர்ந்த இதழுடைய கொன்றைமலரை, சிவபிரான் தன்சடையில் சூடினான் என்று பிணங்கி, நீ விளையாடவராது இருப்பது பெருங்குற்றமாகும். ஏனெனில் முன்பு, கயிலைமலையில் பெருமானுடன் இவள் வீற்றிருந்தபோது, அதுகண்ட கணநாதன் ஒருவன் பெருமானுக்கும் இவளுக்கும் இடையில்புகுந்து பெருமானைமட்டும் வலம்வந்து வணங்கிய அவனைச்சினந்து, தன்வேல்போன்ற விழிகளின்கடை சிவக்கப் பார்த்து, அவனை இகழ்ந்து அவன் கதறுமாறு அவனது குருதியையும் சதையையும் பறித்ததுடன் எம்பிரானின் மாற்றுயர்ந்தபொன்போலும் திருமேனியின் இடப்பாகத்தையம் தனக்கென்று பறித்துக் கொண்டாள். இவள் அப்படிப்பட்ட சினம்கொள்ளின் நீ பிழைப்பது இயலாது. எனவே, வண்டுகள் தேனைமிகுதியாகப் பருகும் மலர்கள்சூடிய இவ்வன்னை அழைத்தவுடன் அம்புலியே இவளுடன் விளையாடவா! கையில் மழுப்படை ஏந்திய தலைமைசான்ற சிவபிரானுடன் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

**விளக்கம் :** அம்மை சிவபிரானுடன் கயிலையில் வீற்றிருந்தபோது வணங்கவந்த கணநாதன் ஒருவன் சிவபிரானுக்கும் அம்மைக்கும் இடையேபுகுந்து சிவபிரானை மட்டும் வலம்வந்து வணங்கியதால் சினந்த அம்மை அவனைச்சினந்து தண்டித்ததுடன், அப்பனோடுஒன்றி அம்மையப்பன் - அர்த்தநாரியானாள் என்றபுராணச் செய்திகூறினார்.

11. துடைத்(து)இருள் விழுங்கும்முழு நிலவாய் விசும்(பு)உறில்
சுடர்மணி இமைக்கும் நெற்றிச்
சூட்(டு)அரா மோட்டுடன்றி மிர்த்துப்பி டிக்கும்ஒரு
துண்டப்பி றைப்பிள் ளையாய்
விடைத்துவசன் வார்சடைக் காட்டிடைஒ ளிக்கில்இவன்
மென்சரணம் அறியும் உருவம்
வேறுபட்(டு) இரவில்வர இரவினால் அவ்இரவி
வெண்நகை கழன்று வீழ
உடைத்(து)உனையும் மாய்வுற மிதித்துத்து வைத்தஇவள்
ஒருவிசைய மைந்தன் இருதாள்
உண்டுநீ எப்படிசும் மாஎவ்இ டத்(து)உறைதி
ஓ(டு)அரிக் கண்கள் அருள்விட்(டு)
அடைத்தஉமைக் கடைமடை திறந்(து)ஒழுகும் அம்பிகையோ(டு)
அம்புலீ ஆடவாவே.
அங்கைமழு அண்ணல்புணர் சிங்கைஉல கன்னையுடன்
அம்புலீ ஆட வாவே.

**குறிப்புரை :** இருள்துடைத்து விழுங்கும். என்க. விசும்பு உறில்= வானில் வந்தால். சுடர்மணி இமைக்கும்= நெருப்புக்கண் ஒளிரும். நெற்றிச்சூட்டு= நெற்றியில் தரித்த. மோட்டுடன்= பெருமையுடன். ஒருதுண்டப் பிறைப்பிள்ளையாய்= மூன்றாம்பிறைக் குழந்தையாக. விடைத்துவசன்= விடைக்கொடிஉடைய சிவபிரான். வார்= நீண்ட. மென்சரணம்= மென்மையான திருவடி. இரவி= சூரியன். வெண்நகை கழன்றுவீழ = வெண்பற்கள் உடைந்து விழ. மாய்வுற= சாவுஅடைய. இவள் ஒருவிசைய மைந்தன்= இவ்வன்னையின் வெற்றிபொருந்திய மகனாகிய வீரபத்திரன். சும்மா= நலமாக. அரிஓடு கண்கள்= செவ்வரி படர்ந்தகண்கள். அருள்விட்டு அடைத்த உமை= அருளைக் கைவிட்டு மறைத்த உன்னை. கடைமடை திறந்து ஒழுகும்= கடைக்கண் அருளிவாழும்.

**பொழிப்புரை :** நிலவே! நீ இருளைப்போக்கும் முழுநிலவாக வானில் தோன்றினால், சிவபிரானின் நெருப்புக்கண் ஒளிரும் நெற்றியில்தரித்த பெருமைக்குரிய நாகம், தலைதூக்கி உன்னைப்பற்றிக்கொள்ளும்; மிகச்சிறு பிள்ளையாய் - மூன்றாம்பிறையாக நீ சிவபிரானின் சடைக்காட்டில் ஒளிந்துகொண்டால் அதை அவனது மென்மையான திருவடிஅறியும்; வேறு உருவம்கொண்டு இரவில் வந்தால், இரவுகாரணமாக , சூரியனின் வெண்பற்கள் கழன்றும் உடைந்தும் விழுமாறு உதைத்தவனாகிய இவ்வன்னையின் வெற்றி பொருந்தியமகன் வீரபத்திரனின் இருதிருவடிகள் உள. இந்நிலையில் நீ எப்படி எவ்விடத்தில்.சும்மா - ஒளிந்து இருப்பாய்! செவ்வரிபடர்ந்த கண்களால் அருள்காட்டாது மறைத்த உன்னை, கடைக்கண்காட்டி - அருள்காட்டி வாழும் அம்மைஅழைக்கிறாள். அம்புலியே! இவ்வம்மையுடன் விளையாடவா! கையில் மழுப்படை ஏந்திய தலைமைசான்ற சிவபிரானுடன் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையுடன் அம்புலியே! விளையாடவா!

**விளக்கம் :** சந்திரன் மூன்றாம்பிறை நிலையில் சிவபிரானின் திருவடியில் சரணடைந்தான். அப்போது கண்டுள்ளதால் பிறையாகச்சடைக்காட்டில் ஒளிந்தாலும் உன்னை அறிவான் என்றார்.

தக்கன்வேள்வியில் சூரியன் பற்கள் உடைபட்டதை;

" சூரிய னார்தொண்டை வாயினில் பற்களை
வாரிநெ ரித்தவாறு உந்தீபற
மயங்கிற்று வேள்வி என்று உந்தீபற " ( திருவாசகம்.. 308 )

தக்கன் வேள்வியில் கலந்துகொண்டோர் பட்டபாட்டினைஅப்பரடிகள்;

" எச்சன்நிணத் தலைகொண்டார் பகன்கண் கொண்டார்
**இரவிகளில் ஒருவன்பல் இறுத்துக் கொண்டார்**
மெச்சன்வியாத் திரன்தலையும் வேறாக் கொண்டார்
விறல்அங்கி கரம்கொண்டார் வேள்வி காத்து
உச்சநமன் தாளறுத்தார் சந்திரனை **உதைத்தார்**
உணர்விலாத் தக்கன்தன் வேள்வி எல்லாம்
அச்சமெழ அழித்துக்கொண்டு அருளும் செய்தார்
அடியேனை ஆட்கொண்ட அமலர் தாமே "( திருமு.6.தனித்திருத்தா..பொது. 9 )

( அறிவின் இருப்பிடம் தலை. அறிவு இல்லாத்தலையாதலின் நிணத்தலை என்றார் )

### 8. அம்மானைப் பருவம்

1. கள்ளூறு பனிமடல் செழுமுளரி மாளிகைக்
கன்னிகை விசைத்(து)எ றிந்த
கதிர்முத்(து)அம் மனைதி றம்பிமண் புகவிழக்
கண்டுநகை கொட்டி அண் டத்து
தெள்ளூ(று)இ ழுதில்கவர்ந்(து) உறையும் நீளறியும்
மின்னிஅம் மனையின் முத்தித்
திளைத்தஅம் மனைஉயர மாணிக்க அம்மனைநள்
எரிஒழுகி நின்று வெண்பல்
முள்ளூறு நச்(சு)அரவச் சயனனும் திசைமுகனும்
மோட்டுவெண் பன்றி எகின
மூது)உருஎ டுத்(து)அன்று துருவஒரு நின்மகிழ்நன்
மூட்(டு)அழல் நிற்றல் காட்ட
உள்ஊறும் அன்பினர்க்(கு) உள்ளூறும் இன்பமே
அம்மானை ஆடி யருளே
ஆரப்பொ ருப்பினுயர் சாரல்பு றத்துமயில்
அம்மானை ஆடி யருளே.

**குறிப்புரை :** கள்= தேன். பனிமடல்= குளிர்ந்த இதழ். முளரி= தாமரைமலர். கன்னி= திருமகள். கைவிசைத்து எறிந்த= கையால்வேகமாக மேல்நோக்கிஎறிந்த. கதிர்முத்து= ஒளிரும் முத்தாகிய அம்மனைக் காய். திறம்பி= தன்போக்கில் மாறுபட்டு. மண்புக= நிலத்தில் விழ. நகைகொட்டி= மிகச்சிரித்து. அண்டத்து= அண்டவெளிவரை. தெள்ளூறு இழுதில் கவர்ந்து= தெளிந்த நிணம்போன்ற அம்மானைக்காயினை எடுத்து.

மின்மினிய= மின்னல்போல் மின்னும். முத்தி= முத்தமிட்டு. திளைத்து= மகிழ்ந்து. அம்மனை உயர= அம்மனைக்காய் உயரத்தில் செல்ல. நள்ளரிஒழுகி= மிக்கஒளிவீசி. முள்ளூறு நச்சு அரவச்சயனன்= கூரிய பற்களுடைய ஆதிசேடனில் படுத்திருக்கும் திருமால். திசைமுகன்= பிரமன். மோட்டு= பெருமைபொருந்திய, வெண்பன்றி= அறிவில்லாப் பன்றி. எகினம்= அன்னப்பறவை. துருவ= தேட. நின்மகிழ்நன்= உன்கணவன் - சிவபிரான். மூட்டுஅழல் நிற்றல் காட்ட= முதிர்ந்த அழலாக புலப்பட.. வள் ஊறும் அன்பினர்= வளமாக அன்பு ஊறுவோர். உள்= மனத்தில். ஆரப் உயர்பொருப்பு= சந்தனமரங்களுடைய உயரமானபொதிகைமலை.

**பொழிப்புரை** : தேன்சுரப்பதும் குளிர்ந்த இதழ்களுடையதுமாகிய வளமான தாமரைமலராகிய மாளிகையில் வாழும் திருமகள், தன்கையால் விசையுடன்எறிந்த ஒளிரும்முத்தாகிய அம்மானைக்காய், மேலேறும் தன்போக்கில்மாறுபட்டு நிலத்தில்விழ, உடனுறையும்நீ அதுகண்டு மிகநகைத்து, குருதியுடன் தெளிந்த நிணம்போல் மின்னலாகஒளிரும் ஒருகாயினை எடுத்து முத்தமிட்டுமகிழ்ந்து எறிந்த அம்மனைக்காய், மாணிக்கக்காய்போல் ஒளிவீசி ஏற, வெண்மையான கூரிய பற்களுடய ஆதிசேடன்மேல் படுத்திருக்கும் திருமால், நான்முகன் ஆகியோர் முறையே அறிவற்ற பன்றி, அன்னப்பறவையாக முன்பு உருவெடுத்துத் தேட உன்கணவன் - சிவபிரான் உண்மைஉருக்காட்டாது மூட்டிய பெருநெருப்புவடிவில் நின்றது போல் காட்சிதர, வளமான அன்புஊறும் அடியவர் மனத்தில் சுரக்கும் இன்பவடிவினளே! அம்மானை ஆடியருள்க. உயரமான சந்தனமரங்களுடைய பொதிகைச்சாரல் மயிலே! அம்மானை ஆடியருள்க

**விளக்கம்** : யார்பெரியவர் என்றுகாட்டத் தன்னைத்தேடியவர்க்குத் தோன்றாதவன் உன்கணவன். அன்புடன் தேடுகிறவர்க்குக் காட்சிதருகிறவள் நீ என்றார். அம்மை எறிந்த அம்மனை , இருவருக்கும் காண்பரிய ஈசன்போல் மேலேறியது என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : மயில் - உருவகம். நச்சரவ சயனனும் திசைமுகனும் மோட்டு வெண்பன்றி எகின - நிரல் நிறையணி. மாணிக்க அம்மனை மூட்டு அழல்காட்ட - எடுத்துக்காட்டுவமையணி.

2. வண்(டு)இனிய ஏழிசைக் கல்விபயில் கள்ஒழுகும்
மரைமகளிர் இருவர் செங்கேழ்
மாணிக்க அம்மனையும் நீலஅம் மனைகளும்
வகுத்தாட நீஎ றிந்த
தண்தரள அம்மனைக ளில்சிலநின(து) இர(வு)ஒளி
தாவிச்சி வந்து வாள்கண்
தாரைஒளி வீசிக்க றுத்துவர அம்மகளிர்
தங்கள்அம் மனையும் ஏந்திக்
கொண்டனை எறிந்தனை எனத்தனிம ருண்டுகை
குலைந்துமனம் வெட்க அந்தக்
கோலஅம் மனையையும் திறம்பாது பற்றிமென்
குறுநகை முகிழ்த்து வீசி
அண்டமும் அகண்டமும் நிறைந்துவிளை யாடுவாய்
அம்மானை ஆடி யருளே
ஆரப்பொ ருப்பின்உயர் சாரல்பு றத்துமயில்
அம்மானை ஆடி யருளே.

**குறிப்புரை** : கள்= தேன். மரை மகளிர் இருவர்= செந்தாமரை வெண்டாமரைகளில் இருக்கும் திருமகள் கலைமகள் இருவரும். செங்கேழ்= சிவந்தஒளி. வகுத்தாட= பிரித்துக்கொண்டு ஆட. இரவுஒளி= கருமையன ஒளி. தாரைஒளி= திரண்ட ஒளி. கறுத்துவர= கருமை நிறத்துடன் கைக்குவர. ஏந்திக் கொண்டனை= ஏந்திக்கொண்டு. மருண்டு= மயங்கி. கைகுலைந்து நாண= .பிடிக்காது விட்டுவெட்கமுற. அந்தக் கோல அம்மனை= அந்த அழகிய அம்மனைக்காய்கள். திறம்பாது= நெகிழவிடாது குறுநகை முகிழ்த்து= புன்முறுவல் பூத்து.

**பொழிப்புரை** : வண்டுகள் ஏழிசைக்கல்விபெறப் பறந்துவந்து தேன்பருகும் செந்தாமரை வெண்டாமரை மலர்களில் இருக்கும் திருமகள் கலைமகள் ஆகிய இருவரும் முறையே செந்நிறம் ஒளிர்வதும், நீலநிறம் ஒளிர்வதும் ஆகிய அம்மனைக்காய்களை வானில் எறிந்து ஆட, அம்மையே! நீ வானில்எறிந்த வெண்மை நிறமுத்துஅம்மனைகள் சில, உனது திருமேனியின் ஒளியாகிய கருமையும்,

தாமரைக்கண்களின் ஒளியாகிய செம்மையும் பெற்றுவர, அதுகண்ட அம்மகளிர்இருவரும், தங்களது அம்மனைக்காய்களையும் நீ ஏந்திக்கொண்டு ஆடுகிறாய் என்று மருண்டு, தம் காய்களைப்பிடிக்காமல் விட்டு வெட்க, நீ அவர்களின் காய்களையும் புன்முறுவலுடன் பிடித்துக்கொண்டு, அண்டம் பேரண்டம் ஆகியவற்றில் வீசி விளையாடுகிறவளே! அம்மானை ஆடியருள்க. உயரமான சந்தனமரங்களுடைய பொதிகை மலைச்சாரலில் உள்ள மயிலே! அம்மானை ஆடியருள்க.

**விளக்கம்** : நலம்சால் உடம்பின் கண்கள் செந்தாமரை மலர்போல் சிவந்திருக்கும். கண்மருத்துவர்கள் நம்விழிஇதழைப்பிதுக்கி, செந்நிறம்கண்டு நலமறிவது வழக்கம்.

நீலன் மூலம் தன்வடநாட்டு வெற்றியைச் சேரன்செங்குட்டுவன்; சோழன், பாண்டியன் ஆகியோர்க்கு உணர்த்தியபோது அவர்கள் தன்வெற்றியை இகழ்ந்ததால் அவன் கொண்ட சினத்தை,

" தாமரைச் செங்கண் தழல்நிறம் கொள்ள "

என்பார் இளங்கோவடிகள். தாமரைசெங்கண்= அருள்கனிந்தகண். தழல் நிறம்= சினத்தின் குறியீடு.

**இலக்கணக்குறிப்பு** : " வண்டு இனிய ஏழிசைக்கல்விபயில் " - தற்குறிப்பேற்றவணி. மரை - முதற்குறை - செய்யுள் விகாரம். கொண்டனை - முற்றெச்சம்.

.3.
விம்மமா ணிக்கச்சி றுக்கும்இள முகைதெரிய
வெள்ளிடை மருங்குல் அசைய
வேர்வைக்கு றுந்துளிது ளிப்பவிழி புடைபெயர
வெள்வளைஉ டுத்த காந்தள்
கைம்மாம லர்த்தலையின் அம்மனைநின் எதிராடு
கன்னியரின் முன்னர் யாணர்க்
கதிர்மணிஇ மைக்கும்மென் புளினவெளி தோன்றநீர்
காலூன்றும் வல்லி துயலச்
செம்மான்ஒ ளித்தபல் ஆதவம் குளிரவிரி
சீகரக் கொள்ளை விள்ளச்
செங்கயல்கள் புரளப்பொ லிந்(து)எறிதி ரைக்கைஇற்(று)
எண்ணிலா முத்தம் வாரி
அம்மானை ஆடுதண் பொருநையம் துறைஇறைவி
அம்மானை ஆடி யருளே
ஆரப்பொ ருப்பின்உயர் சாரல்பு றத்துமயில்
அம்மானை ஆடி யருளே.

**குறிப்புரை** : மாணிக்கச் சிறுக்கும் இளமுகை விம்ம. சிறுக்கும்= சிறிய. முகை= மொட்டு.. விம்ம= மலர. வெள்ளிடை தெரிய மருங்குல்= வெற்றிடமாகத்தெரியும் இடுப்பு. துளிப்ப= அரும்ப. புடைபெயர= இருபக்கங்களிலும் செல்ல. உடுத்த= அணிந்த. தலையின் நின்று= தலைக்கண் அமைந்து. நின்எதிர் ஆடு= உனக்கு எதிராக அம்மனையாடும். யாணர்க்கதிர் மணி இமைக்கும்= புத்தொளி ஒளிரும். புளினவெளி= மணற்குன்றுகளுடன் - சினஞ்சிறுமுலைக்குன்றுகளுடன் - கூடிய மார்பு. நீர்கால் ஊன்றும் வல்லி துயல= நீரில் முளைத்த கொடியாக இடுப்பு ஒசிய. செம்மான் ஒளித்த ஆதவம் குளிர= செவ்விதழ்களில் மறைந்த பல்லாகிய வெயில் ஒளிர. சீகரக் கொள்ளை விள்ள= வியர்வையாகிய நீர்த்துளி வெளிப்பட. செங்கயல் புரள= அழகிய கெண்டைமீன்களாகிய கண்கள் இங்குமங்கும் புரள. எறிதிரை இற்று எண்ணிலா முத்தம் வாரி அம்மானை ஆடு= மிகப்பல முத்துகளை வாரிஎடுத்து அம்மானை ஆடும்

**பொழிப்புரை** : **மாணிக்கமணியாகச்சிறிய அளவிலுள்ள முலைகள் விம்ம, வெற்றிடமாகத் தெரியும் இடுப்பு அசைய, குறுந்துளியாக வியர்வை அரும்ப, விழியின் பார்வை இருபக்கங்களிலும்செல்ல, சங்கு வளையல் அணிந்த காந்தள் மலராகியகை, அழகிய மலர்சூடிய தலைக்குமேல் அம்மனைக்காய்களைப் பிடித்தாட , உனக்கு எதிராக அம்மனையாடும் கன்னியர் எதிரே மணிமாலை ஒளிரும் சின்னஞ்சிறு மணற்குன்றாக மார்பிடம் தோன்ற, நீரில் முளைத்து நிற்கும் கொடியாக இடுப்பு ஒசிய, சிவந்தஇதழ்களிடை மறைந்துள்ள வெயிலாகப் பல்ஒளி ஒளிர, வியர்வைத்துளிகள் வெளிப்பட, இருகெண்டமீன்களாகிய கண்கள் இங்குமங்கும் புரள, மிகப்பல முத்துகளை வாரி எடுத்துப் பொலிவுடன் அம்மானை ஆடும் தண்ணிய நீர்த்துறைகளுடைய பொருநைக்கு இறைவியே! அம்மானை ஆடியருள்க. உயரமான சந்தனமரங்களுடைய பொதிகைமலைச் சாரல்மயிலே! அம்மானை ஆடியருள்க.**

**விளக்கம்** : அம்மை அம்மனை ஆடும்நிலையை விரித்துரைத்தார்.

4. பாராய ணக்கடவுள் நான்மறை யின்உச்சிப்
பழம்பொருளின் அவுணன் முன்னாள்
பாழிஎண் திசைமுகம் இருண்டுவிடம் ஒருகைப்
படுத்த(து)என நின்கை நின்றும்
ஓராயி ரம்கோடி கருநீல அம்மனைகளும்
உம்பர்சென்(று) அளவி இம்பர்
உலகமும் திடர்ஆழி மால்வரைக்(கு) அப்புறமும்
ஊழிஇருள் விழுது விட்டுப்
பேராது குழுமிப்ப ரந்(து)ஒழுகி நிற்பஅப்
பிறழ்ஒளிஅம் மனைகள் யாவும்
பெய்வளை அடுக்கும்அக் கைமலர்அ மைந்துவெம்
பிறவித்து வக்கு நீக்கி
ஆராத னைப்பழந் தொண்டர்க்(கு) இரங்குவாய்
அம்மானை ஆடி யருளே
ஆரப்பொ ருப்பின்உயர் சாரல்பு றத்துமயில்
அம்மானை ஆடி யருளே.

**குறிப்புரை** : நான்மறையின் உச்சிப் பழம்பொருள் பாராயணக்கடவுள்= நான்மறைகளின் உச்சியாகிய பழைமையான உபநிடதத்தை ஓதும் நான்முகன். அவுணன்= அசுரன். முன்னாள்= முன்பு. பாழிஎண் திசைமுகம்= வலிமையான எட்டுத்திசைகளிலும். இருட்டு விடம்= இருளாகிய நஞ்சு. ஒருகைப்படுத்தது என= தன்கையில் பற்றிக்கொண்டதுஎன்று. நின்கை நின்றும்= உன்கையிலிருந்து. உம்பர்= மேலே - வான். அளவி= வானில் பொருந்தி. இம்பர் உலகமும்= இவ்வுலகமும். திட ஆழி மால்வரைக்கு அப்புறம்= வலிமையான சக்கரப்படைஏந்திய திருமால் உலகஎல்லையை - பரமபத எல்லையைக் கடந்து. ஊழிஇருள் விழுது விட்டு = ஊழிக்காலத்துத் துன்பத்தை.யும் அதன்தொடர்ச்சியையும் போக்கி. பேராது= நீங்காமல். பரந்து= பரவி. பிறழ் ஒளி= துன்பத்துக்கு மாறுபட ஒளி. வளைபெய் அடுக்கும்= வளையல்களை அடுக்கி அணியும். பிறவித்துவக்கு= பிறவிக்குரிய பாசக்கட்டு. ஆராதனை= வழிபாடு.

**பொழிப்புரை** : நான்குமறைகளின் உச்சியாகிய பழைமையானஉபநிடதத்தை ஓதும் நான்முகன் அருளால், முன்னாளில்அரக்கனொருவனால், வலிமையான எட்டுத்திசைகளும் நஞ்சாகிய இருளின் வசப்பட்டதால், உனது கையாகிய மலரிலிருந்து ஆயிரம்கோடிக் கருநீலஅம்மனைகள் எழுந்து இவ்வுலகம் கடந்துவானில் ஏறிப்பொருந்தியும், மேலேறி, வலிமையானசக்கரப்படை ஏந்திய திருமாலின் பரமபதஎல்லை கடந்து போய், ஊழிக்காலத்துன்பம் அதன்தொடர்ச்சி ஆகியவற்றைப் போக்கியதுடன், ஓராயிரம்கோடி அம்மனைகளும் கூடிப்பரவித் துன்பத்துக்கு மாறுபட்ட இன்பஒளியை வழங்க, உன்னை வழிபடும் பழமையான அடியவர்களின் பிறவிக்கட்டு நீங்குமாறும் அருள்புரிகிறவளே! அம்மானை ஆடியருள்க. உயரமான சந்தனமரங்களுடைய பொதிகைமலைச்சாரல் மயிலே! அம்மானை ஆடியருள்க

5. முகிழ்தனச் சிலதிய ரொடும்சென்று பால்நிலா
முற்றத்(து) இருந்து நின்று
முளரிக்க ரத்(து)ஒன்றில் அம்மனைகள் ஒருகோடி
முறைமுறை எறிந்தும் ஏற்றும்
தொகுவளை இணைக்கையினும் அத்தொழில் புரிந்தும்அத்
துணைவளைக் கைகள் மாறிச்
சூதமென் தளிர்மேனி முற்படஎ றிந்துபின்
சுற்றிப்பி டித்(து)உ கிர்வாள்
நகுமணிஇ னத்தலைபொ றுத்தும்அத் தொழிலின்வழி
நாட்டங்கள் ஆட்டி விட்டு
நளிஆன னத்(து)இளம் குறுவெயர் பொடிப்பவிரை

நறுமலர்க் கூந்தல் சரிய
அகிலமும் அனைத்(து)உயிரும் மெய்ப்பொருளும் ஆனபரை
அம்மானை ஆடி யருளே
ஆரப்பொ ருப்பின்உயர் சாரல்பு றத்துமயில்
அம்மானை ஆடி யருளே.

**குறிப்புரை** : முகிழ்= அரும்பு. சிலதியர்= தோழியர். முளரி= தாமரைமலர். முறைமுறை முறைப்படி.. எறிந்தும் ஏற்றும்= மேலே செலுத்தியும் கீழேவரும்போது.பிடித்தும். வளை தொகு இணைக்கை= தொகுதியாக வளையல்கள் அணிந்தஇரண்டுகை. அத்தொழில்= அம்மானையை மேலேற்றல். பிடித்தல். மாறி= இருகைகளாலும் மாற்றிமாற்றி. .மாசூதம்மென்தளிர்= மென்மையான மாந்தளிர். முற்பட= மேலே. வாள்உகிர் நகுமணித்தலை பொறுத்தும்= கூர்மையானதும் அழகுடையதும் ஆகிய நகமுடைய விரல் நுனியால் பிடித்தும். அத்தொழிலின்வழி= அச்செயல்வழியே. நாட்டங்கள் ஆட்டிவிட்டு= கண்களைச்செலுத்தி. நளி ஆனனத்து= பெருமைபொருந்திய முகத்தில். விரை= கலவைச்சாந்து.

**பொழிப்புரை** : முலைகள் அரும்புகிற தோழியருடன் சென்று, பால்நிலா ஒளியுடைய முற்றத்தில் நின்றுகொண்டு, தாமரை மலர்போன்ற கைகள் ஒன்றில் ஒருகோடி அம்மனைக்காய்களை எடுத்து, அவற்றை முறைப்படி முறைப்படி வானில் எறிந்தும்பற்றியும், வளையல் அணிந்த இருகைகளாலும் மாந்தளிர் போன்ற உடம்புக்கு மேலே முதலில் எறிந்து, பின்னர் கீழ்வரும் அவற்றைக் கூர்மையானதும் அழகானதுமாகிய நகமுடைய விரல் நுனியால்தாங்கிப்பிடித்தும், அச்செயல்களின் வழிதனது கண்களை ஓடவிட்டும், பெருமைபொருந்திய முகத்தில் மிகக்குறுவியர்வை தோன்ற, கலவைச்சாந்துபூசி மணக்கும் கூந்தல் கட்டவிழ, அண்டமும் அனைத்து உயிர்களும் ஞானவடிவானபொருளும் ஆகிய பராசத்தியே! அம்மானை ஆடியருளே! உயரமான சந்தன மரங்களுடைய பொதிகைச்சாரல் மயிலே! அம்மானை ஆடியருள்க.

**விளக்கம்** : **இதில்**இருகைகளாலும் அம்மானை ஆடிய திறம் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : முளரிக்கரம், சூதமென்தளிர்ப் மேனி - உவமைத்தொகைகள். முறைமுறை - அடுக்குத்தொடர். எறிந்தும் ஏற்றும், அகிலமும் உயிரும் மெய்ப்பொருளும் - எண்ணும்மைகள். இளம் குறுவெயர் - ஒருபொருள்பன்மொழி.

6. தருணநி லாமுழு நித்தில அம்மனை தழல்மணி அம்மனைகைத்
தாமரை நின்(று)எழுந் துவிசும் பில்தட விஇறங் குவகண்டு
இருள்நெடு ஞாலம்வி ழுங்கா(து) ஒளிசெயா இத்தகை மதிஎன்(று)ஊழ்
இல(கு)ஒளி அமையா(து) இவைபழை யனஎன்(று)இ ருந்தாய்மேல்
வருணம்வி ளங்கிஇ ருவிரிசுடர் அம்மை வகுத்தனள் விடவிண்போய்
வாளர(வு) அஞ்சிவ குத்(து)அப யம்புக வருவகொல் என்றுபுகன்(று)
அருநெறி வேதம் மம்மர்உ ழன்றிட அம்மனை ஆடுகவே
அழல்அயில் வெம்முனை விழிஉல(கு) அம்மனை ஆடுகவே

**குறிப்புரை** : தருணநிலா= புதியநிலா. தழல்மணி அம்மனை= நெருப்புப்போன்ற மாணிக்கமணி அம்மனை. விசும்பில் தடவி= வானத்தை வருடி. இறங்குவ கண்டு= கீழே.வருவதைப் பார்த்து. நெடு ஞாலம் இருள்விழுங்காது ஒளிசெயா= பெரிய இவ்வுலகை இருள்கவியாது ஒளிர. இத்தகை மதி என்று= இவை வெள்ளி என்று.. இருந்தாய்= இருந்த நீ. மேல்= வானில். வருணம் விரி இருசுடர்= ஒளி.விரியும் ஞாயிறு திங்கள். வகுத்துவிட= உண்டாக்கி மேலே எறிய. வகுத்த= புதிதாக உண்டாக்கியன. வாளரவு அஞ்சி= இராகு கேது ஆகியபாம்புகட்கு அஞ்சி. வருவகொல் என்று புகன்று= வானில்இராது இறங்கி வருகின்றன போலும் என்று சொல்லி. அருநெறி வேதம்= சிறந்த வழிகூறும்வேதம். மம்மர் உழன்றிட= அறியாமையால் மனம் குழம்ப. வெம்முனை அழல் அயில் விழி= விரும்பத்தக்க கூர்மையுடன் அழலும் வேல்போன்ற கண் .

**பொழிப்புரை** : கையாகிய தாமரைகளால் வானில் எறிந்தபுதியமுழுநிலவுபோன்ற முத்தாகிய அம்மனை, நெருப்புப்போன்ற மாணிக்கஅம்மனைஆகிய இரண்டும் வானத்தை வருடிவிட்டுக் கீழே இறங்குவதைப் பார்த்து, இத்தகைய வெள்ளி நிலவும் சூரியனும் பேருலகின் இருளை விழுங்கி ஒளிதரமாட்டா, காரணம் இவை பழையன என்று எண்ணியநீ, மிகஒளிர்ந்து எங்கும் ஒளிபரப்பும் வேறு நிலவு சூரியன் போன்ற இரண்டு அம்மனைகளை வானில் எறிய, மேல்சென்று கீழ் இறங்கும் அவை, கொடிய இராகு கேது ஆகிய பாம்புகட்கு அஞ்சி உன்னிடம் அடைக்கலம்புக வருகின்றன போலும்

என்றசொல்லி, சிறந்தவழிகாட்டும் வேதம் தனது அறியாமையால் மனம் குழம்ப அம்மானை ஆடுக. விரும்பத்தக்க கூர்மையுடன் அழலும் வேல்ஒத்த கண்களுடையவளே! அம்மானை ஆடியருள்க.

விளக்கம் : மேலெறித்தவை பூமியின் ஈர்ப்பால் கீழ் இறங்குவது இயற்கை..மேலெறிந்தஅம்மனைகள் கீழ் இறங்கக் கூறும் வேறு காரணத்தால் இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

7. ஓடுநெ டுஞ்சுடர் உலைமுக அனல்இட்(டு)
ஓடஉ ருக்கி யபொன்
ஒழுகுப சுங்கனி கொண்டுகு ழைத்(து)இழை
இடையின் அலுந்தியின் வாய்த்தது
தோடுநெ ளிந்(து)அலர் தாமரை தந்ததொ
கைப்படு பேரண்டம்
துகள்பட உயிர்கள் அலந்(து)அலை படஅடி
சுவல்உழை விடுபரிஏழ்
பாடுது லக்கிய தேர்அரி ஒளிபாழ் படவிட அரவரசின்
படமுடி பொறைகெட அடியொடு கீண்டெழு
பருவரை அம்மனை வைத்து
ஆடும லர்க்கையில் அம்மனை பன்மணி
அம்மனை ஆடு கவே
அழல்அயில் வெம்முனை விழிஉல(கு)
அம்மனை ஆடு கவே

**குறிப்புரை + பொழிப்புரை** : இடையிடை சீர்கள் குலைந்தும் தொடர்பின்றியும், திருத்திக்கொள்ள இயலாதவாறும் உள. ∴ புரிந்துகொள இயலவில்லை.

8. மும்மத வேழம் நடுங்கப் புடைபடு
முழையில் துயிலரிமா
முடைவெண்கோடு பிடுங்கிச் சிதறிய
முத்தநி லாமுன்றின்
மம்மர்செய் வாளிநெ டுங்கண் மணிக்குழை
மட்டுநெ ருங்கவிராய்
வரைஅர மகளிர் இருந்(து)எதிர் ஆசெ
மணிஅம் மனையாவும்
தம்மக வோ(டு)அணை பிணவுதி ரட்டிய
தழல்என்(று) இரியநறும்
தண்கனி என்றுமு சுக்கலை எற்றத்
தன்மய தன்மையின்நேர்
அம்மனை ஆடுத மிழ்ப்பொ தியத்தின்
அம்மனை ஆடுகவே
அழல்அயில் வெம்முனை விழிஉல(கு)
அம்மனை ஆடுகவே.

**குறிப்புரை** : மும்மத வேழம்= கன்னம், கபாதம், பீஜம் ஆகின வெளிப்படுத்தும் மதமுடைய ஆண்யானை. புடை படு முழை= அருகில் உள்ள குகை. அரிமா= ஆண்சிங்கம். முடை வெண்கோடு= புலாலைப்பற்றிக்கொண்டிருக்கும் தந்தம். விராய் சிதறிய முத்தநிலா முன்று= விரவிச்சிதறிக்கிடக்கும் முத்துகளுடைய நிலாமுற்றத்தில். மம்மர்செய் வாளி நெடுங்கண்= மயக்கும் ஒளிபொருந்திய் நீண்ட கண்கள். மட்டு= அளவில். வரை அரமகளிர்= மலைவாழ் தெய்வமகளிர். செ மணி= சிவந்த மணிகள். பிணவு= பெண்குரங்கு. தழல்= நெருப்பு. . இரிய= அஞ்சி ஓட. முசுக்கலை= குரங்குக்குட்டிகள். எற்ற= எறிந்து விளையாடும். தன்மய தன்மையின்நேர்= தன்மை ஒத்த. தமிழ்= இனிமை.

**பொழிப்புரை** : மும்மதமுடைய ஆண்யானைகள் நடுங்குமாறு, அருகிலுள்ள குகையில் உறங்கும் ஆண்சிங்கம் பிடுங்கி எறிந்த யானைத்தந்த முத்துகள் விரவிச்சிதறிக்கிடக்கும் நிலாமுற்றத்தில்;

பார்வையால் மயக்கம்தரும் ஒளிபொருந்திய கண்கள், மணிகள்பதித்த குழைகள் அணிந்த காதுகவரை நெருங்கும் மலைவாழ் தெய்வமகளிர் எதிரெதிரே இருந்து ஆடும் சிவந்தமாணிக்கமணி அம்மனைகளை எல்லாம், தம்குட்டிகளை மார்புடன் அணைத்து கொள்ளும் பெண்குரங்குகள், தமது குட்டிகள்கள் திரட்டியநெருப்பு என்று ஒதுங்கிச்செல்ல, குட்டிகள் தண்ணிய கனிகள் என்று எறிந்து விளையாடுவது அம்மனை ஆடுவதைஒத்து விளங்கும். இத்தகு இனிமை விளங்கும்பொதியமலைக்கண் அம்மனை ஆடுக. பகைவரைச் சுடும்தீபோன்றதும் கூர்மையானதும் விரும்பத்தக்கதுமான விழிகளுடைய உலகம்மையே! அம்மனை ஆடுக.

**இலக்கணக்குறிப்பு** : மாணிக்கமணிகளை நெருப்பு என்று குரங்குகள் ஒதுக்கியதாகக்கூறுவதால் இச்செய்யுள் மயக்கவணி,

9. அலையா(து) ஒருமித்(து) ஐம்புலனும்
அடக்கி அடங்கா மும்மலவேர்
அறுத்துக் கொழுந்துபடும் தழலும்
அடுக்கல் குடுமித் தலைகவிழு
நிலையா அருவித் திரைபுனலும்
நிலைபெற்(று) ஒருதாள் மடித்(து)ஒருதாள்
நிறுவிச் சுருங்க விழிபுதைத்து
நிறையும் பரம அணுத்துவத்து
தொலையா உலவை உந்திநின்றும்
தொடர்ந்தும் பிரம்ம ரந்திரம்வாய்
துடிக்க வெடிக்கும் கனல்சிகைபோய்த்
துறக்கம் புகத்தா பதர்தவம்செய்
மலையா சலத்துக்(கு) ஒருதலைவி
மணிஅம் மானை ஆடுகவே
வற்றாக் கருணை உலகுடையாள்
மணிஅம் மானை ஆடுகவே.

**குறிப்புரை** : ஐம்புலனும் அலையாது ஒருமித்து அடக்கி= ஐந்து அறிவுகளும் கண்டபடி அலையாமல் அனைத்தையும் ஒருசேரஅடக்கி. மும்மல வேர்= ஆணவம் கன்மம் மாயை என்ற மலவேர். கொழுந்து படுதழலும் அடக்கல் குடுமி= தீக்கொழுந்துபோன்ற முழுச்சடை. நிலையாத் தலைகவிழும் அருவித்திரை புனல்= நிலைத்துநிற்காது விழும் அருவியின் அலையுடைய நீர். நிலைபெற்று= (குளித்தும் துவட்டப் பெறாமல்) சடையிலேயே தங்கி இருக்க. ஒருகால் மடித்து ஒருதாள் நிறுவி= ஒருகாலை மடித்து ஒருகாலால் நின்று. விழிபுதைத்து விழிகளை மூடி. நிறையும்பரம அணுத்துவம் தொலையா= எங்கும் நிறைந்த மிக்க அணுத்தன்மை நீங்காத. உலவை= மூச்சுக்காற்று. உந்திநின்றும் தொடர்ந்தும்= கொப்பூழில் இருந்து மேலேறி. பிரம்மரந்திரம் வாய்= உச்சிக்குழி வழியே. துடிக்க வெடிக்கும்= துள்ளி வெளிப்படும். கனல்= தவத்தீ. சிகைபோய்= தலைக்குமேல் ஏறி. துறக்கம் புக= வான்உலகு அடையுமாறு. தாபதர்= முனிவர்கள்.

**பொழிப்புரை** : ஐவகை அறிவும் கண்டபடி அலையாமல் அவற்றை ஒருசேர அடக்கி, அடங்காத ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலத்தின் வேர்களையும் முற்றாக அறுத்து, தீக்கொழுந்து போன்ற சடைநனைய, மலையுச்சியிலிருந்து இறங்கும் அலையுடன் கூடியநீரில் நீராடி, தலைதுவட்டப்பெறாமல், ஒருகாலைமடித்து, ஒற்றைக்காலால் நின்று, கண்களைமூடி; எங்கும்நிறைந்ததும், மேலான அணுத்தன்மை யுடையதும், வற்றாததும்ஆகிய காற்று கொப்பூழினின்றும் புறப்பட்டுமேலேறி, தலைஉச்சிக்குழியின் வழியே துள்ளி வெடித்துவெளியேறும் தவத்தீயாய், வானுலகை அடையுமாறு தவம்செய்யும் முனிவர்கள் வாழும்பொதிகைமலைத்தலைவியே அழகிய அம்மானை ஆடுக. எப்போதும் நிறைந்தகருணை வடிவான உலகம்மையே அழகிய அம்மானை ஆடுக.

**விளக்கம்** : இங்குக்கூறப்பெறும் தாபதர் நிலைபற்றி, புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் ஐயனாரிதனார் கூறுவது :

" நீர்பலகால் மூழ்கி நிலத்துஅசைஇ தோலுடீச்
சோர்சடை தாழச் சுடரோம்பி - ஊரடையார்

கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத்து உய்க்கும் வழி. "
( சோர்சடை= நீர்வடியும் சடை )

10. வெள்ளைப் பிறைக்கோட்டு அசலஉரி
விழுப்புண் கவசம் எடுத்(து)அணிந்த
விமலன் உருவில் கழைகுழைக்கும்
வில்வேள் கணையாய் வரநதிநீர்
கொள்ளைப் பெருக்கு நனைப்பஇரு
கோட்டால் குழவித் திங்கள்உழும்
கொடிசெஞ் சடைக்காட்(டு) இதழியின்வீழ்
குறுங்கண் சுரும்பாய் மலர்க்கரமேல்
பிள்ளைப் பிணையாய் மிடற்றில்இருள்
பிழியும் கடுவாய் உளத்தடத்தில்
பெயராக் கயலாய் மயல் விளையப்
பிறழும் கருங்கண் இருமருங்கும்
வள்ளைக் குவவு தோட்டர்க்கு
மணிஅம் மானை ஆடுகவே
வற்றாக் கருணை உலகுடையாள்
மணிஅம் மானை ஆடுகவே.

**குறிப்புரை** : கோட்டு அசல உரி= கொம்புடைய மலையாகிய யானையின் தோல். புண்விழு கவசம்= புண்ணுடைய சிறந்த கவசம். உருவில்= திருமேனிமேல். கழை வில்குழைக்கும் வேள்= கரும்பு வில்லை வளைக்கும் மன்மதன். கணையாய்= அம்பாக. வரநதி= கங்கை. இருகோட்டால்= இரு நுனிகளாலும். கொடி செஞ்சடைக்காடு= நீண்டு சிவந்தசடையாகிய காடு. இதழியின் வீழ்=கொன்றைமலரில் மொய்க்கும் குறுங்கண் சுரும்பு= சிறுகண்களுடைய வண்டு. பிள்ளைப்பிணை= மான்கன்று. இருள்பிழியும்= இருளை வெளிபடுத்தும். கடு= நஞ்சு. உளத்தடத்தில் பெயராக் கயலாய்= மனமாகிய குளத்தில் பிறழும் கெண்டைமீனாக. மயல் விளைய= ஆசையுண்டாகுமாறு. வள்ளைக்குவவு= வள்ளைக்கொடிபோன்ற காதில் பொலியும். தோட்டர்= தோடணிந்த சிவபிரான் பொருட்டு.

**பொழிப்புரை** : வெண்மையான பிறைஒத்த கோடுகளுயை மலையாகிய யானையின் புண்பட்ட தோலை, சிறந்தகவசமாக அணிந்த மலமில்லாதசிவனது திருமேனியை, கரும்பை வில்லாக வளைத்த மன்மதனின மலரம்புகள்போல், கங்கையின் மிகப்பெருகிவரும் நீர்நனைப்ப, அவனது தலையிலுள்ள மூன்றாம்பிறை தன்இருநுனிகளால் உழுகிற நீண்ட சடையாகிய காட்டிலுள்ள கொன்றை மலரில் மொய்க்கும் சிறுகண்களுடைய வண்டுபோல், மலர்ஒத்த கையில் ஏந்திய மான்கன்றுபோல், கழுத்தில் இருள்ஒளிரும் நஞ்சுபோல், அடியவர் மனமாகிய குளத்தில்பிறழும் மீன்போல், தோடு அணிந்து வள்ளைக்கொடிபோல் விளங்கும் காதளாவும் கருமையான கண்களுடைய அம்மையே! சிவபிரானுக்கு ஆசையுண்டாகுமாறு மணியாகிய அம்மானை ஆடுக. எப்போதும் நிறைந்த கருணைவடிவான உலகம்மையே அம்மானை ஆடுக.

**விளக்கம்** : அம்மையின் கண்களுக்கு; சுரும்பு, பிணை, கடு, கயல் என்று பலஉவமைதந்தார்

**இலக்கணக்குறிப்பு** : விமலன் உருவில்............நனைப்ப - உவமையணி. கண்களுக்குச் சுரும்பு, பிணை, கடு, கயல் ஆகியவற்றை உவமையாகக் கூறிய பல்பொருளுவமையணி ஆகிய இரண்டும் இதில் உள.

11. துளங்கா மதுகை வயல்களமர்
துணைவாள் மருப்புக் கரும்பகடு
துரத்தி உழும்வாழ் கொழுமுனையில்
சுரிசங்(கு) இடறிக் கருஉயிர்ப்ப
விளங்கா நிற்கும் மணித்தரளம்
விரைமென் பொகுட்டுப் பன்முளரி
விசிக்கும் பொதிவாய் உடைந்(து)இழியும்

வெள்ளக் கலுழி நறாத்தெளியில்
குளம்கால் மதகு திறந்துவரு
கொள்ளைப் புனலில் பெருகஅதில்
குளிர்வான் செக்கர் உடுத்திரளால்
குலவும் துழனி நெடுங்கழனி
வளம்கூர் சிங்கை நகர்க்(கு)அரசி
மணிஅம் மானை ஆடுகவே
வற்றாக் கருணை உலகுடையாள்
மணிஅம் மானை ஆடுகவே.

**குறிப்புரை** : துளங்கா= கலங்காத. மதுகை= மனவலிமை. களமர்= உழவர். வாள் துணைமருப்பு=கூரிய இருகொம்புகள். கரும்பகடு= கருமையானஎருமை. துரத்தி= ஓட்டி. வாள் கொழுமுனை= கலப்பையின்கொழு நுனி. சுரி= வளைந்த. கரு உயிர்ப்ப= முத்தினை ஈன. மணிவிளங்காநிற்கும்= அழகுவிளங்கும். தரளம்= முத்து. விரை= மணம். பொகுட்டு= தாமரைக்கொட்டை. பன்முளரி= பல தாமரை. விசிக்கும்= இறுக்கட்டிய பொதிவாய் வாய் உடைந்து= மொட்டுகள் வாய்திறந்து - மலர்ந்து. இழியும்= இறங்கும். நறாவெள்ளம்= தேன்பெருக்கு. குளிர்வான் செக்கர் உடுத்திரள்= மாலைநேர வானத்துச் செக்கரும் விண்மீன் கூட்டமும் விளங்கும். கழனி= நன்செய்நிலம். வளம்கூர்= வளம்மிக்க.

**பொழிப்புரை** : வயல் வேலையில் கலங்காத மனவலிமையுடைய உழவர்கள் கூர்மையான இருகொம்புகளுடைய கரிய எருமைகளை ஓட்டி உழுகின்ற கலப்பையின் கொழுநுனிபட்டு, வளைந்த சங்குகள் முத்துகளை ஈன, ஒளிவிளங்கும் அழகிய முத்துகள்; மென்மையாக மணக்கும் கொட்டையுடைய தாமரைகள் பல, கட்டவிழ - மலர - பெருகும் தேன்வெள்ளத்துடன்கலந்து, குளத்து வாய்க்கால் மதகுதிறந்து வரும் நீரில் , அம்முத்துகள் மாலைச்செவ்வானில் தெரியும் விண்மீன்கள் மீன்கள்போல் தெரிய, அவற்றை மீன்களாகக்கருதி வந்த பறவைகளின் ஒலிமிக்க நன்செய் வளமுடைய விக்ரமசிங்கபுரத்து அரசியே! அழகிய அம்மானை ஆடுக. எப்போதும்நிறைந்த கருணை வடிவான உலகம்மையே! அம்மானை ஆடுக.

**விளக்கம்** : முத்துகளை மீன்களாகக் கருதிப்பறவைகள் வந்தன என்பதால் இது மயக்கவணி.

## 9. நீராடற் பருவம்

1. ஆதிபரை நீமுதல் பொருளின்உரு வில்கசிந்து
அருள்பெருகி ஒருவ டிவமா
அளவைக்(கு) அடங்காது பலபேத சத்தியா
அளவளா எங்கு மாக
மாதிரநெ டும்புவனம் முழுதும்அ ளித்(து)ஊழியினும்-
மன்னிப்பொ லிந்த(து) ஏய்ப்ப
மலையப்பெ ருங்கிரியில் ஊற்றிருந்(து) ஒழுகிஒரு
வழிப்படவி சேட நதியாய்
மோதிஎண் பகுதிபடு கால்களா எவ்வயினும்
முறைமுறை புகுந்துவிரவி
மூவுலகம் அடையவும் புரவுதந்(து) அலைகடல்
முகந்துபொழி கொண்டல் வறளும்
போதினும் வளம்கெழுது ளங்கிஇமிழ் தண்திரைப்
பொருநைநீர் ஆடி யருளே
பூவைவா சக்குழலி பாவநா சத்தலைவி
பொருநைநீர் ஆடி யருளே.

**குறிப்புரை** : ஆதிபரை= முதன்மையான பராசத்தி. முதல்பொருள்= சிவபிரான். கசிந்து= வெளிப்பட்டு. ஒரு= ஒப்பற்ற. பலபேதசத்தி= பலவகைப்பட்ட சத்திகளாக. அளவளா= கலந்து. மாதிரம்= வானம். அளித்து= காத்து. மன்னி= நிலைத்து. ஏய்ப்ப= ஒப்ப. ஊற்றிருந்து= தோன்றி.

வழிபட= வழியில். மோதி= பெருகி. எண்பகுதி= எட்டுத்திசை. கால்= வாய்க்கால். விரவி= பரவி. புரவு தந்து= காத்து. வறளும் போதினும்= வறண்டகாலத்திலும். கெழுவளம் துளங்கி= மிக்க வளத்துடன்ஓடி. இமிழ்தண்திரை= ஒலிக்கும் தண்ணிய அலை. பூவை வாசக்குழவி= குயிலாக வாழும் குழந்தையே.

**பொழிப்புரை :** முதன்மையானபராசத்தியாகிய நீ, முதற்பொருளாகிய பரசிவத்திலிருந்துவெளிப்பட்டு, அருள்பெருகி ஒப்பற்ற வடிவமாகவும், அளந்துகூறமுடியாதபடி பலவகைப்பட்ட சத்திபேதங்களாகவும் எங்கும்கலந்து, வானுலகம் பெரியஇவ்வுலகம் ஆகிய அனைத்தையும் காத்துக் கடையூழியிலும் அழியாது நிலைத்துவிளங்கியது போல், பொதிகைமலைக்கண் தோன்றிவெளிப்பட்டு ஒப்பற்றவழியில் சிறந்தநதியாகப் பெருகி, எட்டுத்திசைகளிலும் வாய்க்கால்களாக எல்லாவிடங்களிலும் முறைப்படி புகுந்துபரவி, மூன்று உலகங்களையும் காத்து, அலைகளையுடைய கடல்நீரை உட்கொண்டு மழையாகப்பொழியும் மேகம் வறளினும் மிக்க நீர்வளமுடன் ஓடி, ஒலிக்கும் தண்ணியஅலைகளுடைய பொருநைநீரில் நீராடியருள்க. குயிலாகவாழும் குழந்தையே! பாவநாசத்தலைவியே பொருநைநீரில் நீராடியருள்.

**விளக்கம் :** பாவநாசத் தலைவி என்பது, பாவநாசத்தலத்தில் வாழும் தலைவி என்று பொருள்தருவதுடன், உயிர்க்குலத்தின் பாவங்களை நாசம்செய்து காக்கும் தலைவி என்ற பொருளும் தருவது.

**இலக்கணக்குறிப்பு** : ஊழியினும் - உயர்வுசிறப்பும்மை, இச்செய்யுள் உவமையணி.

2. நெக்(கு)இள முகைக்கலவை எக்கர்இட அம்மநீ
நின்றுபுனல் ஆட வியவா
நில(வு)ஒளி புரண்டென முடங்கிப்பு ரண்டுவிழு
நிறைநுரை நெருங்க நோக்கிச்
செக்கர்முழு மாணிக்க முக்கண்பொ ருப்பின்வான்
திருவில் குழைத்த மழவுத்
திங்கள்தவழ் சென்னியில் இருந்தும்மா கங்கைஒரு
சிறிதும்பெ றாத பேறு
மிக்(கு)ஒழுகு தெக்கணநெ டும்திசைக் கங்கையாய்
மேவலில் பெற்ற னள்எனா
விளைபெரும் களிதூங்க அளிதூங்கு சந்தமலர்
விடுசினை பொதிந்து வானம்
புக்குலவு பொதியத் தடங்குடுமி இடறிவரு
பொருநைநீர் ஆடி யருளே
பூவைவா சக்குழவி பாவநா சத்தலைவி
பொருநைநீர் ஆடி யருளே.

**குறிப்புரை :** இளமுகைக்கலவை நெக்கு= இளைய மொட்டான தன்மையில் இளகி. கலவை= கலந்து. எக்கர் இட= மேடாக அமைய. வியவா= வியந்து. நிலவு ஒளி புரண்டென முடங்கி= நிலவின் வெள்ளொளி புரண்டதுபோல் சுருண்டு. நிறை நுரை= மிக்கநுரை. நோக்கி= கண்டு. மாணிக்கச் செக்கர் முக்கண் பொருப்பின் முழுவான் திருவில் குழைத்த= மாணிக்கமணி ஒத்த செவ்வானம்போன்ற சிவபிரானாகிய மலையின் அழகில் கலந்த.. மழவுத் திங்கள் சென்னியில் இருந்தும்= மூன்றாம்பிறையுடன் தலையில் இருந்தும்கூட மாகங்கை ஒரு சிறிதும் பெறாதபேறு= சிறந்த கங்கையாறு சிறிதளவும் பெறாதபெருமையை. வியவா நோக்கி= வியந்து பார்த்து.. தெக்கண மிக்குஒழுகு நெடும கங்கையாய்= தென்னாட்டில் நீர்மிகஓடும் நீண்ட கங்கையாறாக. மேவலில் பெற்றனள்= வாழும் பேறுபெற்றள். எனா= என்று. களி தூங்க= களிப்புமிக. அளிதூங்கு= வண்டுகள் செறிந்துமொய்க்கும். சினைவிடு சந்தமலர்

பொதிந்து= கிளையிலிருந்து உதிர்ந்த அழகிய மலர்கள். மூட. வானம் புக்குஉலவு பொதியத்தடங்குடுமி= வானளாவிய பொதிகையின் பெருமைபொருந்திய உச்சி. இடறி வரு= எற்றிக்கொண்டு ஓடிவரும்.

**பொழிப்புரை :** இளையமொட்டான தன்மையில்இளகி, மலர்கள் தம்முட்கலந்து, பொருநை யாற்றிடையே எக்கர்மேடாக அமைய, நிலவின் வெள்ளொளி புரள்வதுபோல் சுருண்டு மிக்க நுரையுடன் வரும் பொருநை யாற்றின் அழகைக்கண்டு; மாணிக்கமணிஒத்த செவ்வானம்போல் விளங்கும் சிவபிரானாகிய மலையில் கலந்த அழகுடன் விளங்கும் மூன்றாம்பிறையுடன் அவனது தலையில் இருந்தும்கூட அச்சிறந்த கங்கையாறு சிறிதும்பெறாதபெருமையை பொருநை பெற்றதை வியந்துபார்த்து, இந்தியநாட்டின் தென்னாட்டின் கங்கையாக வாழும்பெறு பெற்றாள் என்று களிப்புமிக, வண்டுகள் செறிந்துமொய்க்கும் கிளைகளில் இருந்து விடுபட்ட - உதிர்ந்த அழகியமலர்கள் பொருநை நீரோட்டதின் மேல்மூட, வானளாவிய பொதிகையின் பெருமையுடைய உச்சியை இடைறிக்கொண்டுவரும் பொருநையாற்றில் நீராடியருள்க! குயிலாக வாழும் குழந்தையே! பாவநாசத் தலைவியே! பொருநையில் நீராடியருள்க.

**விளக்கம் :** வைகையாற்றினை இளங்கோவடிக:ள்

" புனல்யா றன்றுஇது பூம்புனல் யாறு இது " ( புறஞ்சேரி இறுத்தகாதை )

என்பார். இங்கு இவர், பொருநையாற்றின் சிறப்பை இங்கு,

" அளி தூங்கு சந்தமலர் விடுசினை பொதிந்து "

என்கிறார்.

3. கோல்தொடி உனக்குமென் புனலாடு பருவமும்
குறுகிஅதி ஞான்றில் உன்னைக்
குளிப்பாட்டி எழிமேனி கைபுனைந்(து) அருள்பெறல்
குறித்ததுகொல் அறிதல் தேற்றேம்
நால்திணை யும்நெய்தல் கடல்சாடு புனலோடு
நரைநுரை துகிலும் அகிலும்
நாணக்கு ழல்கவரும் மலர்முகைக்கு இளநிலா
நடுநித்தி லக்கு வாலும்
காற்(று)உணவு மிசையிடு பாந்தள்வேந்(து) ஆயிரம்
காந்தள்அம் கடிகை நெரியக்
கல்லிப்பி டுங்கிப்பி ரித்தமணி யும்திரைக்
கையில்கொ ணர்ந்து நின்னைப்
போற்றுமெய்ச் சேடியர் எனப்பரவு தண்துறைப்
பொருநைநீர் ஆடி யருளே
பூவைவா சக்குழவி பாவநா சத்தலைவி
பொருநைநீர் ஆடி யருளே.

**குறிப்புரை :** கோல்தொடி= திரட்சியுடைய வளையல் அணிந்தவளே. புனலாடு= நீராடும். அதி ஞான்றில்= சரியான காலத்தில். கைபுனைந்து= அலங்கரித்து. குறித்தது கொல்= நினைத்ததோ. தேற்றேம்= அறியோம். நால்திணையும்= குறிஞ்சி பாலை முல்லை மருதம் ஆகிய நான்குநிலங்களும். நெய்தல் கடல்சாடு புனலோடு= நெய்தலாகியகடலில் மோதிக்கலக்கும் நீருடன். நரை நுரை துகில்= வெண்மையான நுரையாகிய ஆடை. நாணம் கவர் குழல்= மயிர்ச்சாந்து பூசிய கூந்தல். மலர்முகை= மலர்கள் மொட்டுகள். நடு இளநிலா நித்திலக் குவால்= இடுப்புக்குஇளநிலாஒளிவீசும் முத்துக்குவியல். காற்று உணவு மிசை இடு= காற்றை உணவாக உண்ணும் .பாந்தள வேந்து= நாகங்கட்கு அரசனாகிய ஆதிசேடன். சுடிகை நெரியக் கல்லிப்பிடுங்கிப் பிரித்த காந்தள் அம் மணி= உச்சி நசுங்குமாறு தோண்டி எடுத்ததும், காந்தள்மலர்போல் சிவந்ததும் ஆகிய அழகியமாணிக்கம். திரைக்கை= அலைகள் ஆகிய கைகளால், மெய்ச்சேடியர்= பாங்கியர். என= போல்.

**பொழிப்புரை :** திரட்சியுடைய வளையல் அணிந்தவளே! நீ நீராடுநேரத்துச் சரியானநேரத்தில் உன்னைநீராட்டி, அழகுபொருந்திருமேனியில் அழகூட்டி, அவற்றால் உன் அருள்பெறப் பொருநையாறு நினைத்ததோ யாம் அறியேம். ஆனால் அந்தஆறு பாலையுள்ளிட்ட நால்வகை நிலப்பொருள்களையும், கடலாகிய நெய்தல்நிலத்திற்கு, நீருடன்கூடிய நுரையாகிய வெண்மையாகிய / தூய்மையான ஆடையுடன்

அகில், மயிர்ச்சாந்து பூசிய கூந்தலுக்கு மலர்களும் மொட்டுகளும், இடுப்பில் கோத்துக்கட்ட இளநிலாஒத்து ஒளிரும் முத்துக்குவியலும், காற்றையே உணவாக உட்கொள்ளும் நாகங்களுக்கு அரசனாகியஆதிசேடனின் தலையுச்சி நசுங்குமாறு தோண்டி எடுக்கப்பெற்றதும், காந்தள்மலர்போல் சிவந்த ஒளிவீசுவதும் ஆகிய அழகிய மாணிக்க மணிகளையும் தனது அலைகளாகிய கைகளால் கொண்டுவந்து உன்பாங்கியர்போல் உன்னைப்போற்றும் தண்ணிய நீர்த்துறைகளுடைய பொருநையாற்றில் நீராடியருள்க. குயிலாக வாழும் குழந்தையே! பாவநாசத்தலைவியே! பொருநைநீராடியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கொல் - ஐய இடைச்சொல். நுரை துகில், திரைக்கை - உருவகங்கள். இச்செய்யுள் உவமை உருவம் ஆகியன கலந்த கலவையணி .

4. ஏந்திழை முகக்கொங்கை கங்கைஎனும் மாற்(று)அவள்
எனக்கருதி ஆட முனியேல்
ஈர்ங்கதிர் மதிக்குழவி தவழ்பொதிய உச்சியின்
இழிந்துபடு சீக ரத்தால்
பாய்ந்(து)இரு விசும்பில்பெ ருக்கெடுத்(து) அகல்மணிப்
பாறைஅறை போல்கி ழித்துப்
பாதலவ ரைப்பில்ப டர்ந்துகடல் ஞாலப்
பரப்(பு)அடைய விரவி ஓடிக்
காந்(து)எரி திறத்தமா ணிக்கமுத்(து) இனமணிகள்
கமழ்அகில் பருமு ருடுகள்
கந்தித்த சந்தனத்தி ரள்களொடு சங்கினம்
கரைஇரும ருங்கும் தள்ளிப்
போந்(து)அலை திரட்டிஎறி திரிபதகை என்னவரும்
பொருநைநீர் ஆடி யருளே
பூவைவா சக்குழலி பாவநா சத்தலைவி
பொருநைநீர் ஆடி யருளே.

**குறிப்புரை** : ஏந்திழை= அணிகலன் அணிந்த பெண்ணாகிய பொருநையாறு. முகம்= வடிவம். கொங்கை= முலைகள். கங்கைஎனும் அவள் மாற்று= கங்கையாகிய பெண்ணுக்கு மாற்றானது.- பதிலானது ஆட முனியேல்= இதில் நீராடலை வெறுக்காதே. ஈர்ங்கதிர்= குளிர்ந்தஒளி. மதிக்குழவி= நிலவாகிய குழந்தை. இழிந்துபடு= இறங்கும். சீகரம்= மழைத்துளி. அகல்மணிப்பாறை= அகலமான நவமணிப் பாறைகளை. அறைபோல்= ஆடரங்குபோல். வரைப்பு= எல்லை. அடைய விரவி= முழுவதும் பரவி. எரிகாந்து திறத்த= தீப்போல் ஒளிவிடும் தன்மையுடைய. இனமணிகள்= ஓரினப்பட்ட பிறமணிகள். காழ்= வயிரம்பாய்ந்த. பருமுரடுகள்= பருத்த அடிமரக்கட்டைகள். கந்தித்த= மணக்கும். தள்ளிப்போந்து= ஒதுக்கிக்கொண்டு வந்து. பதகைஎன= கங்கை.போல்

**பொழிப்புரை** : அணிகலன் அணிந்தபெண்ணாகிய பொருநையாற்றை, கங்கையாற்றுக்கு மாற்றானது என்று எண்ணி, இதில் நீராடுவதை வெறுக்காதே. இது, குளிர்ந்த ஒளியுடைய நிலவாகிய குழந்தை தவழும் பொதிகைமலை உச்சியிலிருந்து இறங்கும் மழைத்துளியால் பெருக்கெடுத்து வானில்பாய்ந்து, அகலமான நவமணிப்பாறைகளை ஆடரங்குபோல் அறுத்து, பாதாளஎல்லைவரை பரவி, கடல் சூழ்ந்த உலகப்பரப்பு முழுவதும் பரவிஓடிவந்து, தீப்போல் ஒளிவிடும் தன்மையுடைய மாணிக்கம் முத்து இவற்றுக்கு இனமான பிறமணிகளுடன் சங்குவகைகளையும் உடன் கரையின் இருபுறமும் ஒதுக்கிக்கொண்டுவந்து,மிக்கஅலைகள் திரண்டு வீசும் கங்கைபோல் வருகின்ற பொருநையாற்றில் நீராடியருள்க! குயிலாக வாழும் குழந்தையே! பாவநாசத் தலைவியே! பொருநையில் நீராடியருள்க.

**விளக்கம்** : கங்கைக்குப் பதிலாக இப்பொருநையாற்றில் நீராடுவதை வெறுக்கவேண்டாம், இது கங்கைபோல் தூயதே, எனவே இதில் நீராடுக என்றார். .

, .

5. அங்கண்நெடு வெள்ளிப்ப ருப்பதத்(து) உச்சிதிகழ்
அண்ணலம் கடவுள் சுடலை
அடவைபடு நிலைபரவு செம்மாலை **ஒளிர்கின்ற**
ஆகத்(து)அ ழல்கு ழைத்(து)ஓர்

பங்குதழை பச்சைபட விழைவில்தி ளைத்தாடு
பச்சிளம் தோகை மழலைப்
பவளவாய் ஓதிமப் பார்ப்(பு)எனத் தவளமென்
பனிமதிக் குழவி யோடும்
சிங்கமழ(வு) என்றுவெண் மருப்புக்கு றுத்துவிடு
தெறுகளிற்(று) இளைய கன்றும்
தென்றல்கு ழக்கன்றும் வன்திறலின் குன்றவர்சி
றாரும்விளை யாடு சாரல்
பொங்கர்செறி பொலியும்பொ ருப்(பு)இறைவி தண்துறைப்
பொருநைநீ ராடி அருளே
பூவைவா சக்குழவி பாவநா சத்தலைவி
பொருநைநீ ராடி அருளே

**குறிப்புரை** : அங்கண் நெடுவெள்ளிப் பருப்பதம்= அழகிய அகலமான கயிலை மலை. அண்ணல் அம்கடவுள்= தலைமைசான்ற சிவபிரான். சுடலை அடவை= சுடலை நீறு. பரவு படுநிலை= உடம்பில் எங்கும் பரவத்தரித்த தன்மை. செம்மாலை ஒளிர்கின்ற ஆகத்து அழல் குழைத்து= மாலைநேரச் செவ்வான் போல்ஒளிரும் நெருப்பைக் கலந்து. ஓர்பங்கு= ஒருபாதியில். தழை பச்சைபட விழைவில் திளைத்து=பச்சை நிறத்து அம்மை சேர அதன்விழைவால். ஆடு= வெற்றிபொருந்திய. பச்சிளம் தோகை= பசியநிறத்துடன் எப்போதும் இளையமயிலாகிய. மழலைப் பவளவாய் ஓதிமப் பார்ப்பு= மழலைமொழிபேசும் பவளம் ஒத்த இதழ்களுடைய அன்னபபறவையின் குஞ்சு. பனி மென் மதிக்குழவி யோடும்= குளிர்ந்த மென்மையான பிறையாகிய குழந்தையுடன். சிங்கமழவு என்று= சிங்கக்குட்டி ஒத்த. வெண்மருப்பு குருத்துவிடு= வெண்மையான தந்தம் அரும்பும். தெறுகளிற்று இளைய கன்றும்= பகைவரை அழிக்கும்களிறாகிய விநாயகருடன்.. தென்றல் குழக்கன்று= தென்றலாக விளங்கும் இளையகன்றாகிய முருகப்பிரான். வன்திறல்=வலிமையானஆற்றல். பொங்கர் செறி= சோலைகள் செறிந்த

**பொழிப்புரை** : அழகிய அகலமான கயிலைமலையின் உச்சியில் விளங்கும் தலைமை சான்றஅழகிய கடவுளாய், சுடலை நீற்றை உடலெங்கும் பூசியவனும், மாலைச்செவ்வான்போல ஒளிர்கிறவனும் ஆகிய சிவபிரானின் ஒருபாதியில்; விளங்கும் பச்சை நிறத்து அம்மையின் விருப்பால், வெற்றியில் திளைக்கும் பசியமயில், மழலைபேசும் பவளம்போன்ற இதழ்களுடைய அன்னப்பறவைக்குஞ்சு ஆகியவற்றுடன், வெண்ம, தண்மையுடைய பிறை சிங்கக்குட்டி போன்ற ஆற்றலுடன் கூடிய வெண்மையானதந்தம் முளைக்கும் வெற்றிபொருந்திய இளைய ஆண்யானையாகிய விநாயகரும், தென்றல் போல் இன்பம்தரும் மிக இளையகன்றாகிய முருகப்பிரானும், வலிமையானஆற்றலுடைய குறவர்களின் சிறுவர்களும் விளையாடும் சாரலுடையதும், சோலைகள் செறிந்ததும் ஆகிய பொதிகைமலைக்குரிய இறைவியே! தண்ணிய நீர்த்துறைகளுடைய பொருநையாற்றில் நீராடியருள்க. குயிலாகவாழும் குழந்தையே! பாவநாசத் தலைவியே! பொருநையாற்றில் நீராடியருள்க..

6. சொரியும் குறுந்துளி நறாப்படலை அளகச்
சொருக்(கு)அவிழ்ந்(து) எங்கும் விரியத்
துதைமலர்ச் சைவலக் கிளைஎனத் திரிந்தும்அச்
சுரிகுழல் காடு தடவித்
திரியும்கொ ழுங்கடைக் கண்களை நம்மினம்
திரிவ(து)என்(று) எண்ணி வந்து
தெள்விளிஇ ரங்கும்க ருவரிமிடற்(று) அறுபதச்
சிறைஅளி மயங்கி ஆர்ப்ப
நெரியும்த ரங்கக்க ரத்தோ(டு)அ லைப்புண்ட
நீள்வதன மதியம் என்று
நேமியம் புள்பெடை தணந்துநிலை கண்டுகிளை
நிற்ப(து)என மீண்டும் மருளப்
புரியும்பெ ரும்கருணை உருவப்ப சும்தோகை
பொருநைநீர் ஆடி யருளே

பூவைவா சக்குழலி பாவநா சத்தலைவி
பொருநைநீர் ஆடி அருளே

**குறிப்புரை** : குறுந்துளி= சிறுதுளி நறா= தேன். படலை அளகம்= தலைமுழுவதும் பரவிய கூந்தல் சொருக்கு= சுருட்டிச் சொருகிய கட்டு. துதைமலர்ச் சைவலக்கிளை= செறிந்த மலர்களுடன் கூடிய கொடிப்பாசி. திரிந்தும்= அவிழ்ந்தும். சுரிகுழல்காடு= சுருண்ட கூந்தலாகிய காடு. நம்இனம்= வண்டாகிய நமது இனம். தெள்விளி= தெளிந்த விளி என்னும் பண். இரங்கும்= பாடும். கருவரிமிடற்று= கருமையான கோடுபெற்ற கழுத்து. அறுபதச் சிறை அளி= ஆறுகால்களுடைய வண்டு. நெரியும்= அடுத்து அடுத்துவரும். நேமியம் புள்பெடை= சக்கரவாளப் பறவை. தணந்து= பிணங்கி. கிளை நிற்பது= பிரிந்து நிற்கிறதை. மருளப்புரியும்= வியக்கும். உருவம்= வடிவம்.

**பொழிப்புரை** : சூடிய மலர்களில் இருந்து தேனின் மிகச்சிறுதுளிகள், தலைமுழுதும் பரவியதால், கூந்தலின் சொருகிக்கட்டிய கட்டு அவிழ்ந்து விரிந்து தொங்க, அக்கூந்தலை மலர்கள் செருகிய கொடிப்பாசிக் கொத்து என்று மயங்கி, அப்பூக்களில் அமர்ந்து தேன்பருகாதும், சுருண்ட கூந்தற்காட்டை வருடும் கொழுங்கடைக்கண்களைத்தன் இனம் - வண்டு என்றுகருதியும் மயங்கிவந்து, கருமையான கோடுடையகழுத்தும், ஆறுகால்களும், சிறகும்பெற்ற வண்டுகள் தெளிந்த விளிஎன்னும் இசைபாடி ஆரவாரம் செய்யவும், நிலைத்துநிற்காது அடுத்தடுத்துவரும் நீர்அலைகளில் அலைப்புண்ட பெரியமுகமுடைய - முழுமையான - நிலவாகக்காட்சியளிக்காது நிலவின் நிழல்பிரிந்து பிரிந்து தோன்றுவதைப்பார்த்துப் பெண்சக்கரவாகப்பறவைகள் மீண்டும் மீண்டும் மருண்டு நிற்க, அண்டகளுக்கெல்லாம் பெருங்கருணை வழங்கும் அழகியதோகைமயலே! பொருநையாற்றுநீரில் நீராடி யருள்க. குயிலாகவாழும் குழந்தையே! பாவநாசத்தலைவியே! பொருநையாற்று நீரில் நீராடியருள்க.

**விளக்கம்** : சூடியமலர்த்தேனின் நைப்பால் கூந்தல்கட்டவிழ்ந்தது. கட்டவிழ்ந்த கூந்தலை, நீர்வாழ் கொட்டிப்பாசி என்றுகருதியதால் அதில்சூடியபூக்கள் இருப்பினும் பூக்களில்தேன்பருக அமராமலும், கூந்தலைத்தடவித் தடவி மீண்ட கருவிழிகளைத் தன் இனமாகிய வண்டுகள் என்றும் மயங்கியும் வண்டுகள் விளிஇசைபாடித் திரிந்தன. சக்கரவாகப்பறவைகள் நிலவின்கதிர்களை உண்பன என்பது இலக்கியவழக்கு. முழுநிலவின் பிம்பம், நீரின் அலையில் ஒரேவட்டமாகத்தோன்றாமல் வளைந்தும் சுருண்டும் தோன்றக்கண்ட சக்கரவாளங்கள் மருண்டன என்றார்.

7. கனிசிந் தையினொடு நின்பத நூபுர கமலத்(து)அ லர்வாரிக்
கைகொ(டு)அ ருச்சனை செய்பவர் பற்பலர் கன்னிகை நின்முன்னர்ப்
பனிதரு புதுஇதழ் புதுமடல் பலபல பால்வளை நித்திலவெண்
பந்(து)எறி யும்திரை அங்கையின் இட்(டு)எதிர் ஃறுளிமென் புள(கு)ஏற்று
இனிதுக சிந்துதெ ளிந்துவி ளங்கியி ருந்தவர் கைபரவ
எவ்வெவர் வந்தனர் அவ்வவர் வெவ்வினை எவ்வப் படநூறிப்
புனிதஒ ழுக்கம் தரும்ஒரு பொருநைப் புதுநீர் ஆடுகவே
புவனை கல்யாண சவுந்தரி பொருநைப் புதுநீர் ஆடுகவே.

**கூட்டுமுறை** : கன்னிகை நின்முன்னர், பற்பலர் கனி சிந்தையினொடு நூபுர கமலத்து நின்பதம், பனிதருபுது இதழ் புதுமடல் பலபல கைகொடுவாரிஎடுத்து, பால்வளை நித்திலவெண்பந்து எறியும் திரை அங்கையின் இட்டு, எதிர் மென்துளி புளகு ஏற்று, கைபரவ, எவ்வெவர் வந்தனர் அவ்வவர் வெவ்வினை எவ்வப்பட நூறிப் புனிதஒழுக்கம் தரும் ஒரு பொருநைப் புதுநீர் ஆடுகவே. புவனைக் கல்யாண சவுந்தரி பொருநைப்புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை** : கனி= கனிவான. நூபுரகமலத்து நின்பதம்= சிலம்பணிந்த தாமரை ஒத்தஉன்திருவடி. பனிதரு புதுஇதழ் புதுமடல் பலபல= குளிர்ந்த இதழ்கள் புதுமடல்கள் உடைய பலவித மலர்கள். கைகொடு வாரி= கைகளால் வாரி. வளை பால்நித்திலவெண்பந்து எறியும்= சங்கு ஈன்ற பால்போன்ற முத்துகளாகிய வெண்மையான பந்துகளை உதைத்து ஆடும். திரை= வலிமை. அங்கையின் இட்டு= அழகியமுன்கால்களில் - பாதங்களில் சொரிந்து. அர்ச்சனைசெய்பவர்= வழிபாடுசெய்கிறவர். எதிர்= பலன். மென்துளி புளகு ஏற்று= மென்மையாகச் சிலிர்க்கும் மெய்ம்மயிர் பொடித்தலைப்பெற்று. கைபரவ= கைகூப்பி வணங்க. எவ்வெவர்= யார்யார். அவ்வவர்= அவரவர். வெவ்வினை எவ்வப்பட நூறி= கொடிய வினைத்துன்பத்தை ஒழித்து. புனித ஒழுக்கம் தரும்= நல்வாழ்வு தரும். புவனை= பார்வதி தேவி.

**பொழிப்புரை** : அண்டமீன்ற கன்னியாகிய உன்முன்னே மிகப்பலர் வந்து, கனிந்த மனத்துடன்; சிலம்பணிந்ததும் தாமரைஒத்ததும் ஆகிய திருவடிகளில், குளிர்ந்த இதழ்கள்களும் புதுமடல்களும் உடைய பலவித மலர்களைக் கைகளால் வாரிஎடுத்து, சங்குகள் ஈன்ற பால்போன்ற வெண்மையான முத்துகளைப் பந்தாக உதைத்து ஆடும் உன்அழகிய வலிமையான பாதங்களில் சொரிந்து, வழிபடுகிறவர், அதன்பலனாக மென்மையாகச் சிலிர்த்தல் - மெய்ம்மயிர் பொடித்தல் பெற்று, மனம் இனிமையுற இளகி, தெளிவுபெற்று, ஒளிபெற்றுக் கைகூப்பி வணங்க; இதன்பொருட்டு யார்யார் வந்தனரோ அவரவர் கொடிய வினைத் துன்பத்தை ஒழிப்பவளே! நல்வாழ்வுதரும் பொருநையாற்றின் புதுநீரில் நீராடுக! பார்வதி தேவியாகிய அருள்தரு கல்யாண சுந்தரியே! பொருநையாற்றின் புதுநீரில் நீராடுக.

**விளக்கம்** : இக்கோயில் பெருமானுக்கு, அருள்தருகல்யாணசவுந்தரி உடனாய கல்யாணசவுந்தரர் என்றபெயரும் உண்டு

8. கதிக தவத்தவரும் அடையவி ரிந்(து)இனி(து) ஆரச்செறி பைங்கூழ்
அளவி மனப்புனம் விளைவிப் பான்மலர் ஐங்கணை யன்நடுங்க
அதிக வி ரகநெருப்(பு) அவிதர முக்கண் ணரைக்குளிர்விக்கும்
கன்னி மயில்பெடை நின்இரு நயனக் கருணைப் பழநதியால்
முதிய மரப்பொழில் முதலொ(டு) எரித்துமு தைப்புனம் விளைவிப்பான்
முதுகு குனித்(து)அடு கார்முக வேட்டுவர் மூட்(டு)அழல் அவியநெடும்
பொதிகை உடல்குளிர் வித்திடு பொருநைப் புதுநீர் ஆடுகவே
புவனை கல்யாணச வுந்தரி பொருநைப் புதுநீர் ஆடுகவே.

**கூட்டுமுறை** : கதிக தவத்தவரும் அடைய விரிந்து இனிதுஆர, மனப்புனம் செறி பைங்கூழ் அளவி மனப்புனம் விளைவிப்பான், கார்முகமுதுகு குனித்து அடுமலர் ஐங்கணையன் நடுங்க, வேட்டுவர் ( ஐம்புல வேடர் ) மூட்டு அழல் அவிய. முக்கண்ணரைக் குளிர்விக்கும் கன்னிமயில் பெடை, நின்இருநயனக் கருணைப் பழநதியால் முதிய மரப்பொழில் முதலொடு எரித்து முதைபுவனம் விளைவிப்பான், நெடும் பொதிகை ....... .. ஆடுகவே.

**குறிப்புரை** : கதிக= மிக்க. அடைய=முழுவதுமாக. விரிந்து= பரவலாக. இனிது ஆர= நன்குஅனுபவிக்க. மனப்புனம் செறிபைங்கூழ் அளவி= மனமாகிய நிலத்தில் மிக்க காமநோய் கலந்து. விளைவிப்பான்= பயன் உண்டாக்க. கார்முக முதுகு குனித்து= வில்லைவளைத்து. அடு= துன்புறுத்தும்.. ஐ மலர்க் கணையன்= ஐந்துமலர்களை அம்புகளாகக்கொண்ட மன்மதன். வேட்டுவர்= ஐம்புலன்கள்களாகிய வேடர். விரகநெருப்பு= காமஏக்கம். அவிதர= அவிய. முக்கண்ணர்= சிவபிரான். பெடைமயில் கன்னி= பெண்மயிலாக விளங்கும் கன்னியாகிய அம்மையே. நின்இருநயனக் கருணைப் பழநதி= உனது இருகண்களாகியகருணையேவடிவான நதி. முதிய மரப்பொழில் முதலொடும் எரித்து= தொன்மையான உயிர்கள் என்னும் மரங்களுடைய சோலையை - அண்டத்தை. முதலொடும்= அச்சோலையில் ஐந்துதொழில் புரியும் கடவுளருடன். எரித்து= தன்னுள் ஒடுக்கி. முதைபுவனம் விளைவிப்பான்= பழையபடி அண்டத்தை உண்டாக்க. பொதிகை உடல் குளிர்வித்திடு பொருநைப் புதுநீர்= பொதிகைமலையில் உள்ளதும், நீராடியவர் உடலைக் குளிர்விப்பதும் ஆகிய பொருநைநீர்.

**பொழிப்புரை** : மிக்க தவத்தோரும்கூட முழுமையாகவும் பரவலாகவும் நன்கு அனுபவிக்க அவரது, மனமாகிய நிலத்தில் மிக்ககாமநோய்கலந்து பயன்தர, கரும்புவில்லை வளைத்து , ஐவகை மலர்களை அம்புகளாக உடையமன்மதனை ஏவி, ஐம்புலன்களாகிய வேடர்கள் மூலம் உண்டாக்கியகாமஏக்கம் அவிய, சிவபிரானின் மனத்தைக் குளிரவைக்கும் பெண்மயிலாக விளங்கும் கன்னியே! தொன்மையான உயிர்க்ச்ள் ஆகிய மரங்கள் அடங்கியசோலையுடன், அதனை ஆக்கிய கடவுளருடன் அழித்தபின் அழிந்துபட்டத அண்டமெனும் சோலையை, உனது இரண்டு கண்களாகிய கருணையே வடிவான நதிகள்மூலம், மீண்டும் பழையபடி உண்டாக்கும் பொருட்டு, பொதிகைமலையில் உள்ளதும் நீராடியவர் உடலைக்குளிர்விப்பதும் ஆகிய பொருநையின் புதுநீரில் நீராடுக. பார்வதிதேவியாகிய அருள்தரு கல்யாண சுந்தரியே! பொருநைப் புது நீரில் நீராடுக.

**விளக்கம்** : மன்மதனின் செயல்பாடு ஐம்புலன்கள்வழி வெளிப்படும் என்றார். ஐம்புலன்களையும், நன்றுதீது கருதாது தாம்விரும்பியதைச் செய்துமுடிக்கும் வேடர் என்பது மெய்கண்டார் வாக்கு.

" ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து " ( சூத்திரம். 8 )

இதனை உள்வாங்கிய இவரும் ஐம்புலன்களை " அடு கார்முக வேட்டுவர் " என்றார்.

சிவபிரான் திருஉளமறிந்து " நாம் நினைப்பதைக் கைசெய்வதுபோல் , அம்மையும் செயற்படுகிறவள் ஆதலின் " முக்கண்ணரைக் குளிர்விக்கும் கன்னி மயில்பெடை " என்றார்

நீத்தார் கடன்செய்தவர், நீராடிய பின்னரே பிறசெயல்களில் ஈடுபவர் ஆதலின் " முதை புனம் விளைவிப்பான் புதுநீராடுக " என்றார்.

**இலக்கணக்குறிப்பு :** ஐங்கணை - தொகைக்குறிப்பு. விளைவிப்பான் - விணையாலணையும் பெயர். வேட்டுவர் - உருவகம். விளைவிப்பான் - முற்றெச்சம்.

9. அன்னே துரியா தீதப் பொருளே அருளே தெருளேபேர்
அருளால் அறிவோர் அறிவுக்(கு) அளவாய் அளவாகாய்
மின்னே இருளே நிலவே வெயிலே வெளியே வளியேபார்
விரிவே கனலே புனலே எனவாய் வேறாய் வேறாகாய்
என்னே என்னே நின்னுடை மாயம் யாவர் உணர்ந்தவரே
இச்சா ஞானக் கிரியா சத்தி எனும்பேர் புனைகின்ற
பொன்னே நின்நேர் இல்லாய் பொருநைப் புதுநீர் ஆடுகவே
புவனை கல்யாண சவுந்தரி பொருநைப் புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை** : துரியாதீதம்= துரியநிலை கடந்ததான நிலை - மிகத்தூயநிலை. தெருள்= ஞானம். அளவாய்= எல்லைக்குட்படபொருள். அளவாகாய்= எல்லைக்குட்படாதவள் ஆவாய். பார் விரிவு= அகலமான உலகம். நேரில்லாய்= ஒப்பற்றவள்.

**பொழிப்புரை** : வெளிப்படை.

10. வழிந்து பசுந்தேன் ஒழுகும்மலர் மனையாட் டியர்நின் னொடும்குடைய
வற்றா நெடுநீர் இளையநிலா வளைக்கை முகந்திட்(டு) அவர்வலிமை
அழிந்து படநீ இறைப்பமெலிந்(து) ஆற்றார் அவரும் புனலைமுகந்(து)
அருமைத் திருமே னியில்இறைக்கில் அம்ம மிகைஎன்(று) ஒல்கிநிற்பக்
குழிந்து கருங்கல் அறைகிழியக் கொழுங்கால் அகில்சாந்(து) அரைத்(து)உருட்டும்
கொழும்தண் தரங்கக் கரத்தினில்அக் குறுங்கைப் புனலை எற்றிஉன்மேல்
பொழிந்து சிதறி முழுக்காட்டும் பொருநைப் புதுநீர் ஆடுகவே
பொருவில் கருணை உலகுடையாள் பொருநைப் புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை** : பசுந்தேன் வழிந்து ஒழுகும் மலர்மனையாட்டியர். மலர்மனையாட்டியர்= புதுத்தேன் வழியும் செந்தாமரை வெண்டாமரை மலர்களில் இருக்கும் திருமகள் கலைமகள். குடைய= நீராட. வற்றாநெடுநீர்= குறைவில்லாத மிக்கநீர். இளைய நிலா வளைக்கை= பிறைநிலாப்போன்ற வளையலணிந்தகை. இறைப்ப= மேலே ஊற்ற. மிகை= குற்றம். ஒல்கி= மனம் தளர்ந்து. அறை கிழிய= பாறை பிளவுபட. கொழுங்கால்= பருத்த அடிப்பகுதி. அரைத்து= தேய்த்து. குறுங்கை= சிறிதளவு. எற்றி= வீசி

**பொழிப்புரை** : வளமானதேன் வழிந்துஒழுகும் செந்தாமரை வெண்டாமரை மலர்களில் வாழும் திருமகளும் கலைமகளும் உன்னொடு பொருநைநீரில் நீராட, அவர்கள்மேல் பிறைபோன்ற வளையல் அணிந்தஉன்கையால் குறைவில்லாத மிக்கநீரை முகந்து அவர்களின் வலிமைகுறையுமாறு - மூச்சுவிடத் திணறுமாறு அவர்கள்மேல்இறைக்க, அவர்கள் தாங்காதவராய் உன்மேல் நீரைவாரி இறைப்பது குற்றம் என்று மனம்தளர்ந்து நிற்க, கருங்கல் பாறை பிளக்குமாறு, திரண்ட அடியுடைய அகில் சந்தனமரங்களைப் பாறையில் தேய்த்து உருட்டிக்கொண்டுவரும் தனது வளமான தண்ணிய குறுகியஅலைக்கரத்தால் நீரை உன்மேல் பொழிந்துசிதறி உன்னைமுழுக்காட்டும் பொருநைப் புதுநீராடுக. ஒப்பற்ற கருணையுடன்உலகைக் காப்பவளே! பொருநைப்புதுநீராடுக.

11. இரட்டைப் பனிக்கோட்(டு) ஒற்றைமுற்றா இளைய நிலவுப் பிறைமவுலி
எம்கோன் விடுத்த வடாதுபுலத்(து) எறிநீர்க் கங்கை படிந்(து)எவரும்
திரட்டித் தருவெவ் வினைஅனைத்தும் சிதையத் துடைப்பான் அடைந்துதனுத்
திங்கள் தோறும் வந்(து)இனி(து)ஆடும் தெய்வத் தலைமை படைத்தனைஉன்
பரட்டுக் கலவன் உடைந்(து) ஓடப் பசும்பொன் கணைக்கால் கிடந்துவரால்
பதுங்க விழிக்கும் கயல்ஒதுங்கும் பகுவாய் மகரத் தகரஅலை

புரட்டிச் சுருட்டித் துறைநிறைக்கும் பொருநைப் புதுநீர் ஆடுகவே
பொருவில் கருணை உலகுடையாள் பொருநைப் புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை** : கோட்டு= நுனியுடைய. முற்றா இளைய நிலவு= இளம் ஒளிதரும்மூன்றாம்பிறை மவுலி= சடை. விடுத்த= ஓடச்செய்த. படிந்து= நீராடி. திரட்டித் தரு வெவ்வினை= மிக்க கொடியவினை. துடைப்பான்= முற்றும் நீக்க. அடைந்து= இங்குவந்து. தனுத்திங்கள்= மார்கழிமாதம். பரட்டுக்கலவன்= அணிகலன். கணைக்கால்= கெண்டைக்கால். வரால் பதுங்க விழிக்கும்= வரால்மீன் ஒளிந்துகொள்ளப் பார்க்கும். ஒதுங்கும்= ஒதுங்கி ஓடும். துறை நிறைக்கும்= படித்துறைக்கண் மிகும்.

**பொழிப்புரை** : குளிர்ந்த இரு நுனிகளுடைய ஒப்பற்ற இளம்ஒளிதரும் பிறையைச் சடையில் முடித்த எமது சிவபிரான், தனதுசடையில் தாங்கிவிடுவித்ததும் வடநாட்டதும் அலைவீசுவதும் ஆகிய கங்கையில் நீராடிய அனைவரும், திரண்ட தமது கொடிய் வினையைமுற்றும் நீக்கிக்கொள்ள, மார்கழிமாதம் நீவாழும் இங்குவந்து நீராடும் தனிச்சிறப்புப் பெற்றவள் நீ. உன் அணிகலன் உடைந்துஓடவும், வளமான அழகிய கெண்டக்கால் கண்டு வரால் மீன் பதுங்கவும், கண்களுக்குக் கெண்டை அஞ்சிஒதுங்கவும், பிளந்த வாயுடைய மகரமீன் அலைஎறிந்து நீர்த்துறையை நிறைக்கவும் உள்ள பொருநைப் புதுநீராடுக! ஒப்பற்ற கருணையுடன் உலகைக்காப்பவளே! பொருநைப் புதுநீராடுக.

**விளக்கம்** : கங்கையில் நீராடிப்போகாத வினை, மார்கழிமாதம் பொருநையில் நீராடினால் போகும் என்ற தனிச்சிறப்புடையது பொருநை என்றார்.

## 10. பொன்னூசல் பருவம்

1. நிலைபட்ட வெண்நிணத்(து) என்புக்(கு)ஒ ழுங்குகால்
நிறுத்திப்பு றத்துமறைய
நெய்த்திடுமு டைத்தசை தோல்எழினி கட்டிஅளி
நெஞ்சகப் பலகை கீழ்இட்(டு)
அலைபட்ட மும்மலம் ஒருங்குபட மேல்விட்ட
மாகச்ச மைத்து முட்டி
அமையா இருவினைப் பழவடம் தூக்கிவைத்(து)
ஐவர்நின்(று) ஆட்ட விரிபா
சிலைப்பட்ட நெட்டிதழ்ப் புண்டரிக வீட்(டு)இருந்து
இயன்மறைத் தச்சன் இச்சித்(து)
இயலும்எத் தொழிலும்பெ றத்தனிவ குத்(து)உதவ
இன்உயிர்கள் என்ன மன்னிப்
புலைபட்ட உடல்ஊசல் ஆட்டும்மட அன்னமே
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரும் உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : ஒழுங்குகால் நிலைபட்ட வெண்என்புக்கு நிணத்துப் புறத்து மறைய என்று கூட்டுக. ஒழுங்கு கால் நிலைப்பட்ட வெண்என்புக்கு= சீராக அடிப்பாகத்தில் நிலைத்த வெண்எலும்புக்கு. நிணத்துப் புறத்து மறைய= புலாலுடன் கூடிய வெண்மையான எலும்பை வெளியே அதை மறைத்து. நெய்த்திடு முடைத்தசை தோல் எழினி கட்டி= கொழுப்புடன்நாறும் சதை தோல் ஆகியதிரைகட்டி. அளி நெஞ்சகப்பலகை கீழ்இட்டு.= கருணையுடன் நெஞ்சாகிய பலகையைக் கீழேஇட்டு. மும்மலம் ஒழுங்குபட மேல் விட்டமாச்சமைத்து= ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்றுமலங்களையும் விட்டமாக மேலே அமைத்து. முட்டிஅமையாத= குறைவில்லாத. பழ இருவினை அலைபட்ட வடம்தூக்கி வைத்து= பழைமையான நல்வினை தீவினையாக அலையும் கயிறுகளைத் தொங்கவிட்டுக்கட்டி. ஐவர் நின்று ஆட்ட= புலன்களாகிய ஐந்துபேர் நின்று ஆட்ட. விரிபாசிலை பட்ட= பெரியபசியஇலையுடன் கூடிய. நெட்டிதழ்ப் புண்டரிக வீட்டு இருந்து= நீண்ட இதழ்கள் கொண்ட தாமரைமலர் என்கிற உயிராகிய வீட்டில் இருந்துகொண்டு. இயன்மறைத் தச்சன் இச்சித்து இயலும்= இயற்கை என்னும் இரகசியமான தச்சன் விரும்பிச் செயற்படும். எத்தொழிலும்பெற= எச்செயலும் நிறைவேற. தனி வகுத்து உதவ= சிறப்பாக அமைத்து உதவும் பொருட்டு. இன் உயிர்கள் என்ன= இனிய உயிர்கள் என்றபெயரில். புலைபட்ட உடல்

மன்னி ஊசல் ஆட்டும்= உயிர்களின்கீழான உடம்பில் தங்கி. அதை ஊஞ்சலாக ஆட்டுகிற. திரிபுரை= முப்புரங்களையும் உடையவளே. மும்மை அவனி தரும்= மூவுலகையும் உயிர்கட்குத்தரும். .

**பொழிப்புரை** : உடம்பின் அடிப்பாகத்தில் நிலைத்தகாலின் வெண்மையான எலும்பைப் புலாலால் வெளியே தெரியாதவாறு மறைத்து, கொழுப்புடன்நாறும்தசை தோல் ஆகிய திரைகட்டி, கருணையுடன் நெஞ்சாகிய பலகையிட்டு, ஆணவம் கன்மம் மாயை ஆகியமும்மலங்களையும் ஒழுங்குபட மேலே விட்டமாக அமைத்து, குறைவில்லாத பழைமையான நல்வினை தீவினைகளாக முன்னும் பின்னும் அலையும் கயிறுகளைத்தொங்கவிட்டுக் கட்டி, ஐம்புலன்களாகிய ஐவர்நின்று ஆட்ட, பெரியபசிய இலையுடன் கூடியதும், நீண்ட இதழ்களுடனுமான தாமரை மலராகிய உயிரென்னும் வீட்டில் இருந்து - கொண்டு, இயற்கை என்னும் இரகசியமான தச்சன் விரும்பிச் செயற்படும் எச்செயலும் நிறைவேறச் சிறப்பாக அமைத்து உதவும்பொருட்டு இனிய உயிர்கள் என்றபெயருடன் உயிர்களின் கீழான உடம்பில் தங்கி, அதனை ஊஞ்சலாக ஆட்டும் இளைய அன்னமே! பொன்னூசல் ஆடியருள்க. பார்வதி தேவியே! மூவுலகங்களையும் உடையவளே! மேல் நடு கீழ்ஆகிய மூவுலகையும் உயிர்கட்குத்தரும் உலகம்மையே! பொன்னூசல் ஆடியருள்.

**விளக்கம்** : மேல் நடு கீழ் உலகங்களாவன தேவருலகம், இப்பூமி, நரகம் என்பன. இவற்றை அவரவர் புண்ணிய பாவங்களுக்கேற்ப வழங்குகிறவள் அம்மை.

**இலக்கணக் குறிப்பு** : வெண் என்பு, மும்மலம், இருவினை, பாசிலை, நெட்டிலை -பண்புத்தொகைகள். தசை தோல் - உம்மைத்தொகைகள். ஐவர் - தொகைக்குறிப்பு. விரிஇலை - வினைத்தொகை. அவனி - இடவாகுபெயர். இச்செய்யுள் முற்றுருவகவணி.

2. வண்டல்படு மல்லல்தரும் சேறுநா றுமலர்
வாவியின் முளைத்(து) எழாமல்
மறிபுனல் வறப்பவறள் பாசடைப் படராமல்
வார்புழையின் நூல்இ ழைத்த
கண்டகநெ டும்தாளில் மலராமல் மதிவரவு
கண்டுமுகி ழாமல் அகல்வான்
காற்றும்ப னிக்குறும் திவலையில் புரிமுகம்
கருகிச்ச மழ்ப்பு றாமல்
பண்தவழ்இ சைச்சுரும்(பு) ஆறுகால் மிதித்(து)உழப்
பருமடல்உ டைந்தி டாமல்
பகலவன் கண்(டு)அன்று பரநாத வெளியிலே
பகலும்மலர் அடியர் உள்ளப்
புண்டரிக மண்டபத்(து) அரசமட அன்னமே
பொன்னூசல் ஆடு யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரு உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே

**குறிப்புரை** : மல்லல்= வளம். நாறுமலர் வாவி= மணக்கும் மலர்கள் பூத்த குளம். மறி= சுருண்டுவிழும். வறள்= வற்றிய. பாசடை= பசியஇலை. வார்புழை= நீண்ட துளை. கண்டகநூல்= தாமரைநூல். முகிழாமல்= குவியாமல். வான்காற்றும்= வானம் உதிர்க்கும். புரிமுகம்= சுருண்டுள்ள நுனி. சமட்புறாமல்= வாடாமல். அறுகால மிதித்து= ஆறுகால் வண்டுகள் மிதித்து. உழ= கிண்ட. பகலவன் கண்டு= காலைஞாயிற்றைக் கண்டு. பரநாத வெளி= பிரணவவெளி. பகலும்= மலரும். புண்டரிக மலர் மண்டபம்= தாமரை மலராகிய மண்டபம்.

**பொழிப்புரை** : வண்டல்மண் தரும்வளமான சேற்றில் முளைக்கும் மலருடைய குளத்தில் முளைத்து வளராமல், சுருண்டுவிழும் அலைநீர் வறண்டுபோக வற்றிய பசிய இலைகளிடைப் படராமல், நீண்ட துளையுடன் நூலும் உடைய தாமரைத்தண்டில் மலராமல், நிலா உதிப்பதுகண்டு இதழ்குவியாமல், சுருண்டுள்ள நுனியானது அகன்ற வானம்உதிர்க்கும் மிகச்சிறுதிவலையாகிய பனியில் வாடாமல், பண்இசைக்கும் வண்டு தனது ஆறுகால்களால் மிதித்துக் கிண்ட பருத்தஇதழ் உடைந்துபடாமல், காலைஞாயிற்றைக்கண்ட அந்நாளில் பிரணவவெளியில் மலரும் அடியவர்களது மனமெனும் தாமரையாகியமண்டபத்தில் எழுந்தருளியுள்ள அரசஅன்னமே! பொன்னூசல் ஆடியருள்க. பார்வதி தேவியே!

மூவுலகங்களையும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய மூன்று உலகங்களையும் உயிர்கட்குத்தரும் உலகம்மையே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : அடியவரின் மனத்தாமரையின் தனிச்சிறப்புகளை எடுத்துக் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : நீரில் மலரும் தாமரையிலிருந்து அடியவர் உள்ளத்தாமரையைவிலக்குவதனால் இச்செய்யுள் விலக்கணி.

3. திண்ணிய கவட்டு உலவை உடல்குழைந்(து) ஈனாத
தேமாஇ ளம்த ளிர்களும்
சினைவிடப் பொதுளாத வால்இலையும் உயர்முடத்
தெங்கின்மடல் நெற்றி முற்றா
பண்ணியல் சுரக்கும்கு ரும்பையும் பாசடைப்
படராம டல்கு முதமும்
பைந்தளின் மலராத குவளையும் மொட்(டு)அகம்
பல்காத கோக னகமும்
தண்ணிழல் பரப்பும்மென் கொடிகிளைத்(து) அலராத
தளவும்சு மந்(து)ஒர் எண்தோள்
தாணுச்சி னைபொலம் தருவில்ப டர்ந்(து)அதி
சயம்தரக் குரங்கு பொருநைப்
புண்ணியந திக்கரையில் வளர்காம வல்லியே
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரும் உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : கவட்டு உலவை உடல்= கிளைவிட்ட மரக்கொம்பு. தளிர்= தளிராகிய உடம்பு. சினைவிடப் பொதுளாத= கிளைவிடும்படித் தழைக்காத. வால் இலை= இளம்பூவிதழ். ( கன்னம் ). தெங்கின் முட நெற்றிமுற்றா மடல் பண்ணியல் சுரக்கும் குரும்பை= தென்னையின் உச்சியில்வளைந்த பாளையில் தோன்றிய முற்றாத குரும்பை ( இளமுலை ) பாசடைப்படரா மடல் குமுதம்= பசிய இலையில்லாத மடலுடைய குமுதமலர் ( உதடுகள் ) பைந்தளிரின் மலராத குவளை= பசியதளிருடன் மலராதகுவளைமலர் ( கண் ). மொட்டு அகம் பல்காத கோகனகம்= மொட்டின் உள்ளே பருக்காத தாமரைக்கொட்டை ( மூக்கு ) தளவு= முல்லை ( பற்கள் ) எண்தோள்சினை தாணு= எட்டுத்தோள்கைககளுடைய சிவபிரான். பொலன் தரு= பொன்மரம் குரங்கு= தங்கிய. காம வல்லி= வீரியம் - ஆற்றல் மிக்ககொடி.

**பொழிப்புரை** : வலிமையாகக் கிளைவிட்ட மரக்கொம்பு தன்உடம்பு சற்றேமென்மைப்பட்டு, ஈனாத தேமாவின் இளந்தளர்கள்( உடல்உறுப்புகள்,) கிளைவிடும்படித் தழைக்காத பூவின் இதழ்( கன்னம் ), தென்னையின் உச்சியில் வளைந்த பாளையில் தோன்றிய முற்றாத இளம்குரும்பை ( இளமுலைகள், பசியஇலைஇல்லாத மடலுடைய செங்குமுதமலர்கள் ( உதடுகள்,) பசிதளிருடன் மலராத குவளை மலர்கள் ( கண்கள் ), மொட்டின் உள்ளே பருக்காத தாமரைக்கொட்டை ( மூக்கு, )தண்ணிய நிழல்பரப்புகிற மென்மையான கொடியாகக்கிளைத்துப் படர்ந்து பூக்காத முல்லைஅரும்புகள் ( பற்கள் ) ஆகியவற்றச் சுமந்துகொண்டு ; எட்டுத்தோள்களும் கைகளுமுடைய சிவபிரானாகிய மரத்தில் படர்ந்து, அதிசயமாய்த் தங்கியுள்ளவளும், புனிதமான பொருநை நதிக்கரையில் வளர்கிறவளும் ஆகிய வீரியம் - ஆற்றல் - மிக்க கொடியாக விளங்குகிறவளே! பொன்னூசல் ஆடியருள்க! பார்வதி தேவியே! மூவுலகையும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய மூவுலகங்களையும் உயிர்கட்குத் தருகிறவளே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : சிவபிரானை மரமாகவும், அம்மையை அதில் படர்ந்த கொடியாகவும் கூறி உலகியல் கொடிக்குரிய உறுப்புகளை விலக்கினார். .

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் விலக்குஅணி.

4. குருத்துப் பனித்திங்கள் அம்குழவி வால்நிலவு
கோவிவிட்(டு) எறியும் முத்தில்
குயிற்றுமணி ஊசல்பு றத்(து)இருந்து ஆட்டுவது
கொடிமதில் இலங்கை நிருதன்

பெரும்துப்(பு) உடைப்புயம் இரட்டித்த பத்துப்பி
றங்கல்கொடு அசைத்த தலைநாள்
பெயர்மந்த அனுங்கும்அக் கயிலைப்பொ ருப்பின்உறு
பெற்றியை நிகர்க்கும் என்ன
அருத்தம்தெ விட்டாப்ப ழங்கடவுள் அமிர்தமே
அமிர்தம்தி ரட்டு சுவையே
அச்சுவையின் இச்சைதரும் ஆனந்த இன்பமே
அகில்முருடு உருட்டி எறிதண்
பொருந்(து)அத் துறைப்பசுங் கன்னிஅர சன்னமே
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரு உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : பனிக் குருத்து திங்கள் அம் குழவி= குளிர்ந்த முளைவிட்ட மூன்றாம் பிறையாகிய அழகிய தூயவெண்ணிலா. கோவி விட்டு= சினமின்றி. எறியும்= தூக்கிஎறிந்த. முத்தில் குயிற்று மணி ஊசல்= முத்தினை இழைத்துச் செய்யப்பெற்ற ஊஞ்சல். புறத்து= பக்கம். ஆட்டுவது= ஊஞ்சலாட்டுவது. இலங்கை நிருதன்= இலங்கை அரக்கன் - இராவணன். பெரும்துப்பு உடைய புயம்= மிக்க வலிமையுடைய புயம்.. இரட்டித்த பத்துப் பிறங்கல்கொடு= இருபது குன்றுகளாகிய தோள்களால். பெயர் மந்த அனுங்கும்= புகழ் குன்றவருந்தி. அசைத்த தலைநாள்= கயிலையை அசைத்த முன்நாளில். கயிலைப் பொருப்பின் உறுபெற்றி நிகர்க்கும்= கயிலைமலை அசைந்த தன்மையை ஒக்கும். அருத்தம் தெவிட்டா= சொற்பயனில் தெவிட்டாத. பழங்கடவுள் அமிர்தமே= அநாதியான சிவபிரானுக்கு வாய்த்த அமுதமானவளே. இச்சை= விருப்பம். முருடு= கரடு முருடான மரத்துண்டம். தண்பொருந்து= குளிர்ச்சியுடைய.

**பொழிப்புரை** : குளிர்ந்த முளைவிட்ட மூன்றாம் பிறையாகிய அழகியதூயவெண்ணிலா,சினமின்றித் தூக்கிஎறிந்த முத்துகளை இழைத்துச் செய்யபெற்ற ஊஞ்சலின் பக்கத்தில் இருந்து தோழிஆட்டுவது; கொடிகள் கட்டப்பெற்ற மதில் சூழ்ந்த இலங்கை அரக்கனாகிய இராவணன் தனது மிக்க வலிமையுடைய இருபதுதோள்களுடன்கூடிய கைகளால், தனதுபுகழ்குன்ற வருந்திக் கயிலையை அசைத்ததன்மையை ஒக்கும். சொற்பயனில் தெவிட்டாத அநாதியான சிவபிரானுக்கு அமுதமானவளே! அமுதத்தில் திரட் டி எடுத்தசுவையே! அச்சுவையில்கொண்ட விருப்பத்தால் கிடைக்கும் ஆனந்தம்தரும் இன்பமே! அகில் மரத்தின் கரடு முருடான துண்டுகளை உருட்டிக்கொண்டு வருவதுடன், தண்ணியதுறைகளையுடைய பொருநையின் இளங்கன்னியான அரசஅன்னமே பொன்னூசல் ஆடியருள்க. பார்வதி தேவியே! மூவுலகங்களை உடையவளே! மேல் நடு கீழ் ஆகியஉலகங்களை உயிர்கட்குத் தருகின்றவளே! பொன்னூசல் ஆடியருள்க. ,

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

5. பின்னுதிரை நீருண்ட கொண்டல்ப டாத்துநுழை
பிறையனைய கூந்தல் செருகும்
பிள்ளைவண்(டு) ஆட்(டு)அயரும் வெள்ளிவெண் தோட்டுமென்
பிச்சிஅம் தொடையும் அடுபோர்க்
கொன்நுதி அயில்கண்நுழை அணிமணிக் குழையும்உடல்
குழையும்மதி நுதலும் முகமும்
குங்குமச் சேதகம் எழுத்(து)வரி பெருந்தனக்
குவடுமுத் தாப ரணமும்
மின்இலகு முத்தம்தெ றிக்கக்கு னிக்கும்வரி
வில்கரும் பும்சு ரும்(பு)உண்
வேள்ஐம் பாணமும் தோன்றஎன் சிந்தைஅர
விந்தமும் சிந்தா மணிப்
பொன்நெடும் கோயிலும்இ ருந்துவிளை யாடுவாய்
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிக்கும் உலகம்மை

பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : பின்னு= தொடரும். கொண்டல் படாத்து= மேகமாகிய திரையில். பிள்ளை வண்டு= சிறுவண்டு. ஆட்டு அயரும்= மொய்த்து அனுபவிக்கும். தோட்டு= இதழ்களுடைய. தொடை= மாலை. கொன்நுதி கூர்மையான நுனி. அயில் கண்= வேல்போன்ற கண். நுழை= துவாரம். அணிமணிக்குழை= அழகிய மணிபதித்த.காதணி. குழையும் உடல்= தளிர்போன்ற உடம்பு. சேதகம்= சிவப்பு. எழுத்துவரி= எழுதப்பெற்ற. முத்தம் தெறிக்க= முத்துகள் தெறித்துவிழ. குனிக்கும்= வளைக்கும். வரிவில் கரும்பும்= வளைத்த கரும்புவில். சுரும்பு= வண்டு. வேள்= மன்மதன். சிந்தை அரவிந்தம்= மனத்தாமரை. பொன் நெடும் கோயில் / அழகியபெருங்கோயில். விளையாடுவாய்= இன்புறுகிறவளே.

**பொழிப்புரை** : ஒன்றைஒன்று தொடரும் அலைநீருண்ட மேகமாகியப்திரைச்சீலையில் நுழையும் பிறைஒத்த கூந்தலில் செருகியதும், சிறுவண்டுகள் மொய்த்துத் தேன்பருகி அனுபவிப்பதும், ஒளிரும் இதழுடையதுமாகிய பிச்சிமலர் மாலைசூடி; போரிடும் கூரிய நுனியுடைய வேலொத்த கண்கள் புகும் துவாரமுடைய காதணி, தளிரொத்த மேனி, நிலவாகிய நெற்றி, முகம், சிவப்பான குங்குமத்தால் எழுதப்பெற்றகோடுடைய பெரியமுலைக்குன்றில் முத்துமாலை, மின்னல்போலொளிரும் முத்துகளைத் தெறிப்பதுடன், இழுத்துக்கட்டப்பெற்ற கரும்புவில்லும்; வண்டுகள் தேன்பருகும் மன்மதனின் ஐவகை அம்புகளும் எனக்குத்தோன்றுமாறு என்மனத்தாமரையிலும், சிந்தாமணியாலான அழகியபெரியகோயிலிலும் இருந்து இன்புறுகிறவளே! பொன்னூசல் ஆடிஅருள்க. பார்வதி தேவியே! மூவுலகங்களையும் உடையவளே மேல் நடு கீழ் ஆகிய மூவுலகங்களையும் உயிர்கட்குத்தரும் அருள்தரு உலகம்மையே பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : நீருண்ட கார்மேகம் கூந்தலுக்கும், கூந்தலில்செருகியபிச்சிமலர் பிறைக்கும் உவமைகள்
.

6. தத்தும்தி ரைக்கடல் கிடந்(து)அலறும் வயி(று)உயர்
தடங்குடுமி இடறி உடையத்
தண்புயலின் நுண்துளி அறா(து)ஒழுகு சாரலில்
தழைமுடையும் இதணம் ஏறி
முத்தும்ப னித்தளவும் அளவென அரும்புகுறு
முளைமுறுவல் அரும்பு கொட்ட
முரு(கு)ஊறு விம்பம்தி றந்துகுற மகளிர்கரு
மோழம்உழு பொடியில் எயினர்
வித்தும்தி னைக்கதிரின் வீழ்கிளி இனம்கடியும்
மென்மொழியை யாழி சையாய்
வேட்(டு)அசுண மாப்பறவை கேட்பஅதிர் மழைவாயை
இடைபடும்சி றைஇனம் மறைய
பொத்தும்ப ணைச்சந்த னாசலத்(து) ஒருதலைவி
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரும் உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே

**கூட்டுமுறை** : இச்செய்யுளில் " தத்தும் திரைக்கடல் ......................அசுணமாப் பறவை " என்றபகுதியை; " வயிறு உயர்தடங் குடுமிஇடறித் தண்புயல்உடைய நுண்துளி அறாதுஒழுகு சாரலில், கருமோழல் உழுபொடியில் எயினர் வித்தும் தினைக்கதிரின் வீழ்கிளியை, தழைமுடையும் இதணம் ஏறி, தத்தும் திரைக்கடல் கிடந்து அலறும் முத்தும் பனித்தளவும் அளவென அரும்பு குறுமுளை முறுவல் நிலவு கொட்ட முருகுஊறு விம்பம்திறந்து குறமகளிர் இனம்கடியும் மென்மொழியை யாழ் இசையாய்க் வேட்ட அசுணமா " என்று கொண்டுகூட்டிப் பொருள்காண்க.

**குறிப்புரை** : வயிறு உயர் தடங்குடுமி இடறி= பொதிகைமலையின் நடுவிடமாகிய வயிறுஉயர்ந்து மிகப்பெரிய உச்சி இடறியதால். தண்புயல் உடைய= குளிர்ச்சியான மேகத்தின். நுண்துளி= மிகச்சிறு மழைத்துளி. கரு மோழல்= கருமையான காட்டுப்பன்றி, எயினர் வித்தும்= வேடர்கள்.விதைத்த. வீழ்= விரும்பிவரும் ,. தழை முடையும் இதணம்= தழைகளால் வேயப்பெற்ற பரண். தத்தும் திரைக்கடல்= கடலில் தாவிபாயும் அலைகள் அலறும்= வருந்தும். பனித்தளவு= குளிர்ந்த முல்லையரும்பு. அளவு=

ஒப்புமை. குறுமுளை முறுவல்= சிறிய அளவில் முளைத்த பற்கள். நிலவு= ஒளி. முருகு ஊறு விம்பம்= அழகு ஊறும் கொவ்வைக்கனியாகிய உதடு. இனம்கடியும்= கிளிக்கூட்டத்தை ஓட்டும். வேட்ட= விரும்பிய. அதிர்மழை வாயை இடைபடும்= கொட்டும் மழைக்கண் அகப்பட்ட . சிறை இனம் மறைய= பறவை இனங்கள் ஒளிந்துகொள்ள. பொத்தும் பணைச் சந்தனாசலம்= பறவைகளைக் காக்கும் சந்தன மரங்கள்நிறைந்த பொதிகை மலை.

**பொழிப்புரை** : பொதிகை மலையின் நடுவிடமாகிய வயிறுஉயர்ந்ததால், அவ்வுயரமான உச்சி இடற, வானில் மிதந்துசெல்லும் குளிர்ச்சியான மேகத்தின் நுண்துளிகள் இடைவிடாது ஒழுகும் சாரலில், கருமையான நிறமுடைய காட்டுப்பன்றிகள் நன்கு உழுத நிலத்தில், மலைவாழ்வேடர்கள் விதைத்த தினைப்பயிர் கதிர்ஈன, அக்கதிர்களை விரும்பிவந்த கிளிகளை, தழைபரப்பிய பரண்களில் இருந்துகொண்டு; தாவும் அலைகடல்முத்தையும், குளிர்ச்சியான முல்லைஅரும்பையும் ஒத்த சிறுபற்களுடைய குறமகளிர் ஓட்டும் குரலை யாழிசையாக அசுணமா கேட்டுமகிழவும், கனத்த மழையில் அகப்பட்ட பறவைகள் ஒளிந்துகொள்ளவும், மலையை மூடிமறைக்கும் சந்தனமரங்களுடைய பொதிகைத் தலைவியே! பொன்னூசல் ஆடியருள்க.! பார்வதி தேவியே! மூவுலகங்களையும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய உலகங்களை உயிர்கட்குத்தரும் அருள்தரு உலகம்மையே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : வேடர் இசைக்கும் இசையில் மகிழும் அசுணமாவினை, வேடர்கள் தமது இசையைவிட்டுக் கொடூரமா இசைத்தால் அதுகேட்ட அசுணமா மயங்கி விழும். அவர்கள் அதனை எளிதில் பிடித்துக்கொள்வர் என்பது இலக்கியவழக்கு. இதனைப் பண்ணறிமா என்றும் குறிப்பர்.

7. தீட்டுமுனை வயிர்உளி வாய்இட்ட பத்துத்தி
ருத்தும்ஒரு கோமே தகச்
செம்மணிப் பலகைகீழ் இட்டுவித்(து)உருமச்
செழுங்கால் புனைந்து திசைவேர்
ஓட்டும்இருள் ஓட்டெழவெ யில்கற்றை விட்டுவிட்டு)
உமிழ்மணிப் பலகை மேல்இட்(டு)
ஒளிர்புருட ராகமுழு நீலஉரு வைத்துவை
டூரிய வடிம்(பு)அ ழுத்தி
ஈட்டுசுடர் வயிரம்து ளைத்துவட நாற்றிமுத்(து
இன்மணிவி தானம் ஆக்கி
இத்தகைய கயிற்றுமணி ஊசல்நடு மரகதம்
இருந்(து)ஆடு கின்ற(து) என்னப்
பூட்டுமணி வார்முகை கோட்(டு)இளைய போட்டுமயில்
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனித்தரும் உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : முனை தீட்டு வயிர்= முனைதீட்டப்பெற்ற கூர்மையான உளிவாய் இட்ட= உளியால் செதுக்கிய. பத்துத் திருத்தும்= மேலிடம் திருத்திய. கோமேதகச் செம்மணி= கோமேதகமாகிய செம்மணி. வித்து உருமச்செழுங்கால்= பவளத்தாலான வலிமையானகால். திசைவேர் ஓட்டும்= திசைஎங்கும் பரவிய. இருள் ஓட்டெழ=இருள் ஓட. வெயில் கற்றை= ஒளிக்கற்றையை. விட்டுவிட்டு= வீசிவீச - இடைவிடது உமிழ்ந்து. மணிப்பலகை= வைரத்தாலான பலகை. உரு= நிறம். வடிம்பு= நுனி. வடம் நாற்றி= கயிறாகத் தொங்கவிட்டு. மணி விதானம்= நவமணிகளால் ஆன மேற்கட்டி. மரகதம்= மரகதமணி. மணிவார்மோட்டுப் பூட்டுக் கோட்டு இளையமுகை மயில்= அழகிய கச்சுக்கட்டிய உச்சியுடைய இளமுலைகளுடைய மயிலே.

**பொழிப்புரை** : முனைதீட்டிய கூர்மையான உளியால் செதுக்கப்பெற்றுத் திருந்திய மேலிடமுடைய கோமேதகச்செம்மணிப் பலகையின் மேல், நாற்றிசைகளிலும் பரவிய இருளோடுமாறு ஒளிக்கற்றை உமிழும் வைரத்தாலான பலகை இட்டு, அதன்கீழ்பவளத்ததாலான வலிமையான கால்கள் அமைத்து, ஒளிரும் புருடராகம், அடர்நீலநிறமுடைய மணிகளை அப்பலகையின் விளிம்பில்பதித்து, மிகவும் ஒளிரும் வயிரத்தைத் துளைத்த துளைகளில் செலுத்திக்கோத்த கயிற்றில் ஊஞ்சல் பலகையைக்கட்டித்தொங்கவிட்ட அழகியஊஞ்சல்நடுவில் அமர்ந்து, அழகிய கச்சுக்கட்டிய உச்சியையுடைய இளமுலை கொண்ட மயிலே!

பொன்னூசல் ஆடியருள்க! பார்வதி தேவியே! மூவுலகங்களையும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய மூவுலகங்களையும் உயிர்களுக்குத் தருகின்றவளே! பொன்னூசல் ஆடியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி.

8. ஒழுக்கும்கொ ழுங்கற்றை முழுநிலவு புடைபரந்(து)
ஒழுகிநின்று அசைய அசைய
ஒள்ளிய வெள்ளிவெண் பருமுத்த ஊசலை
உதைத்துநீ ஆட்டு வதுபோல்
முழுக்கும் தடங்கரை உடைத்(து)எறி பயோத்ததி
முகட்டில்சு ருட்டி வாங்கி
முறிபடுநெ டுந்துறைக் கல்லோலம் மீமிசையின்
முதிரச்சி வந்து நாட்டி
மழுங்(கு)இல் சுடர்ப்பவள மழலைவாய் இளவரச
மரகதப் பச்சை வருண
மடஅனப் பார்ப்(பு)இருந்(து) ஆடுவதை ஏய்ப்பமது
வாம்பதும அடிப ணிந்தோர்
புழுக்கும்க ருங்குழிப் புகுதாமல் ஆளுவாய்
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரும் உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : ஒள்ளிய வெள்ளி வெண்பருமுத்த ஊசலை உதைத்து அசையஅசைய நீ ஆட்டுவது போல், கொழுங்கற்றை ஒழுக்கும் முழுநிலவு ஒழுகிப் புடைபரந்து நின்று முழுக்கும் தடங்கரைஉடைத்து எறி பயோததி என்று கூட்டுக. ஒள்ளிய வெள்ளி வெண் பருமுத்த ஊசல்= ஒளிபொருந்திய வெண்மையான பருத்த முத்தினால் ஆன ஊஞ்சல். உதைத்து= தரையில் உதைத்து. அசைய அசைய= மேன்மேலும் அது ஆட ஆட. கொழுங்கற்றை ஒழுக்கும்= மிக்கஒளிக்கற்றையை வெளியிடும். முழுநிலவு= முழுமையானநிலவின் ஒளி. ஒழுகிப் புடைபரந்து= வெளிப்பட்டுப் பக்கங்களில் பரவி. தடங்கரைமுழுக்கும்= பெரியகரை முழுவதையும். உடைத்து எறி பயோததி= உடைத்து அலைவீசும் பாற்கடல். முகட்டில் சுருட்டி வாங்கி= அலைஉச்சி சுருண்டு பின்வாங்கி. முறிபடு கல்லோலம் மீமிசையின் முதிர= அழியும் அலை மேன்மேலும் முதிர்ந்து. சிவந்து நாட்டி= சினந்துமோதி ஓய. மதுவாம் பதும அடிபணிந்தோர் புழுங்கும் கருங்குழி புகுதாமல் ஆளுவாய்= தேன்பொழியும் உன்தாமரைத்திருவடியை வணங்கியவர், வதைக்கும் துன்பக்குழியில் புகாகாமல் ஆள்கின்றவளே. மழுங்கு இல் சுடர்ப்பவளவாய்= குன்றாத ஒளியுடைய பவளம்போன்ற வாய். வருணம்= நிறம். மட அனப் பார்ப்பு= இளைய அன்னப்பறவையே. . .

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய வெள்ளிபோன்று வெண்மையான பருத்த முத்தினாலான ஊஞ்சலைத் தரையில் உதைத்து அது மேன்மேலும் ஆடுமாறு நீ செய்வது, மிக்கஒளிக்கற்றை வெளியிடும் முழுநிலவின் ஒளிவெளிப்பட்டுப் பக்கங்களில் பரவுவது, பாற்கடல் அலைதன் உச்சியில் சுருண்டுவீசிச் சினந்துமோதிப் , பெரியகரையைஉடைத்துப் பின்வாங்கி ஓய்வதுபோல்,; தேன்பொழியும் தாமரையாகிய உன்திருவடியை வணங்குகிறவரை, வதைக்கும்துன்பக்குழி பின்வாங்கி அழிய, அதில்விழாமல் அவர்களை ஆள்கின்றவளே! ஒளிகுன்றாத பவளம்போன்ற வாயுடன், மரகதமணியின் பசியநிறமுடைய இளைய அன்னப்பறவையே! பொன்னூசல் ஆடியருள்க பார்வதி தேவியே மூவுலகையும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய மூன்று உலகங்களையும் உயிர்கட்குத் தருகின்றவளே! பொன்னூசல் ஆடியருள்க. .

9. கங்குல்படர் ஐம்பால்மு டித்தகொந் தளம்மைக்
கரும்சுருள்ள றித்த இருளும்
கழுவும்கு ருச்சுடர்க் கருநீல முழுமணி
கவிழ்த்திட்ட கொள்ளை இருளும்
செங்குமுதம் முத்தம்கு ருத்துவிடு வெயிலும்அணி
செம்மணிகொ ழித்த வெயிலும்
சில்அமிர்த மெல்லென் குறுந்தரள நகைசிந்து

தெள்நிலவு முதிமே னியில்
தங்கும்ஒரு வெண்தரளம் விண்டகதிர் நிலவும்முன்
தருளிய பச்சை ஒளியும்
சாமளக் கோமளம ணிப்பசும் சோதியும்
தம்தமின் மயங்கி ஒளிரப்
பொங்குதமிழ் மலையப்பொ ருப்(பு)இறைவி பன்மணிப்
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரு உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே

**குறிப்புரை** : கங்குல் படர்= இருள்போல் படர்ந்த. ஐம்பால் முடித்த= ஐந்துவகையாக முடிக்கப்பெறும். மைக்கரும் சுருள்கொந்தளம் எறித்த இருள்= கருமையான மைபோன்றதும் சுருண்டதும் ஆகிய கூந்தலின் கருமையும். கழுவும் குருச்சுடர்= சாணை தீட்டப்பெற்ற ஒளிபொருந்திய. கவிழ்த்திட்ட= முழுவதும் வெளிப்படுத்திய. கொள்ளை இருள்= மிக்க இருள். செங்குமுதம் குருத்துவிடு முத்தம்= செங்குமுதமலர் ஆகிய வாய், அரும்பும் - முளைக்கும்முத்தாகிய பல். வெயில்= ஒளி. செம்மணிகொழித்த= மாணிக்கமணி வெளியிட்ட. அமிர்த மெல்என் குறுந்தரள நகை= உணவை மெல்வதற்காக சிறுமுத்தாகிய பற்கள். முதி மேனி= தளிராகிய உடம்பு. வெண்தரளம்= வெண்முத்து மாலை. முன்= முதன்மையான. தருளிய பச்சை ஒளி= உடம்பு தந்த பச்சை ஒளி. சாமளக் கோமளமணி= நீலமேகமணி மாணிக்கமணி. பசும்சோதி= மிக்கஒளி. தம்தமின்= தம்முள் . மயங்கி= ஒன்றாகக் கலந்து.

**பொழிப்புரை** : இருள்போல் படர்ந்து, ஐந்துவகையாக முடிக்கப்பெறும் கருமையான மைபோன்றதும் சுருண்டதும் ஆகிய கூந்தலின் கருநிறஒளியும், முழுமையாகச் சாணை தீட்டப்பெற்ற ஒளிபொருந்திய கருநீலமணி முழுவதும் வெளிப்படுத்திய அளவற்ற இருளும், செங்குமுதமலர்ஆகியவாய் செம்மணியாக வெளியிட்ட ஒளியும், அரும்பும் - முளைக்கும் முத்தாகிய பற்கள் வெளியிட்ட வெள்ளொளியும், சிலவகை உணவுகளை மெல்லுவதற்காகத் தோன்றிய சிறு முத்தான பற்கள் சிந்தும் ஒளியும், இளந்தளிராக விளங்கும் மேனியில் அணிந்த வெண்முத்துமாலையின் கதிரும், முதன்மையானதாய் விளங்கிய உடம்பின் பச்சைநிற ஒளியும், நீலமேகமணி மாணிக்கமணிகளாலான மாலைகள் வெளியிட்ட வளமான ஒளியும் தம்முள் கலந்து ஒளிவீச உள்ளவளே! தமிழ்பொங்கும்பொதிகைமலை இறைவியே! பொன்னூசல் ஆடியருள்க! பார்வதி தேவியே! மூவுலகங்களையும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய மூன்று உலகங்களையும் உயிர்கட்குத் தருகிறவளே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : " முத்தம் குருத்துவிடு வெயில் " என்றது உளிகள் போல் தோன்றிய முன்வாய்ப்பற்களை. " குறுந்தரள நகை " என்றது வாயின் இருபக்கங்களிலும்முளைக்கும் கோரைப்பற்களை எனலாம்.

**இலக்கணக்குறிப்பு** : வெயிலும் வெயிலும் நிலவும் நிலவும் ஒளியும் சோதியும் - எண்ணும்மைகள்.

.

10. கயலாடு தெண்திரைத் தண்துறையும் வார்கடல்
கம்பலையும் எரிய அலறிக்
கைபரந்த அசுரக் கடல்படை யொடும்கடைக்
கண்கடைக் கனல்இ லங்க
மயலாடு கண்டகநி சும்பாசு ரன்தமையன்
மறலிகண் முகிழ்ப்ப மறலி
வெஞ்சினம் உரைத்துமுழு வெஞ்சமர்வி ளைத்(து)அமர்
வழங்கக் குழங்கன் மாலைப்
பெயலாடு கொண்டல்க ரும்குழல் சூலினிப்
பெண்ணைக்க டைக்க ணித்துப்
பேரமர் உடற்றிஇ வர்க்கொல்எ னவிடுத்துப்
பெயர்த்(து)ஆயி ரம்ப ருவம்ஓர்
புயலாடு தண்டலையின் மணிஊசல் ஆடுவாய்
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைமும்மை அவனிதரு உலகம்மை

பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : தெண்திரைத் தண்துறை= தெளிந்த அலைகளுடைய தண்ணிய பொருநைத்துறை. வார்கடல்= நீண்டகடல். கம்பலை= ஆரவாரம். எரிய= பொறாமைப்பட. கைபரந்த= வலிமைமிக்க. அசுரக்கடல் படையொடும்= கடல்போன்ற அசுரர் படையுடன். கடைக்கண் கடைக்கனல் இலங்க= கடைக்கண்ணில் ஊழித்தீ விளங்க. மயல் ஆடு= வஞ்சனை விளங்கும். கண்டக நிம்பாசுரன் தமையன்= அசுரனாகிய நிம்பாசுரனுக்குத் தமையனாகிய சும்பன். மறலிகண் முகிழ்ப்ப= எமன்முன் போர்க்குத்தோன்ற. மறலி வெஞ்சினம் உரைத்து= எமன்சபதம்கூறி. அமர்வழங்க= போரிட. குழங்கன்= கழுத்தில்வெற்றி மாலை யணிந்தவள். மாலைப்பெயலொடு கொண்டல் கரும்குழல் சூலினிப் பெண்ணை= மாலைநேரத்து மழைபொழியும் கார்மேகம்போன்ற கருங்குழலுடையவளும். சூலம் ஏந்தியவளும்ஆகிய காளி / துர்க்கை. கடைக்கணித்து= பார்த்து. பேரமர் உடற்றி இவர்க் கொல்= பெரும்போரிட்டு இவரைக் கொல்க. விடுத்து= அனுப்பி. பெயர்த்தும் ஓர் ஆயிரம் பருவம்= மீண்டும் ஆயிரம் பருவகாலம். புயலாடு தண்டலை= மேகம் தவழும் சோலை. மணிஊசல்= அழகிய ஊஞ்சல்.

**பொழிப்புரை** : தெளிந்த அலைகளுடைய தண்ணிய பொருநைத்துறை, நீண்ட கடல் ஆகியவற்றின் ஆரவாரம் பொறாமைப்பட, வலிமைமிக்க கடல்போன்ற அசுரர்படையுடன், கடைக்கண்ணில் ஊழித்தீ விளங்க வந்த அசுரனாகிய நிம்பாசுரனுக்குத் தமையனாகிய சும்பன் என்பவன், எமனுடன் போரிடத்தோன்ற, அவனுடன் எமன் சபதம்கூறிப்போரிட, அந்நிலையில் கழுத்தில் வெற்றிமாலையணிந்தவளும், மாலைநேர மழைபொழியும் கார்மேகம்போன்ற கூந்தலுடையவளும், சூலம்ஏந்தியவளும் ஆகிய காளி / துர்க்கையைப் பார்த்துப் பெரும்போரிட்டு இவரைக் கொல்கஎன்று அனுப்பிவிட்டு, மீண்டும் ஓர்ஆயிரம் பருவகாலம் மேகம்தவழும் சோலையில் அழகிய ஊஞ்சலாடுகிறவளே! பொன்னூசல் ஆடியருள்க. பார்வதி தேவியே! மூவுலகும் உடையவளே! மேல் நடு கீழ் ஆகிய் மூன்று உலகங்களையும் உயிர்கட்குத் தருகிறவளே! பொன்னூசல் ஆடியருள்க..

**விளக்கம்** : அசுரர்களாகிய சும்பன் நிசும்பன் இருவரும் உலகவர்க்குக் கேடுசெய்யும் அண்ணன் தம்பியர் என்பது புராணச்செய்தி. இவர்களைச் சும்பநிசும்பர் என்பர். இவ்விருவருள் சும்பனை, நிசும்பாசுரன் தமையன் என்று குறித்தார்.

11. மாதுங்க கனகாசலக் காமுகத் தலைவன்
மருள்கதுப்(பு) இருள்ப ழுக்கும்
மழவையில் செம்பொற்கி ரீடமும் பச்சிள
வரைத்தோளும் ஊசல்நி கர்அரும்
காதும்அம்தி ருக்குழையும் இருவிழியும் ஒருபசும்
கவின்ஒழுகு குமிழும் உமிழும்
கதிர்வதன விம்பமும் புதியஇதழ் விம்பமும்
கரமல ரும்மு ருகும்
தாதும்த தும்புசெங் கழுநீரும் மின்னுமுக
தரிசமும் சிற்(று)உ தரபந்
தனமும்பொ லம்பட்டு மேககலையும் நூபுரச்
சரணம்எனச் சிந்தை கொளஎப்
போதும்சி லாலிகிதம் என்னப்பொ றித்தமயில்
பொன்னூசல் ஆடி யருளே
புவனைதிரி புரைஅவனி மும்மைதரும் உலகம்மை
பொன்னூசல் ஆடி யருளே.

**குறிப்புரை** : மாதுங்க= மிகஉயர்ந்த, கனகாசலம்= பொன்மலை - மேருமலை. கா முகன்= காக்கும் முதன்மையுடையன் / நாகரிகன். மருள்= வியக்கும். கதுப்பு இருள் பழுக்கும். மழவையில்= கன்னம்வரை கருமையான கூந்தலில். பச்சிள வரை= பசிய இளைய மூங்கில். அரும் மேலான. குமிழ்= மூக்குஆகிய குமிழமலர். வதன விம்பம்= முகஒளி. இதழ் விம்பம்= உதடாகிய கொவ்வைக்கனி. முருகும்தாதும் ததும்பும் செங்கழுநீரும்= மணமும் தேனும் பொருந்திய செங்கழுநீர் மலராகியவாய். முகதரிசம்= ஒளிரும் முகக்காட்சி. சிற்று உதர பந்தனம்= சிறுத்த இடையில் கட்டியகச்சை. பொலம்பட்டு= பொன்னாலான

பட்டாடை. மேகலை= இடையணி. நூபுரச்சரணம்= சிலம்பணிந்த திருவடி. சிலாலிகிதம். சிற்பம். பொறித்த= அழுந்திநின்ற.

**பொழிப்புரை :** மிகஉயர்ந்த பொன்மலையாகிய மேருமலையில் உள்ள காக்கும்முதன்மை யுடையவனாகிய / நாகரிகனாகிய சிவபிரான் வியக்குமாறு கன்னம்வரை படர்ந்தகூந்தலில் சிறந்த பொன்னாலான திருமுடியும், பசுமையும் இளமையுமுடைய மூங்கில்போன்ற தோளும், ஊசல்போல் முன்னும்பின்னும் ஆடும் மேலானகுழையணிந்த காதும், இருவிழிகளும், பசியஅழகொழுகும் குமிழம் பூவாகிய மூக்கும், ஒளிஉமிழும் திருமுகத்தின் ஒளியும், புதிய கொவ்வைக்கனியாகிய இதழும், கையாகிய தாமரைமலரும், மணமும் பூந்தாதும் ததும்புகிற செங்கழுநீராகிய வாயும், ஒளிரும் திருமுகத் தோற்றமும், சிறுத்தஇடையில் கட்டியகச்சையும், பொன்பட்டாடையும், மேகலையணியும், சிலம்பணிந்த திருவடியும் ஆகியவற்றை என்மனத்தில் எப்போதும் சிற்பமாகப் பொறித்த - இடம்பெற்ற மயிலே! பொன்னூசல் ஆடியருள்க! பார்வதிதேவியே!, முப்புரங்களைஉடையவளே!, மேல் நடு கீழ்ஆகிய மூன்று உலகையும் உயிர்கட்குத் தருகின்றவளே பொன்னூசல் ஆடியருள்க!

**விளக்கம் :** தன்னையடைந்த - வீடுபேறு பெற்ற உயிர்கள், இனிப்பிறவாமல் காக்கும் முதன்மையன் சிவபிரானேயாதலின் அவனைக் கா முகன் என்றார்.

காமுகன் என்றசொல், நாகரிகன் என்றும்பொருள்தரும். நாகரிகன் யார்? என்றால் திருவள்ளுவர்,

" பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர் " ( 580 )

என்று கூறுவார். நஞ்சுண்டவர்களாக; சிவபிரான், அப்பரடிகள், சாக்ரடீசு ஆகிய மூவரைக்குறிப்போம்

" சாக்ரடீசு நஞ்சுண்டு உடனே அமரரானானவர் ".

" வஞ்சனைப் பாற்சோறு ஆக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சு அமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே " ( திரு. 4. நனிபள்ளி. 5 )

அப்பரடிகள் சமணத்தில் இருந்துபோது தமக்கு நிகழ்ந்ததை இவ்வாறு கூறுகிறார். இதன்பின்னும் அடிகள் நெடுங்காலம்வாழ்ந்தார். இவர் இறையடிசேர்ந்ததை

" சங்கைஒன்று இன்றியே தேவர் வேண்டச்
சமுத்திரத்தின் நஞ்சுஉண்டு சாவா மூவாச்
சிங்கமே உன்னடிக்கே போது கின்றேன்
திருப்புகலூர் மேவிய தேவ தேவே " ( திரு. 6 புகலூர். 2 )

என்பதுஇவர் இறைவன் திருவடியடைந்தது குறிக்கும் அகச்சான்று. அப்போதுஇவர் வயது 81 என்பதை, " அப்பருக்கு எண்பத்தொன்று " என்று தொடங்கும் பழையவெண்பா கூறுகிறது.

சிவபரம்பொருள் ஒருவனே நஞ்சுண்டும் சாவாதவன் என்று அப்பரடிகள் மட்டுமன்றி இளங்கோவடிகள் பூம்புகாரிலிருந்த சிவபிரான் கோயிலையும், சிவபிரானையும்,

" பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும் " ( இந்திரவிழா எடுத்த காதை)

" விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுஉண்டு இருந்து அருள் செய்குவாய் " ( வேட்டுவ வரி )

என்பார் எனவே சிவபிரானைக் கா முகன் - நாகரிகன் என்ற அகராதிப்பொருளும் சாலப்பொருந்தும்.

திருச்சிற்றம்பலம்.